

தங்கரதத்தில் அருள்மிகு சின்னக்குமார்

# பழனி முருகன் கோவில் வழிபாடும் திருவிழாக்களும்

முனைவர். பெ. சுப்பிரமணியன்
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை – ஆய்வு மையம்
அருள்மிகு பழனியாண்டவர் கலை, பண்பாட்டுக் கல்லூரி,
பழனி – 624 601.

ராம்குமார் பதிப்பகர்
லட்சுமிபுரம், பழனி, தமிழ்நாடு.

**"This book is Published with financial assistance for Religious Publications of Thirumala Tirupati Devasthanams under their Aid to Authors scheme"**

**The author of the book is alone liable for any legal action at his own risk and responsibility in case of disputes or Criticism if any arises about the book.**

---

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the book | : | **Palani Murugan kovil Vazhipadum Thiruvizhakkalum** |
| Author | : | **Dr. P.Subramanian,**<br>Reader,<br>P.G. & Research Department of Tamil,<br>Arulmigu Palani Andavar College of Arts & Culture, PALANI - 624 601. |
| Publisher | : | **Ramkumar Pathippakam,**<br>126 - A, College Road,<br>Lakshimi Puram, PALANI - 624 601. |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | October, 2004. |
| Paper used | : | Maplitho. 18.6 kg. |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing type used | : | 12 point |
| No of Pages | : | VIII + 119 |
| No of Copies | : | 1000 |
| Price | : | Rs. 60/- |
| Printed by | : | **Modern Offset Printers,**<br>57, Anna Nagar, PALANI - 624 602 TamilNadu |
| Subject | : | **Temple Study, Pujas and festivals of Palani murugan Temple** |

# முன்னுரை

பழனி ஆறுபடைவீடுகளுள் மூன்றாவது படைவீடாகத் திகழ்ந்து வருகின்றது. பழனி மலைக் கோவிலில் முருகப் பெருமான் ஞான தண்டாயுதபாணியாக எழுந்தருளி அடியார்களுக்கு அருள்பாலித்து வருகின்றார். முருகப் பெருமானின் மேற்கு நோக்கிய திருக்கோலமும், கனிவாய் முறுவலும், கண்டு வழிபடவரும் அடியார்களின் மனக் கவலைகளையும், குறைகளையும் போக்குகின்றது.

'வேண்டுவோர்க்கு வேண்டுவன நல்குபவர்' முருகப் பெருமான் என்று திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகின்றது. வழிபட வரும் அடியார்களின் வேண்டுதல்களை நிறைவேற்றி, வேண்டும் வரங்களை அளிக்கும் 'வரம் தரும் வள்ளலாகப்' பழனிமலையில் முருகப்பெருமான் எழுந்தருளியுள்ளார். தமிழகத்தில் மிகச்சிறந்த வேண்டுதல் தலமாகப் பழனி முருகன் கோவில் விளங்கி வருகின்றது.

இந்தியாவிலுள்ள புகழ்பெற்ற புண்ணியத் தலங்களுள் (Pilgrim centres) பழனி முருகன் கோவிலும் ஒன்றாகும். இந்திய நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து திரளான பக்தர்கள் பழனி முருகனை வழிபட வருகின்றார்கள். குறிப்பாக கேரள மாநிலத்தைச் சேர்ந்த மலையாளப் பக்தர்கள் நாள்தோறும் கூட்டம் கூட்டமாக வந்து பழனி முருகனை வழிபடுவதைக் காணலாம்.

பக்தர்கள் கூட்டம் கூட்டமாக வந்து வழிபடுவதால், பழனி முருகன் கோவில் நாள்தோறும் விழாககோலம் கொண்டிருக்கும். குடும்பத்தினருடனும், உற்றார் உறவினர்களுடனும் சேர்ந்து வந்து, பழனி முருகனை வழிபடுவதைப் பக்தர்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர். குடும்ப உறவுகளையும், சமூக உறவுகளையும் வலுப்படுத்தும் வகையில் பழனி முருகன் கோவில் வழிபாடு அமைகின்றது.

முருக பக்தர்கள் தங்களுக்குப் பிடித்தமான பொருட்களைக் காணிக்கையாக அளித்தும், உண்டியலில் காசு செலுத்தியும் வழிபடு கின்றனர்.

மாதந்தோறும் வரும் கார்த்திகை நாள் பழனி முருகன் கோவிலில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டுவருகின்றது. வேண்டிக் கொண்ட

பக்தர்கள் கார்த்திகை விரதம் இருக்கின்றனர். கார்த்திகை நாளன்று திரளான பக்தர்கள் வந்து பழனி முருகனை வழிபடுகின்றனர். பழனி முருகனை வழிபட்ட பிறகு, பக்தர்கள் பஞ்சாமிர்தம், விபூதி ஆகிய பிரசாதங்களைப் பெற்றுச் செல்கின்றனர். தங்களது ஊருக்குச் சென்று பஞ்சாமிர்தத்தையும், விபூதியையும் பலருக்கும் பகிர்ந்து கொடுக்கின்றனர்.

அக்கினி நட்சத்திர விழா, கந்தர் சஷ்டி விழா, திருக்கார்த்திகை விழா, தைப்பூசத் திருவிழா, பங்குனி உத்திர விழா ஆகிய விழாக்கள் இத்திருக்கோவிலில் கொண்டாடப்பெறும் பெருவிழாக்கள்.

அக்கினி நட்சத்திரவிழா, தைப்பூச விழா, பங்குனி உத்திர விழா ஆகிய விழாக்களின் போது பக்தர்கள் காவடி எடுத்துவந்து காணிக்கை செலுத்தி வழிபடுகின்றனர். பழனி முருகன் கோவில் வழிபாட்டில் முக்கிய இடம் பெறுவது காவடிக் காணிக்கையாகும். தீர்த்தக் காவடி, இளநீர்க் காவடி, தயிர்க் காவடி, சர்க்கரைக் காவடி, பால் காவடி, பன்னீர்க் காவடி முதலிய காவடிகளைப் பக்தர்கள் எடுத்துக் கொண்டு வருகின்றனர்.

மணங்கமழ் தெய்வமான முருகப் பெருமானுக்குப் பக்தர்கள், மணம் வீசும் மலர்களைப் பூக்குடலையிலிட்டு பூக்காவடிகளைக் கொண்டு வருகின்றனர். வேண்டிக் கொண்ட பக்தர்கள் தாழம்பூக் காவடி, வெட்டி வேர்க் காவடி, சந்தனக் காவடி ஆகிய மணம் வீசும் காவடிகளையும் கொண்டு வருகின்றனர்.

மேற்கூறிய மூன்று பெரு விழாக்களின் போது காவடி எடுத்து வரும் பக்தர்கள் பழனிமுருகப் பெருமான் மீது காவடிப்பாடல்களைப் பாடிக்கொண்டு வருகின்றனர். இக்காவடிப் பாடல்கள் குழுப் பாடல்களாகும்.

தைப்பூசத் திருவிழாவின்போது பாதயாத்திரையாக வரும் பக்தர்கள் கூட்டாகச் சேர்ந்து, பழனி முருகன் மீது பாடல்களைப் பாடிக் கொண்டு வருகின்றனர். பழனி முருகன் கோவில் வழிபாட்டில் பாட்டு வழிபாட்டு முறை முக்கிய இடம் வகிக்கின்றது. வாய்மொழி மரபு (Oral Tradition) பழனி முருகன் கோவில் திருவிழாக் கட்டமைப்பில், பிரிக்க முடியாதவாறு பின்னிப்பிணைந்துள்ளது.

நாட்டுப்புற இசை, நாட்டுப்புற ஆட்டங்கள் ஆகியனவும் பழனி

முருகன் கோவில் திருவிழாக்களில் செல்வாக்குப் பெற்றுத் திகழ்கின்றன. கரகாட்டம், காவடியாட்டம், வேலனாட்டம், சக்கையாட்டம், சாமியாட்டம், தப்பாட்டம் முதலிய நாட்டுப்புற ஆட்டங்களை அக்கினி நட்சத்திரவிழா, தைப்பூச விழா, பங்குனி உத்திரவிழா ஆகிய விழாக்களின் போது காணலாம். நாட்டுப்புறக் கலைகளை வளர்க்கும் மையமாகப் பழனி முருகன் கோவில் திருவிழாக்கள் விளங்கி வருகின்றன.

திருவிழாக் காலங்களில் பக்தர்கள் மலைப்படிகளில், நெல், சோளம், கம்பு முதலிய தானியங்களையும், பாசிப்பயறு, தட்டைப்பயறு, மொச்சை முதலிய பயறு வகைகளையும் சூறைவிட்டுச் செல்கின்றனர். தானியங்கள், பயறு வகைகள் மட்டுமல்லாது, திருவிழாக்களின் போது பக்தர்கள் சேவல்களையும், பசு மாடுகளையும், பழனி முருகப்பெருமானுக்குக் காணிக்கையாக அளிக்கின்றனர்.

திருவிழாக்களின் போது அடியார்கள் பல் அலகு குத்திக்கொண்டு வருகின்றனர். சாட்டையாலும், பிரம்பாலும் அடித்துக் கொண்டு சாமியாட்டம் ஆடும் அடியார்களைக் காணலாம்.

பழனி முருகன் கோவிலுக்கு வரும் அடியார்கள் கையில் வேல், பிரம்பு, மயில்பீலி ஆகியனவற்றைக் கொண்டு வருகின்றனர்.

மிகப் பழமையான முருகவழிபாட்டு முறைகளைப் பழனி முருகன் கோவில் திருவிழாக்களின் போது காணலாம். திருவிழாக்களின்போது இந்திய நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து, திரளான பக்தர்கள் ஒன்றாகக் கூடுவதால் பழனி முருகன் கோவில் திருவிழாக்கள் சமுதாய ஒருமைப்பாட்டுணர்வு வளரத் துணைபுரிகின்றது.

பழனியாண்டவர்மீது, பல்வேறு காலங்களில் வாழ்ந்த தமிழ்ப்புலவர்கள், நூற்றுக்கும் மேற்பட்ட பக்திச் சிற்றிலக்கியங்களைப் பாடியுள்ளார்கள். அருளாளர் அருணகிரிநாதர் ஆவினன் குடி முருகன் மீதும், பழனி முருகன் மீதும் 97 திருப்புகழ்ப் பாடல்களை அருளியுள்ளார். அருணகிரிநாதர் சில காலம் பழனித்தலத்தில் தங்கியிருந்து பாடல்களைப் பாடினார் என்பதை அவரது திருப்புகழ்ப் பாடல்களின் மூலம் அறிய முடிகின்றது. வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள், பழனி முருகன் பேரில் 'பழனித்திருவாயிரம்' பாடியுள்ளார். மாம்பழக் கவிச்சிங்க நாவலர்

பழனி முருகன் மீது சில சிற்றிலக்கிய வகைகளைப் பாடியுள்ளார்.

பழனி முருகன் கோவில் வழிபாட்டு முறைகள், கொண்டாடப்படும் திருவிழாக்கள் பற்றி அறிமுகம் செய்யும் வகையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. தொடர்ந்து பல ஆண்டுகள் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வு முறைகள் மூலம் இந்நூலுக்கு வேண்டிய தரவுகள் திரட்டப்பட்டன. களஆய்வின் போது பூசைகள், திருவிழாக்கள் தொடர்பான தகவல்களை அளித்த தகவலாளிகளுக்கு எனது இனிய நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

சமய நூல்களை வெளியிடும் திட்டத்தின்கீழ் இந்நூலை அச்சிட்டு வெளியிட நிதி உதவி அளித்த திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாகத்திற்கு எனது இனிய நன்றி உரித்தாகுக.

இந்நூலை வெளியிடுவதற்கு அனுமதி நல்கியதோடு மட்டுமல்லாமல், தமிழாராய்ச்சிக்கு முழு ஒத்துழைப்பு அளித்து வரும **அருள்மிகு பழனியாண்டவர் கலை, பண்பாட்டுக் கல்லூரி முதல்வர், முனைவர், எஸ். ஜெயபாலன்** எம்.காம்.,எம்.ஃபில்., பிஎச்.டி., அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இந்நூல் சிறப்பாக அமையத் தேவையான ஆலோசனைகளை வழங்கிய அருள்மிகு பழனியாண்டவர் கலை, பண்பாட்டுக் கல்லூரி, தமிழ்த்துறை - ஆய்வுமைய, முதுநிலை விரிவுரையாளர்கள் திரு. க. கிருஷ்ணமூர்த்தி எம்.ஏ., எம்.ஃபில்., அவர்களுக்கும், **முனைவர். ரா. செயராமன் எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., அவர்களுக்கும்** எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். அட்டைப் படத்திற்கு நிழற்படங்களை அளித்து உதவிய, பழனி நேஷனல் ஃபோட்டோ ஸ்டுடியோ உரிமையாளர் திரு. கு. ரவிச்சந்திரன் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**இந்நூலை மிகச் செம்மை**யாக அச்சிட்டு அளித்த பழனி மாடர்ன் ஆப்செட் அச்சகத்தாருக்கு எனது இனிய நன்றி.

18, அக்டோபர், 2004 **பெ. சுப்பிரமணியன்**
பழனி.

# பொருளடக்கம்



# 1. பழனி முருகன் கோவிலும் அதன் சார்புக் கோவில்களும்

அழகிய பழனிக் குன்றின்மீது முருகப்பெருமான் ஞான தண்டாயுதபாணியாக எழுந்தருளி அடியார்களுக்கு அருள் பாலித்து வருகின்றார். பழனி முருகன் கோவில் தமிழகத்திலுள்ள முருகன் கோவில்களுள் முதன்மைக் கோவிலாக விளங்கி வருகின்றது. இன்று, இந்தியாவிலுள்ள பல மாநில மக்களும் வந்து பழனி முருகனை வழிபடு கின்றனர். "எல்லா இந்துக்களும் கருத்தொருமித்து வழிபடும் கோயில்களில் பழனிக் கோயிலும் ஒன்றாகும். சைவரைப்போல் வைணவரும் இந்தத்தலத்திற்கு யாத்திரிகராக வருகின்றார்கள்" [1] என்று பழனிக்கோவிலின் சிறப்பினை பி.ஸ்ரீ. எடுத்துரைக்கின்றார்.

அழகு உறையும் இடங்களிலெல்லாம் முருகப்பெருமான் உறைவதாகப் பழந்தமிழர்கள் கண்டு வழிபட்டனர். 'முருகு' என்ற சொல்லுக்கு அழகு, இளமை, இனிமை எனப் பல பொருள்கள் உள்ளன என்று கூறுவர்.

பழனி மலைமீது உள்ள அழகிய முருகன் கோவிலைச் சேர மன்னன் கட்டியதாகப் பழனித் தலபுராணம் கூறுகின்றது.

**சேரர்கோனியற்று மாதவச் செழுந்திரட்சியோ**
**வாரணத்தி னந்தமோ வெம்மண்ணலன்பர் சிந்தையோ**
**தாரகத்தினுட் பொருட்டயங்கி யோங்கு குடிலையின்**
**பூரணத்ததோ மயன் புனைந்து தந்த கோயில்** [2]

என்று சேரமன்னனின் வேண்டுகோளுக்கிணங்க பழனி மலைமீது முருகன் கோவிலை மயன் வடிவமைத்தான் என்கிறது பழனித் தலபுராணம்.

**கண்ட கண்களோடுளங்களுங் கவர்ந்து கொண்டுமூ**
**தண்ட ரண்ட கூடமும் பரந்து பாரடங்கலுங்**
**கொண்டிலங்கு சோதிவீசு கோயிலுட் செவ்வேற் செவேள்**
**பண்டை மா மறைக்குணின்ற பரிசு காட்டி நின்றனன்** [3]

என்று வழிபடுகின்ற அடியார்களின் கண்களையும், உள்ளங்களையும் ஈர்ப்பவர் பழனி முருகன் என்று கூறுகின்றது பழனித் தல புராணம் அண்டங்களிலும், வெளியண்டங்களிலும் பரவி, ஒளிவீசுகின்ற கோவிலினுள் முருகப் பெருமான் வேலாயுதத்துடன் எழுந்தருளியுள்ளார்.

பழனி முருகனின் எழில் தோற்றம் பழமையாகிய வேதத்தினுள்ளே நின்ற திருக்கோலத்தைக் காட்டுகின்றது என்று போற்றுகின்றார் நூலாசிரியர்.[1]

**"போற்றினோர்க்கும் பூசைதான் புரிந்துளோர்க்கும் பொங்குசீர்**[2]
**சாற்றினோர்க்கு மாறெழுத்தகந்தரித்து ளோர்க்கும் வெண்**[3]
**ணீற்றினோர்க்கு நெஞ்சுளே நினைந்துளோர்க்கு நீபனோன்**
**பாற்றினோர்க்கு நோக்கருள் கரந்தனிக்கு மேல் வையில்"** [4]

என்று முருகப்பெருமானைப் போற்றி, வழிபடும் அடியார்களுக்கும், சடக்கர மந்திரத்தைத் தியானித்தவர்க்கும், திருநீறு அணிந்து உள்ளம் உருகி நினைந்து வழிபடுவோருக்கும், முருகப் பெருமானை நினைத்து நோன்பு மேற்கொண்டவர்களுக்கும் பழனி முருகன் அருள்மழை பொழிவார் என்கிறார் தலபுராண ஆசிரியர்.

## கொங்குநாடும் பழனியும்

பழனியாண்டவர் கோவில் எனக் கூறப்படும் கோவிலோடு தொடர்புடைய பழனி, பழங்காலத்தில் கொங்குநாட்டின் தெற்கு எல்லையாக விளங்கி இருக்கின்றது. கொங்கு மண்டல சதகப்பாடல் இதனை

**"வடக்குப் பெரும்பாலை வைகாவூர் தெற்கு**
**குடக்குப் பொருப்பு வெள்ளிக்குன்று – கிடக்கும்**
**களித் தண்டலைமேவு காவிரிசூழ் நாட்டுக்**
**குளித் தண்டலையளவு கொங்கு" [5]**

என்று கூறுகின்றது.

**"மதிற்கரை கீட்டிசை தெற்குப்பழனி மதிகுடக்குக்**
**கதித்துள வெள்ளை மலைபெரும் பாலைகளின் வடக்கு**
**விதித்துள நான்கெல்லை சூழ வளமுற்றுமேவி விண்ணோர்**
**மதித்திட வாழ்வு தழைத்திடு நீள்கொங்கு மண்டலமே" [6]**

என்ற இந்த கொங்கு மண்டல சதகப்பாடலும் பழனி, கொங்குநாட்டின் தெற்கு எல்லையாக அமைந்திருந்த செய்தியினைக் குறிப்பிடுகின்றது.

**"வடபுறம் மறம் சோகரமலை**
**மதுகரைக்கு மேற்கு**
**வராஹகிரிக்கு வடக்கு**
**வெள்ளிமலைக்குக் கிழக்கு " [7]**

என்று வேணா உடையாக்கவுண்டர் கைப்பிரதி, கொங்குநாட்டின் எல்லைகளைக் குறிப்பிடும்பொழுது பழனியை அதன் தெற்கு எல்லை என்று கூறுகின்றது.

"பொதினி (பழனி) மலையில் உள்ள முருகப் பெருமான் கோவிலும் மிகப் பழமையானது. பழனி மலைகள் சங்க காலத்தில் கொங்குநாட்டின் தென்பகுதியைச் சேர்ந்திருந்தன " [8] என்று கூறுகின்றார், மயிலை, சீனி.வேங்கடசாமி.

மேற்கூறிய சான்றுகளிலிருந்து பழனி, கொங்குநாட்டின் தெற்கு எல்லையாக விளங்கி வந்ததை அறிய முடிகின்றது. இப்பகுதி திண்டுக்கல் மாவட்டத்துடன் இணைக்கப் பெற்றிருந்தாலும் கொங்குநாட்டு

மக்களின் பழக்க வழக்கங்கள், சடங்குகள், நம்பிக்கைகள் முதலியனவற்றைப் பெற்றுத் திகழ்கிறது.

## கொங்குநாடும் முருக வழிபாடும்

கொங்கு நாட்டில் முருக வழிபாடு செல்வாக்குப் பெற்றிருந்தது. "ஏனைய தமிழ்நாடுகளில் இருந்ததுபோலவே கொங்குநாட்டிலும் அக்காலத்தில் சிவன், திருமால், முருகன், கொற்றவை முதலிய தெய்வ வழிபாடுகள் நடந்தன.... குன்றுகளிலும், மலைகளிலும் முருகனுக்குக் கோவில்கள் இருந்தன. கொங்கு நாட்டுத் திருச்செங்கோட்டுமலை அக்காலத்தில் முருகன் கோவிலுக்குப் பேர் பெற்றிருந்தது."[9] என்கிறார் மயிலை, சீனி. வேங்கடசாமி.

**"சேரர் கொங்கு வைகாவூர் நன்னாடதில்**
**ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே"**[10]

என்று அருணகிரிநாதர் ஆவினன்குடி முருகனைப் பாடும்பொழுது கொங்கு நாட்டையும், கொங்குநாட்டின் உட்பிரிவான வைகாவூர் நாட்டினையும் இணைத்துப் பாடுகிறார். இதிலிருந்து கொங்குநாட்டில் முருக வழிபாடு செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதை உணரமுடிகின்றது.

## வையாபுரிநாடு

கொங்கு இருபத்திநாலு நாடுகளுள் வையாபுரி நாடும் ஒன்று. வையாபுரி நாட்டுக்கிராமம் நாற்பத்தி ஒன்றில் பழனியும் ஒன்று. இவ்வாறு, "பழனி ஸ்தல வரலாற்றின் ஆதி கொடிவழி விபரம்" கூறுகின்றது. மேலும், பழனியை அது, பழனியூர் என்றும் குறிப்பிடுகின்றது.[11] இன்று பழனித் தாலுகாவில் உள்ள பல கிராமங்கள் முன்னைய வையாபுரி நாட்டுக்கிராமங்கள் ஆகும். "வையாபுரிநாட்டின் தற்கால இட அமைதிகள் - பழனித் தாலுக்கா மேல்பாகமும், ஆம்ராவதிக் கரையும்"[12] என்று சி. இராமச்சந்திரன் செட்டியார் குறிப்பிடுகின்றார்.

கல்வெட்டுக்களில் பழனி சார்ந்த பகுதிகள் வைகாவூர்நாடு எனக் குறிக்கப்படுகின்றன. "வையாவியூர் என்பதே வையாவூர் என மாறிப் பின் வைகாவூர் என மாறியிருக்கலாம். வையை - வைகை என்றும் பொதியை

-பொதிகை என்றும் மாறியுள்ளது காண்க வையாவூர் என்பது வடமொழியாக்கமாக வையாபுரி என மாறியிருக்க வேண்டும்" [13] என்பர்

## பழனியின் புவியியல்

தொடக்கத்தில் பழனி வட்டம் அய்யம்புள்ளி வட்டமாகப் பெயர் பெற்றிருந்தது என்று மதுரை மாவட்டப் பதிவேட்டில் எம்.எஸ். பாலிகா குறிப்பிடுகின்றார்.[14]

இன்றைய பழனி நகரம் மதுரையிலிருந்து 115 கி.மீ. தொலைவிலும், திருச்சியிலிருந்து திண்டுக்கல் வழியாக 153 கி.மீ. தொலைவிலும், கோவையிலிருந்து 105 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. கடல்மட்டத்திற்கு மேல் 350 மீட்டர் உயரத்திலும், பழனி மலைத் தொடர்களின் அடிவாரத்திலிருந்து 10 கி.மீ. தொலைவிலும் உள்ளது பழனி நகரம். இந்நகரைச் சுற்றி 20 சதுர கி.மீ. பரப்பில் பல மலைகளையும் குன்றுகளையும் காணலாம்[15] இதன் இன்றைய மக்கள் தொகை சுமார் ஒரு இலட்சம் ஆகும். 1.4.72 முதல், பழனி, முதனிலை நகராட்சியாக ஆகியுள்ளது.

பழனி நகரத்திற்குக் கிழக்கே, திண்டுக்கல் வட்டமும், தெற்கில் பெரியகுளம் வட்டமும், மேற்கில் உடுமலைப்பேட்டை வட்டமும் வடக்கில் கரூர் வட்டமும் எல்லைகளாக அமைந்துள்ளன. பழனி வட்டம் உயரமான மேற்குப் பகுதியிலிருந்து கிழக்கே தாழ்வாக அமைந்துள்ளது.[16]

பழனியைச் சுற்றிலும் பழனங்கள் சூழ்ந்துள்ளன. வையாபுரிக் குளம், இடும்பன்குளம் ஆகியவை பழனியை வளப்படுத்துகின்றன. குடகனாறு, நங்காஞ்சி ஆறு, நல்தங்கியாறு, சண்முகநிதி என்பவை பழனி மலைத் தொடரில் தோன்றும் ஆறுகள் ஆகும். சண்முகநிதி, பழனி நகரின் எல்லையில் ஓடுகின்றது. 'வறட்டாறு' என்ற ஆறும் பழனி மலைப்பகுதியில் ஓடுகின்றது. தென்மேற்கு வடகிழக்குப் பருவக்காற்றுக் காலங்கள் தவிர ஏனைய நாள்களில் வறண்டிருப்பதால் இவ்வாற்றுக்கு வறட்டாறு என்று பெயர் ஏற்பட்டது.

பழனி மலைப் பகுதிகளில் அரிய மூலிகைகள் உள்ளன என்று சித்த மருத்துவர்கள் கூறுகின்றனர். முற்காலத்தில் பழனித்தலத்தில்

சில சித்தர்கள் வாழ்ந்ததாகக் கொங்கு மண்டல சதகம் குறிப்பிடுகின்றது. பழனித் தலத்திற்கு, 'சித்தன் வாழ்வு' என்ற பெயர் வழங்கி வந்ததாகவும் கூறுவர்.

பழனி மலைத்தொடரிலுள்ள எண்ணற்ற மரம், செடி, கொடிகள் நோய் நீக்கும் மருந்துகள் செய்ய உதவுகின்றன. பழனியிலுள்ள சித்த மருத்துவச் சாலைகள் இவற்றைப் பயன்படுத்தி குணப்படுத்தும் மருந்துகளைச் செய்கின்றன. சித்தர்-சூழல் இன்றும் இங்கு காணப்படுவதற்கு, இது ஒரு சான்றாகும். சுருங்கக் கூறின், பழனியின் புவியியல் இயற்கை அழகும், இறையழகும் இணைந்த ஒரு பகுதியாக அமைந்துள்ளது எனலாம்.

## பழனி பெயர்க்காரணம்

இந்நகருக்குப் பழனி என்ற பெயர் ஏறபட்டது குறித்துப் பழமரபுக்கதை ஒன்று சொல்லப்பட்டு வருகின்றது. முருகன், ஆண்டியாக வந்து இக்குன்றின்மேல் நின்றிருக்க, சிவபெருமானும் பார்வதிதேவியும், 'பழம்நீ' என்று இவ்விடத்தில் குறிப்பிட்டதால் இப்பெயர் இத்தலத்திற்கு ஏற்பட்டது.

**"கூறுடையாளுநங் குன்றாக் குணப்பெருங் குன்றும் ஞானப்**
**பேறுடைப் பழநீ யென்னப் பெயரது மருவி யெங்க**
**ளாறுமா முகவன் வைகும் நகரமு மன்று தொட்டு**
**வீறுதொல் பழநீ யென்றே விளம்பின வுலக மூன்றும்"** [17]

என்று பழனித் தலபுராணம், குறிப்பிடுகின்றது.

பழனிக்கு, பழனாபுரி, வையாபுரி, பொதினி, ஆவினன்குடி ஆகிய வேறு பெயர்களும் வழங்கப்பட்டு வந்திருக்கின்றன. "இலக்கிய வழக்கில் ஆளப்பட்ட ஆவினன்குடி என்ற பெயர் 'திரு ஆவினன்குடி' என்று சிறப்பு குறித்த அடை பெற்று இன்றளவும் பழனியைக் குறித்து வழங்குவதால், சங்க காலத்து ஆவினன்குடியே இன்றைய பழனி எனலாம். பொதினி என்பது மலையினையொட்டிய பெயராயின் பழனியில் மலையுள்ளதால் சங்க காலத்தில் பொதினியே இன்றைய பழனி என்பது மேலும் உறுதிப்படுகிறது" [18] என்பர்.

## பழனித் தலச் சிறப்பு

பழனித் தலச் சிறப்பு குறித்து அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்திலும், திருப்புகழ்ப் பாடல்களிலும் விரிவாக எடுத்துக் கூறியுள்ளார்.

**"படிக்கின் றிலைபழ நித்திரு நாமம் படிப்பவர் தாள்**
**முடிக்கின் றிலைமுரு காவென் கிலைமுசி யாமலிட்டு**
**மிடிக்கின் றிலை பரமானந்த மேற்கொள விம்மிவிம்மி**
**நடிக்கின் றிலை நெஞ்சமேதஞ்ச மேது நமக்கினியே"** [19]

என்று அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்தில், பழனித் தலத்தின் சிறப்பினை "நான் முன்பே கேட்டு அறியவில்லையே" என்று மனம் வருந்திப்பாடுகின்றார்.

"காசியின் மீறிய பழனாபுரி" [20] என்றும் "பதினாலுலகோர் புகழ் பழனி"[21] என்றும் பழனித் தலச் சிறப்பைப் போற்றுகின்றார் அருணகிரி நாதர்.

அருணகிரி நாதர் பழனித்தலத்தைப் பற்றி 97 திருப்புகழ்ப் பாடல்களை அருளியுள்ளார். பழனி முருகனைத் தமிழ் மொழியோடு இணைத்துப் பாடுகின்றார் அருணகிரிநாதர். "பல கலை படித்தோது பாவாணர் நாவிலுறைபவன்"[22] பழனி முருகன் என்கின்றார் அவர்.

**"குறுமுனிவ னிரு பொழுதும் அர்ச்சித்து முத்திபெற**
**அறிவு நெறி தவநிலைகள் செப்புத் தமிழ்க்கினிய**
**குருகுமர பழனி வளர் வெற்புத் தனிற்றிகழு பெருமாளே"** [23]

என்று பாடுகின்றார். தமிழ் முனியாகிய அகத்திய முனிவர் முத்தி பெற தவ நெறிகளை உபதேசித்தவர் பழனி முருகன் என்றும், தமிழுக்கு இனிய குருவாக முருகப் பெருமான் பழனி மலையில் எழுந்தருளியுள்ளார் என்று குறிப்பிடுகின்றார் அருணகிரிநாதர்.

பழனி முருகனின் அருள் பாலிக்கும் திறத்தினையும், சிறப்பினையும் விரிவாகக் கூறுகின்றது பழனிப்பிள்ளைத் தமிழ்.

**சீரார் நலஞ்சேர் பூவுலகிற்**
**றேவா சுரரின் மற்றையரிற்**

றினமு முனது கொலுக் காணச்
செல்லா தாரார் திறைவளங்கள்
தாரா தாரா ருனது பதந்
தனையே வணங்கித் தொழவேண்டித்
தழுவா தாரா ரெவ்வேளை
சமயங் கிடைக்கு மென நினைந்து
வாரா தாரா ருனதருளை
வாழ்த்திப் புகழ்ந்து துதிக்க மனம்
வசியா தாரார் பணிவிடைகள்
வரிசைப் படியே நடத்தாதார்
ஆரா ரெனத்தா லாட்டுகின்ற
வரசே வருக வருகவே
அருள் சேர் பழனிச் சிவகிரி வா
ழையா வருக வருகவே "[24]

என்று பழனிப்பிள்ளைத் தமிழ் பழனி முருகனின் சிறப்பினை எடுத்தியம்புகின்றது.

மண்ணுலகத்திலுள்ளவர்களும், விண்ணுலகத்திலுள்ள தேவர்களும், பழனி முருகனின் கொலுக்காண விரும்புகின்றனர். வழிபடுவோர் முருகப் பெருமானுக்குப் பல்வேறு வகையான காணிக்கையை அளித்து வழிபடுகின்றார்கள். முருகப் பெருமானின் திருவடியை வணங்கினால் போதும் என்றும் பழனி முருகனை வழிபடுவதற்கு எப்போது நேரம் கிடைக்கும் என்றும் மெய்யன்பர்கள் காத்துக்கிடக்கின்றார்கள். பலர் முருகப் பெருமானை வாழ்த்தி, புகழ்ந்துபாட விரும்புகின்றார்கள். பலர் முருகப் பெருமானுக்கு முறைப்படிப் பணிவிடை செய்ய விரும்புகின்றார்கள். இப்படிப்பட்ட சிறப்புக்களைக் கொண்ட அருள் நிறைந்த பழனிமலையில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானே வருக, வருகவே என்று பழனிப்பிள்ளைத்தமிழ் நூலாசிரியர் பழனி முருகனைப் போற்றுகின்றார்.

"கங்கைக் கொருமா மகனே குகனே
கனியே கண்மணியே
கருணா லயமே மறையோர் தவமே
கருகாம் பெருவாழ்வே

திங்கட் சடிலன் மகிழுங் குருவே
　　தேவர்கள் பணி கோவே
தெய்வச் சுருதிப் பொருளே
　　பொருளின் றெளிவே களிகூடும்
தங்கப் புயனேர் திருமான் மருகா
　　சோதிச் சுடரொளியே
தோகைக் குடையாய் நீபத் தொடையாய்
　　சொல்லுக் கினியானே
சங்கத் தொருவா பழனித் தலைவா
　　தாலோ தாலேலோ
தமிழா லயருஞ் சிவமா மலையாய்
　　தாலோ தாலேலோ" [25]

என்று பழனிப்பிள்ளைத்தமிழாசிரியர் பழனி முருகனின் சிறப்புக்களை எடுத்துரைக்கின்றார். பழனியாண்டவர் அருளின் உறைவிடமாகவும் அடியார்கள் கருதும் பெருவாழ்வாகவும், பொருளின் தெளிவாகவும், சுடரொளியாகவும் விளங்குகின்றார். கடம்ப மாலையை அணிந்த முருகப் பெருமான் சொல்லுக்கு இனியவராக விளங்குகின்றார். பழனி மலையை, தமிழாலுயருஞ் சிவமலை என்றும், பழனி மலை மீது எழுந்தருளியுள்ள முருகப் பெருமானைச் சங்கத் தமிழின் தலைவன் என்றும் தமிழோடு இணைத்துப் பாடுகின்றார் பழனிப்பிள்ளைத் தமிழ் நூலாசிரியர் பழனிச் சமீன் விசயகிரி வேலச் சின்னோவையன்.

## முருகன் கோவிலும் அதன் சார்புக் கோவில்களும்

பழனி மலைமீது உள்ள கோவில் பழனி முருகன் கோவில் என்றும், பழனி ஆண்டவர் கோவில் என்றும், அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி கோவில் என்றும் வழங்கப் பெறுகிறது. இதன் சார்புக் கோவில்கள் பின் வருவன.

1. அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோவில்
2. திரு ஆவினன்குடித் திருக்கோவில்
3. அருள்மிகு பெரிய ஆவுடையார் திருக்கோவில்

பழனி முருகன் கோவில் என்று சொன்னால் அது மலைமீதுள்ள அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவிலைத்தான் இன்று

குறிப்பிடுகின்றது; என்றாலும், விழாக்கள் இக்கோவிலோடு மட்டுமல்லாமல் ஏனைய மூன்று கோவில்களோடும் இணைத்தே கொண்டாடப்பட்டு வருகின்றன. இம்மூன்று கோவில்களுடன், வேறுபல கோவில்களும், அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில் நிர்வாகத்தின் கீழ் இயங்கி வருகின்றன.

## பழனியில் முத்தலம்

பழனி முருகன் கோவிலுக்குரிய சார்புடைக் கோவில் பற்றிச் சோழன் பூர்வ பட்டயம் என்ற நூல் வேறுபட்ட கருத்து ஒன்றினைத் தெரிவிக்கின்றது. பழனியில் சோழ மன்னன் ஒருவன் (பெயர் குறிப்பிடப்படவில்லை) திருப்பணி செய்யப் போனதாகக் கூறும் இந்நூல் முருகன் கோவிலுக்குரிய சார்புடைக் கோவிலாக திரு ஆவினன்குடி, பெரியநாயகி அம்மன் கோவில் ஆகிய இரண்டையுமே குறிப்பிடுகிறது. பெரிய ஆவுடையார் கோவிலைக் குறிப்பிடவில்லை. ஆயினும் வழிபாடு செய்கின்ற அடிப்படையில் மலைக்கோவிலும் ஏனைய இரண்டு சார்புக் கோவில்களும் இணைந்திருந்தன என்பதை இந்நூல் குறிப்பிடுகிறது.

சோழன் திருப்பணி செய்யப் போனபோது உடன சென்றவர்களில் ஒருவரான 'சமையமுதலி' பழனியில் உள்ள சிவகிரி (பழனிமலை), பழனாபுரித்தலம் (பெரியநாயகி அம்மன் கோவில்), திரு ஆவினன்குடி ஆகிய முத்தலங்கட்கு இறைபணியாளர்களை நியமித்து வழிபாட்டுப் பணிகளை வரன்முறை செய்ததாக "சோழன் பூர்வ பட்டயம்" பின் வருமாறு கூறுகின்றது.

"சமைய முதலியாகிறவர் திருவாவினன் குடித்தலம், பழனா புரித்தலம், சிவகிரித்தலம் இந்த முத்தலம் என்று இனங்கண்டு இந்த மூவாலயத்தையும் ஓர் முகமாய்ச் சேர்த்து அந்த ஆலய ஊழியர்களுக்கு நம்பிமுதல் திருவலகு வரைக்கும் ஆனப் பொடி வித்துத்துத் திருவாடு தண்டிகைச் சீர்பாத ஊழியம் சேர்வைக்குக் கைக் கொள்வரில் நூறுகுடியும் பழனாபுரி நகரில் வைத்து அந்த நூறு குடிகைக் கொள்வதற்கும் முதன்மை நாட்டாண்மைக்குச் சரவண முதலியை வைத்து நம்பி முதன்மைக்குக் குமார நம்பியை வைத்து நாக பாச முதன்மைக்கு வேலாயுத நட்டுவனை வைத்து தாசி முதன்மைக்கு நல்லமுத்து

மயிலாளை வைத்து அந்த மூன்று கோவிலுக்கு விட்ட வரிசை மானியத்திற்கு மணியங் கணக்குக்கு வேலப்ப முதலியை வைத்து அவரவா்க்கு ஓலைப் பட்டையமும் பாக்கு வெற்றிலையும் சமைய முதலி கைக்கொண்டு கொடுத்து நிகுதி செய்தியாா்" [26]

இப்பட்டயம் தோன்றிய காலத்தில் திரு ஆவினன்குடி, பெரியநாயகி அம்மன் கோவில், மலைக்கோவில் ஆகிய மூன்று கோவில்களும் வழிபாட்டு முறைகளில் இணைந்தே வந்திருக்கின்றன என்பதை அறியமுடிகின்றது. இன்றும் நடைமுறையில் பக்தர்கள் இம்மூன்று கோவில்களையும் சேர்த்தே வழிபட்டு வருவது குறிப்பிடத் தக்கதாகும்.

## காரணஸ்தலம்

ஆயின், 'பழனியாண்டவர் விழா தத்துவ விபரம்' எனும் மரபு வழி ஏடு, மேற்கூறிய மூன்று கோவில்களோடு பெரியாவுடையார் கோவிலையும் சேர்த்துக் கூறுகின்றது.

"பழனி 'காரணஸ்தலமாக' இருப்பதால் இங்குள்ள நான்கு கோவில்களையும் இணைத்தே விழாக்களைக் கொண்டாடி வருகின்றனர். ஆயின், பிற ஊர்களில் ஒரு கோவிலிலேயே அதற்குரிய எல்லா விழாக்களும் கொண்டாடப்படுகின்றன. இங்கு பழனியாண்டவர்தான் பிரதான மூர்த்தி. அவர் குழந்தை வடிவில் திரு ஆவினன்குடிக் கோவிலில் எழுந்தருளியுள்ளார். தாயார் ஸ்ரீ பெரியநாயகி அம்மன் ஊர்க் கோவிலில் எழுந்தருளியுள்ளார். ஸ்ரீ வள்ளி, தெய்வயானை சமேதரராய் ஸ்ரீ முத்துக்குமாரசாமி ஊர்க் கோவிலிலும், ஞானமே தண்டமாகக் கொண்டு ஆண்டிக் கோலத்தில் ஸ்ரீ பழனி ஆண்டவர் பழநி மலைமீது எழுந்தருளி உள்ளார். ஒரு கோவிலில் உள்ள மூர்த்திகள் நான்கு இடங்களில் இங்குச் சிறப்பிடம் பெற்று இருப்பதால், ஓரிடத்தில் நடைபெறும் திருவிழாவானது மேற்கண்ட நான்கு இடங்களிலும் தொடர்பு பெற்றதாகித் தொன்றுதொட்டு ஐதீக காரண பழக்க வழக்க அனுபவத்தையும் அனுசரித்து நடைபெற்றுக் கொண்டு வருகின்றது". [27] இவ்வாறு பழனித்தலத்தில் நான்கு கோவில்களுக்கும் உள்ள விழாத் தொடர்பு பற்றிக் குருக்கள் மத்தியில் மரபுவழியாக வழங்கப் பெறும் "பழனியாண்டவர் விழா தத்துவ விபரம்" குறிப்பிடுகின்றது.

## அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோவில்

பழனியில் 'ஊர்க்கோவில்' என்று அழைக்கப்படுவது, அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோவில் ஆகும். இது, ஊரின் வடமேற்குப் பகுதியில் அமைந்துள்ளது. இக்கோவிலின் வடக்கு, மேற்கு ரதவீதிகள் ஊரின் எல்லைகளாகவும் விளங்குகின்றன. இக்கோவில், செவ்வக வடிவில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இதற்குக் கிழக்கிலும், தெற்கிலும் இரண்டு நிலை வாயில்கள் உள்ளன. கிழக்கு வாயிலில் இராஜகோபுரம் எழுப்பப்படாமல் இருக்கின்றது. தெற்கு வாயிலில் சிறிய கோபுரம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. கோவிலில் ஒரே ஒரு பிரகாரம் மட்டுமே இருக்கின்றது. கோவிலின் மையப்பகுதி இரு பிரிவுகளாகப் பிரிந்து மேற்குப்பிரிவு கருவறையையும், கிழக்குப்பிரிவு மண்டபங்களையும் கொண்டு விளங்குகின்றது. சந்நிதி அமைப்பு முறையில், முதலில் அருள்மிகு பெரியநாயகி அம்மையாரும், நடுவில் வள்ளி தெய்வயானையுடன் கூடிய முருகப் பெருமானும், அடுத்துக் கைலாசநாதப் பெருமானும் இடம்பெற்றுள்ளனர். இக்கோவிலின் கொடிமரம் முருகன் சன்னதிக்கு முன்னாலேயே இருக்கிறது என்பதும் இவைகளுக்குத் தெற்கில் பெரியமண்டபத்தில் அருள்மிகு முத்துக்குமாரசாமி சந்நிதி உள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். இதன் தல விருக்ஷம், வில்வமாகும்.

தைப்பூசத் திருவிழாவில் கொடியேற்று விழா, அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில்தான் தொடங்குகின்றது. இத்திருவிழாவின் பொழுது பத்து நாட்களும் இக்கோவில் விழாக்கோலம் பூண்டிருக்கும். பெருவாரியான பக்தர்கள் இக்கோவிலைத் தரிசித்துவிட்டு மலைக்குச் செல்கின்றனர். அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவில் பற்றி அருணகிரிநாதர் திருப்புகழில் குறிப்பிட்டுள்ளார்.

**"பழையபார் வதி கொற்றி பெரியநாயகி பெற்ற**
**பழநிமா மலையுற்ற பெருமாளே"**[28]

இப்பாடலில் அருள்மிகு பெரியநாய்கியையும், பழனி ஆண்டவரையும் இணைத்துப் பாடுகின்றார் அருணகிரிநாதர்.

## திரு ஆவினன்குடி

பழனி மலை அடிவாரத்தில் திரு ஆவினன்குடிக் கோவில் உள்ளது. இக்கோவிலே இப்புராதன தலத்தின் ஆதிக் கோவிலாகும் என்று "*பழனித் தலவரலாறும் திருக்கோவில் வழிபாடும்*" என்ற நூல் குறிப்பிடுகின்றது.[29]

இத்தலத்தில் முருகப் பெருமான் மயில்மீது அமர்ந்து குழந்தை வேலாயுதசாமி என்ற பெயருடன் விளங்குகின்றார் இக்கோவில், மேற்கு நோக்கி அமைந்துள்ளது. இக்கோவிலுக்கு வடகிழக்கு வெளிப்புறத்தில் சரவணப்பொய்கையும், கோவிலின் எதிரில் வையாபுரிக்குளமும் அமைந்துள்ளன.

## சரவணப்பொய்கை

சரவணப்பொய்கையில் நீராடி, அருள்மிகு குழந்தை வேலாயுதசாமியை வழிபடுவது நற்பயனைத்தரும் என்று பக்தர்கள் கருதுகின்றனர். சரவணப் பொய்கையின் முன்புறச் சுவரில் உள்ள சுதை வேலைப்பாடுகள், அடியார்கள் சரவணப்பொய்கையில் நீராடிவிட்டு காவடிகளைத் தோளில் சுமந்து கொண்டு நாதசுர முழக்கத்துடன், கோவில் வழிபாட்டிற்குச் செல்லும் காட்சியை விளக்குகின்றது.

ஆவினன்குடியின் தல விருஷம் நெல்லியாகும் "முருகனுக்குரிய படைவீடுகளுள் ஒன்றாகிய ஆவினன்குடி என்னும் பதி ஆவியர் குடியிருப்பேயாகும்"[30] என்கிறார் ரா.பி. சேதுப்பிள்ளை. பழனி முருகனை வழிபட வரும் பக்தர்கள், திரு ஆவினன்குடி முருகனை வழிபட்ட பிறகு மலைக்குச் செல்லும் வழக்கத்தைக் கொண்டுள்ளனர். நாள்தோறும், திரளான பக்தர்கள் ஆவினன்குடி முருகனை வழிபடுகின்றனர். திருஆவினன் குடியில் திருமணம் செய்து கொள்வதை மணமக்கள் விரும்புவதால் முகூர்த்த நாட்களில் இக்கோவிலில் கூட்டம் நிறைந்து விளங்குவதைக் காணலாம். பெற்றோர்கள், தங்கள் குழந்தைகளுக்கு காதுகுத்தும் சடங்கை இக்கோவிலில் செய்கின்றார்கள். வெளியூரிலிருந்து வரும் பக்தர்கள், ஆவினன்குடி முருகனைத் தரிசனம் செய்த பிறகு, தாங்கள் வீட்டிலிருந்து கொண்டு வந்திருந்த உணவை உறவினர்களுடன் கூட்டாகச் சேர்ந்து உண்ணுவதை இக்கோவில் மண்டபத்தில் காணலாம். திரு ஆவினன்குடிக் கோவிலில்தான் பங்குனி உத்திரவிழாவின் கொடியேற்றம் நடைபெறுகின்றது.

**சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்**
**ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி**
**ஆதி யந்தவு லாவாசு பாடிய**
**சேரர் கொங்குவை காவூர் நனாடதில்**
**ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே "[33]**

என்று அருணகிரிநாதர் ஆவினன்குடி முருகனைப் போற்றுகின்றார்.

பழனியில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானை அருணகிரி நாதர் 'வேதமந்தர சொரூபன்' என்றும் ' ஞான பண்டிதசாமி' என்றும் போற்றுகின்றார். நாதம், விந்து, கலை முதலியவைகட்கு முதலாக நிற்பவர் முருகப்பெருமான் என்கிறார். ' தீப மங்கள ஜோதி' என்று முருகப்பெருமானை ஒளிவடிவினன் என்று குறிப்பிடுகின்றார். பழனியில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானின் பல்வேறு சிறப்புக்களை எடுத்துரைத்து, போற்றி வழிபடுகின்றார் அருணகிரிநாதர்.

**சிவனார் மனங்குளிர உபதேச மந்தரமிரு**
**செவிமீதி லும்பகர் செய் குருநாதா**
**சிவகாம சுந்தரி தன் வரபால கந்த நின**
**செயலே விரும்பியுளம் நினையாமல்**
**அவமாயை கொண்டுலகில் விருதா அலைந்துழலு**
**மடியேனை அஞ்சலென வரவேணும்**
**அறிவாக மும்பெருக இடரான துந்தொலைய**
**அருள் ஞான இன்பமது புரிவாயே**
**நவநீதமுந் திருடி உரலோடெ யொன்றுமரி**
**ரகுராமர் சிந்தைமகிழ் மருகோனே**
**நவலோக முங்கை தொழ நிசதேவ லங்கிருத**
**நலமான விஞ்சை கரு விளை கோவே**
**தெவயானை யங்குறமின் மணவாள சம்ப்ரமுறு**
**திறல்வீர மிஞ்சுகதிர் வடிவேலா**
**திருவாவி னன் குடியில் வருவேள் சவுந்தரிக**
**செகமேல் மெய் கண்டவிறல் பெருமாளே [34]**

என்று ஆவினன்குடி முருகனின் சிறப்புக்களைப் போற்றுகின்றார் அருணகிரிநாதர். குருநாதனாக எழுந்தருளி சிவபெருமானின் மனப்

## திரு ஆவினன்குடியின் பெருமை

திரு ஆவினன்குடியின் சிறப்பைப்பற்றி நக்கீரர் திருமுருகாற்றுப் படையில் விவரிக்கின்றார். திருமுருகாற்றுப்படையில் மூன்றாவது படை வீடாக இதனைக் குறிப்பிடுகின்றார்.

**" தாவு இல் கொள்கை மடந்தையொடு சின்னாள்**
**ஆவினன்குடி அசைதலும் உரியன்"** [31]

என்று இத்தலத்தின் பெருமையினை நக்கீரர் பாடுகின்றார்.

**" ஆவினன்குடி வாழ் அமலன் போற்றுவோம்"** [32]

என்று, கந்தபுராணம் இத்தலத்தின் பெருமையினைக் குறிப்பிடுகின்றது. திருப்புகழில், அருணகிரிநாதர் திரு ஆவினன்குடி பற்றிப் பன்னிரண்டு பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

**நாத விந்துக லாதீ நமோநம**
**வேத மந்த்ரசொ ரூபா நமோநம**
**ஞான பண்டித சாமீ நமோநம வெகு கோடி**
**நாம சம்புகு மாரா நமோநம**
**போக அந்தரி பாலா நமோநம**
**நாக பந்தம யூரா நமோநம பரசூரர்**
**சேத தண்டவி நோதா நமோநம**
**கீத கிண்கிணி பாதா நமோநம**
**தீர சம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ**
**தீப மங்கள ஜோதீ நமோநம**
**தூய அம்பல லீலா நமோநம**
**தேவ குஞ்சரி பாகா நமோநம அருள் தாராய்**
**ஈத லும்பல கோலால பூஜையும்**
**ஓத லுங்குண ஆசார நீதியும்**
**ஈர முங் குரு சீர்பாத சேவையு மறவாத**
**ஏழ்தலம் புகழ் காவேரி யால்விளை**
**சோழ மண்டல மீதே மனோகர**
**ராஜ கெம்பிர நாடாளு நாயக வயலூரா**
**ஆத ரம்பயி லாரூரர் தோழமை**

குளிரும்படி குடிலை மந்திரத்தின் உட்பொருளைக் கூறியவர் முருகப் பெருமான் என்கிறார். ஒன்பது உலகங்களும் கைகூப்பி வழிபடும் மெய்யான தெய்வம் முருகன் என்று குறிப்பிடுகின்றார். மேலும் முருகப் பெருமான் நன்மையளிக்கின்ற கல்வி, கலைகள் அனைத்திற்கும் மூலமாக (Source) விளங்குகின்றார் என்று அருணகிரிநாதர் கூறுகின்றார். தன்னுடைய இடர் களைந்து 'அருள் ஞான இன்பம்' அருள வேண்டும் என்று முருகப் பெருமானிடம் வேண்டுகிறார்.

அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்ப் பாடலின் இனிமையைக் கேட்ட ஆவினன் குடி முருகன் அவருக்கு ஜெபமாலையை அளித்ததாகப் பாடுகின்றார்.

அபகார நிந்தையில் சிக்கிக்கொள்ளக்கூடாது என்றும், வஞ்சகர்களுடன் பழகக்கூடாது என்றும் அடியார்களுக்கு அறிவுரை கூறுகின்றார் அருணகிரிநாதர்.

மந்திரங்களின் துணை கொண்டு முருகப் பெருமானின் திருவடியை அடைவேன் என்று தனது உறுதியான பக்தியை வெளிப்படுத்துகின்றார் அவர்.

**" அபகார நிந்தைபட் டுழலாதே**
**அறியாத வஞ்சரைக் குறியாதே**
**உபதேச மந்திரப் பொருளாலே**
**உனைநா னினைந்தருட் பெறுவேனோ**
**இபமா முகன் தனக் கிளையோனே**
**இமவான் மடந்தையுத் தமிபாலா**
**ஜபமாலை தந்த சற் குருநாதா**
**திருவாவினன்குடிப் பெருமாளே**[35]

என்று பாடுகின்றார்.

" பண்பு தருந்திரு வாவினன்குடி" என்று திரு ஆவினன் குடியை வழிபடுவதன் மூலம் மனிதப் பண்புகள் வளரும் என்கிறார் அருணகிரிநாதர்.

திரு ஆவினன்குடியில் எப்பொழுதும் விழாக்கள் நடந்து கொண்டே இருக்கும் என்று வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் கூறுகின்றார்.

**" தோரணவச்சிர்**
**வீதித் திருவாவினன்குடிப் பொற்கோயிலுள்வாழ்**
**ஆதித்தன் போலும் ஒருவா! "** [36]

என்று பாடுகின்றார்.

## மலைக்கோவில்

பழனி முருகன் கோவில் என்று குறிப்பிட்டாலே அது மலை மீதுள்ள அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவிலையே குறிக்கும் எனும் அளவிற்குப் பெயர் பெற்று விளங்குகின்றது பழனி மலை. "சேயோன் மேய மைவரை உலகு" [37] எனும் தொல்காப்பியரின் கூற்றுக்கு ஏற்ப, மலைமீது சேயோனாகிய முருகன் கோவில் அமைந்துள்ளது. இம்மலைக்குக் கிழக்கே இடும்பன்மலை அமைந்துள்ளது. இடும்பன் காவடியாகக் கட்டிக் கொண்டு வந்ததாகக் கூறப்படும் இரு மலைகளில் 'சத்திகிரி' என்பது இடும்பன் மலையாகவும் 'சிவகிரி' என்பது முருகன் மலையாகவும் வழங்குகின்றன. பழனி மலைமீது எழுந்தருளியுள்ள முருகப் பெருமானைப் பற்றி அருணகிரி நாதர் 85 திருப்புகழ்ப் பாடல்களை அருளியுள்ளார். அவர்

**" பதினாலுலகோர் புகழ்**
**பழனி மாமலை மீதினிலே யுறை பெருமாளே"** [38]

என்று பழனி முருகனைப் போற்றுகின்றார்.

பழனித் திருத்தலத்திலே இருக்கின்ற சிவகிரி (பழனி மலை) சத்திகிரி (இடும்பன் மலை) என்னும் இவ்விருமலைகளை தொலைதூரத்திலிருந்து வழிபட்டாலும், வலம் வந்தாலும், இவ்விரு மலைகளின் வரலாறுகளைக் கேட்டாலும் முத்தியடையலாம் என்று பழனித்தல புராணம் கூறுகின்றது.

**வரதாமணி நீ யென வோரில்**
**வருகா தெதுதா னதில் வாரா**

**திரதா திகளால் நவலோக**
**மிடவே கரியா மிதிலேது**
**சரதா மறையோ தயன்மாலும்**
**சகலா கம நூ லறியாத**
**பரதே வதையாள் தருசேயே**
**பழனா புரி வாழ் பெருமாளே** [39]

என்று அருணகிரிநாதர் பழனி மலை மீது எழுந்தருளியுள்ள முருகப் பெருமானைப் போற்றுகின்றார். பழனி முருகனை வரம் தரும் வள்ளல் என்கிறார் அருணகிரி நாதர். சகல ஆகம சாத்திர நூல்களால் அறிய முடியாதவர் பழனியாண்டவர் என்று அருணகிரிநாதர் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

**" உலக பசு பாச தொந்த மதுவான**
**உறவு கிளை தாயர்தந்தை மனை பாலர்**
**மல சல சுவாச சஞ்ச லமதாலென்**
**மதிநிலை கெடாமலுன்ற னருள்தாராய்**
**சலமறுகு பூளை தும்பை யணிசேயே**
**சரவணப வா முகுந்தன் மருகோனே**
**பல கலை சிவாகமங்கள் பயில்வோனே**
**பழநி மலை வாழவந்த பெருமாளே"** [40]

என்று பாடுகின்றார் அருணகிரிநாதர். பழனி மலை சிறந்து உய்யுமாறு அதில் எழுந்தருளியவர் முருகப்பெருமான் என்று பாடுகின்றார். உலகத்தில் ஆன்மாக்களைக் கட்டுப்படுத்தும் மலபந்த சொரூபங்களான உறவு, கிளை, தாய், தந்தை, மனைவி, குழந்தைகள் முதலியவர்களால் உண்டாகும் துன்பங்களால் எனது அறிவுநிலை கெட்டுப்போகா மலிருக்குமாறு அருள் தந்து என்னைக் காத்தருள வேண்டும் என்று முருகனிடம் வேண்டுகிறார் அருணகிரிநாதர். மேலும், பழனி முருகன் "பல கலைகளையும், சிவ ஆகமங்களையும் பயில்வோன்" என்று கூறுகின்றார்.

**" பரிமள கற்ப காடவி அரியளி சுற்று பூவுதிர்**
**பழநி மலைக்குள் மேவிய பெருமாளே"** [41]

மலர்கள் உதிர்ந்து விழுகின்ற பழனி மலையில் எழுந்தருளியுள்ள

பெருமானே என்று. இயற்கையழகு நிறைந்த பழனி மலையில் முருகப் பெருமான் எழுந்தருளிய திறத்தை எடுத்து இயம்புகின்றார் அருணகிரிநாதர்.

அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில் அமைந்துள்ள இம்மலையின் தரைப்பகுதி அடிவாரம் என அழைக்கப்படுகிறது. மலையைச் சுற்றிலும் இன்று சிமெண்ட் பாதை செல்கிறது. இதனைக் 'கிரிவீதி' என்று அழைக்கின்றனர். மலையேறும் படிகள் அமைந்துள்ள முதன்மைப் பாதைக்கு முன்புறம் அடிவாரத்தில் விநாயகர் கோயில் ஒன்று உள்ளது. பழனியாண்டவர் திருப்பாதம் இக்கோவிலில் அமைந்திருப்பதால் இது அருள்மிகு பாதவிநாயகர் கோவில் என்று அழைக்கப் படுகிறது. அடியார்கள் இக்கோவிலை வழிபாடு செய்த பின்னரே மலையேறுகின்றனர். கிரிவலம் வருபவர்களும் பாதவிநாயகரை முதலில் வழிபடுகின்றனர். வடக்கு நோக்கி அமைந்துள்ள இதன் சன்னதியின் முகப்பு திரு ஆவினன்குடிக் கோவிலின் தெற்கு வாயிலை நோக்கிய வாறு உள்ளது. இதன் எதிரில் சற்று இடப்புறத்தில் அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோவில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது.

கிரிவீதியின் இரு மருங்கிலும் பல அமைப்புக்கள் காணப்படுகின்றன. அருள்மிகு பாதவிநாயகர் கோவிலுக்கு எதிர்ப்புறம் சிறிய மயில் மண்டபம் உள்ளது. மேலும், மலையைச் சுற்றி நான்கு திசைகளிலும் மயில் மண்டபங்கள் திசைக்கு ஒன்றாக அமைந்துள்ளன. பாதவிநாயகர் கோவிலுக்கு எதிரே உள்ள மயில் மண்டபத்திற்கும் வடக்குத் திசையில் உள்ள மயில் மண்டபத்திற்கும் இடையில் திருக்கோவிலைச் சார்ந்த தங்கும் விடுதிகளும், சிறு குடில்களும் தன்னாசியப்பன் கோவிலும் அமைந்துள்ளன. கிழக்கு மயில் மண்டபத்திற்கும், தெற்கு மயில் மண்டபத்திற்கும் இடையில் ஐயப்பன் கோவிலும் கொடைக்கானல் சாலையும், நாதசுரம் மற்றும் தவில் பயிற்சிக் கல்லூரியும் அமைந்துள்ளன. கொடைக்கானல் செல்லும் பாதையில் திருக்கோவில் நிருவாகம் நடத்தி வரும் 'அன்பு இல்லம்' அமைந்துள்ளது. தெற்கு மயில் மண்டபத்திற்கும், மேற்கு மயில் மண்டபத்திற்கும் இடையில் ஸ்ரீ சாதுசுவாமிகள் சமாதியும், ஸ்ரீ சாதுசுவாமிகள் அன்னதான மடமும் அமைந்துள்ளன.

மலையை ஒட்டிக் கிரிவீதியின் உட்பக்கமாகப் பல அமைப்புக்கள் உள்ளன. மலையை வலம் வரும் பொழுது அழகு நாச்சியம்மன், வனதுர்க்கை, மகிஷாசுரமர்த்தினி முதலிய அம்மன் கோவில்களை வழிபடலாம். மலை அடிவாரத்தில் எழுந்தருளியுள்ள சக்தி தெய்வங்கள், மலைமீது எழுந்தருளியிருக்கின்ற முருகப் பெருமானுக்கு எல்லையற்ற ஆற்றலை வழங்கி வருவதாகச் சமய அறிஞர்கள் கூறுகின்றனர். அருள்மிகு பாதவிநாயகர் கோவிலில் இருந்து நூறு மீட்டர் தூரத்தில் மலையை ஒட்டிக் குடமுழுக்கு அரங்கு ஒன்று உள்ளது. விழாக் காலங்களில் இன்னிசைக் கச்சேரிகளும், சொற்பொழிவுகளும் இங்கு நடைபெறுகின்றன. குடமுழுக்கு நினைவு அரங்கினை ஒட்டி 'வழிபடுவோர் ஓய்வுக்கூடம்' உள்ளது. விழாக்களின் பொழுதும் பிற நாட்களிலும் பக்தர்கள் வசதியாக இங்குத் தங்கிக் கொள்கின்றனர். இதனை ஒட்டிக் கோவில் நிர்வாகத்தினர் நடத்தி வரும் 'செவிடர் பள்ளி' அமைந்துள்ளது. தெற்கு மயில் மண்டபத்திற்கு நேர் எதிரில் மலைக்குச் செல்லும் திருமஞ்சனப் பாதையும், திருக்கோவில் நந்தவனமும் அமைந்துள்ளன.

ஸ்ரீ சாதுசுவாமிகள் மடத்திற்கு நேர் எதிரில் மலைமீது செல்லும் மின் இழுவை இரயில் பாதைகளும், அலுவலகமும் அமைந்துள்ளன. கிரிவீதியைச் சுற்றிப் பல மடங்களும், சத்திரங்களும் அமைந்துள்ளன.

## மலையேறும் பாதைகள்

மலைமீதுள்ள அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவிலை அடைவதற்குப் பாதவிநாயகர் கோவிலிலிருந்து 697 படிகள் கொண்ட பாதையும், அதனை ஒட்டி யானைப்பாதை என்ற பாதையும், மலைக்கோவிலுக்கு நேர் தெற்கில் மலை அடிவாரத்திலிருந்து கோவிலுக்குச் செல்லும் திருமஞ்சனப்பாதை ஒன்றும், மேற்கில் மின் இழுவை இருப்புப்பாதைகளும் அமைந்துள்ளன. யானைப் பாதையிலும், படிப்பாதையிலும் அடியவர்கள் ஆங்காங்கே தங்கி இளைப்பாறும் பொருட்டுப் பல மண்டபங்கள் எழுப்பப்பட்டுள்ளன. ஆங்காங்கே கல் இருக்கைகளும் பொருத்தப்பட்டுள்ளன.

## அருள்மிகு இடும்பன் கோவில்

மலைப்பாதையின் நடுவில் அருள்மிகு இடும்பன் கோவில் உள்ளது. இடும்பனைத் தரிசித்துவிட்டுத்தான் முருகனை வழிபட வேண்டும் என்ற ஐதீகம் இத்தலத்தில் நிலவி வருகின்றது.

அருள்மிகு இடும்பன் கோவிலுக்கு அருகில் அருள்மிகு குராவடிவேலா சன்னதி உள்ளது. இடும்பனையும், குராவடிவேலரையும் தரிசித்துவிட்டுப் பக்தர்கள் மலையேறுவர்.

## மலையின் மேற்பகுதி

மலைக்கோவிலின் மீது கோபுரம் உயர்ந்து விளங்குகின்றது. பழனிக்கு வெகுதொலைவிலிருந்து பார்த்தாலும் மலைக்கோவிலின் கோபுரம் காட்சியளிக்கும். கோவிலின் வெளிப்பிரகாரத்திலிருந்து பார்த்தால் பழனி நகரின் தோற்றத்தினையும், பழனி மலையைச் சூழந்துள்ள இயற்கை அழகினையும் காணலாம்.

மலைமீது மலைக்கொழுந்து சிவன், மலை நாச்சி அம்மன், புவனேசுவரி அம்மன் ஆகியோருக்குக் கோவில்கள் அமைந்துள்ளன. கருவறையில் மூலவராகிய அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி மேற்கு நோக்கி எழுந்தருளியிருக்கின்றாா். அா்த்த மண்டபத்தில் அழகிய சிற்ப வேலைப்பாடுகள் கொண்ட கல் தூண்கள் உள்ளன.

அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி சன்னதிக்கு நேர் எதிராகப் போகா் சமாதி உள்ளது. பக்தா்கள் போகா் சமாதியையும் வழிபடுகின்றனா். போகசித்தா் அட்டமாசித்தி பெற்றவா் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

முருகன், தண்டையூன்றித் தண்டாயுதபாணியாக - ஆண்டியாக- வீற்றிருப்பதால் ஏனைய முருகன் கோவில்களில் இல்லாத சிறப்பு இத்தலத்திற்கு உண்டு எனலாம்.

## ஆண்டிக்கோலத்தின் தத்துவம்

முருகன் தனக்கென்று எதையும் வைத்துக்கொள்ளாமல் தன்னை நாடி வரும் பக்தா்களுக்கே எல்லா சுகபோகங்களையும் அள்ளித்தரவே இக்கோவிலில் ஆண்டிக்கோலம் கொண்டுள்ளாா் என்பா்.[42] பழனி

முருகனின் வடிவம் இரு கைகளை உடைய வடிவம் ஆகும். இரு கைகளை உடைய சுப்பிரமணியர் வடிவம், வணங்கும் அடியார்களுக்கு சித்தி தரும் வடிவமாகும் [43] என்று படிமவியலறிஞர் டி.ஏ.கோபிநாதராவ் கூறுகின்றார்.

பற்றற்ற நிலையினை மனிதர்களுக்கு உணர்த்தும் வகையில் ஆண்டிக்கோலம் அமைந்துள்ளது. பொதுவாக, முருகனது அருள் வடிவம், வள்ளி தெய்வயானை என்ற இரு தேவியருடன் காட்சி தருவதைக் காண்கின்றோம். தண்டாயுதபாணி சுவாமியின் அருள் வடிவத்திலோ வைராக்கிய சௌந்தரியத்தைக் காண்கின்றோம். தான் பற்றற்ற நிலையில் நின்று, காமம் யாவையும் தருவதும், அப்பதம் கடந்தால் சேம வீடு உறச் செய்வதும் ஆகிய வரப்பிரசாதத்தை வரம்பில்லாமல் பொழிந்து கொண்டிருக்கும் முருக வடிவம் தண்டபாணி என்று பி.ஸ்ரீ கூறுகின்றார் [44]

## அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமியின் திருவுருவச்சிறப்பு

தண்டாயுத பாணியின் திருவுருவச் சிறப்புப் பற்றித் தண்டபாணி சுவாமிகள்' பழனித் திருவாயிரத்தில்' பாடியுள்ளார்[45]. தண்டாயுதபாணியின் திருவுருவச் சிறப்புப்பற்றி வேறு நூற்கள் இவ்வளவு சிறப்பாகக் கூறவில்லை எனலாம். தண்டாயுதத்தின் சிறப்புப்பற்றிக்[46] கூறி, அதனைத் தரிசித்தால் முத்திகிட்டும் [47] என்று கூறுகின்றார்.

> **"வேலாயுதத்தொடு தண்டேந்திச் சந்ததம் மேற்றிசையின்**
> **பாலாகும் நோக்கத்துடனேநிற் கின்ற பழனிவெற்போன்**
> **ஆலாலம் உண்டவன் சேயோ? உமைகைக் கழகியதோ**
> **மாலான வன்புகழ் தேவோ? மனிதவடிவினனே"** [48]

என்று பாடுகின்றார். மனித வடிவத்தினைக் 'குரு மூர்த்தம்' என்றழைப்பர். "அருள்மிகு தண்டாயுதபாணியின் திருக்கரங்களில் இருக்கும் தண்டாயுதம் உலகைச் செந்நெறியில் செலுத்தும் தரும நியதி, தியாக சக்தி, அருந்திறற் கடவுளின் அருளாயுதம் என்று பி.ஸ்ரீ. கூறுகின்றார்" [49]

## குமாரதந்திரம் கூறும் முருகனின் திருவடிவங்கள்

குமாரதந்திரம், 16 வகையான முருகனின் அழகிய திருவடிவங்களைக் கூறுகின்றது.[50]

| | | | |
|---|---|---|---|
| 1. | ஞானசக்திதரன் | 9. | ஆறுமுகவர் |
| 2. | கந்தசாமி | 10. | தாரகாந்தகர் |
| 3. | தேவசேனாபதி | 11. | சேனாபதி |
| 4. | சுப்பிரமணியர் | 12. | பிரமசாத்தன் |
| 5. | களிற்றூர்திப்பெருமான் | 13. | வள்ளிகல்யாணசுந்தரர் |
| 6. | சரவணபவன் | 14. | பாலசுப்பிரமணியர் |
| 7. | கார்த்திகேயன் | 15. | கிரவுஞ்சபேதனர் |
| 8. | குமாரன் | 16. | சிகிவாகனர் |

இப்பதினாறு வடிவங்களுள் கந்தசாமி வடிவம்தான் பழனிக் கோவிலிலுள்ள முருகனின் வடிவம் என்று ப. விச்வநாத சிவாச்சாரியார் கூறுகின்றார்.

## மூலவரின் தனிச்சிறப்பு

அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமியின் உருவத்திருமேனி கல்லால் செய்யப்பெறவில்லை என்றும், மூலிகைக் கட்டினால் ஆக்கப் பெற்றது என்றும், நவபாஷாணத்தால் செய்யப்பட்டது என்றும் கதைகள் வழங்கி வருகின்றன.

" போகர் கைலாயத்தில் தவம் செய்துகொண்டு இருந்தார். கலி காலத்தில் நிறைய அசம்பாவிதங்கள் நடக்க இருக்கிறது என்று சிவன் குறிப்பிட்டார். மனிதவடிவத்தில் சாமி சிலை செய்து பூசை செய்ய வேண்டும் என்று சிவன் சொன்னார். போகர் ஒரு சித்தர்; இவர் 4448 மூலிகைகளைக் கொண்டு வந்து ரசம் எடுக்கிறார். இந்த ரசம் நவபாஷாணமாக மாறுகின்றது. இந்த மூலிகைகளைக் கொண்டு செய்த நவபாஷாணத்தால் முருகன் சிலையை அமைக்கிறார். அகத்தியர் வந்து இந்த சிலையைப் பார்க்கிறார். இது சக்தி வாய்ந்த சிலை என்று அகத்தியர் போகரிடம் சொல்கிறார்." [51]

அகத்தியரின் ஆலோசனைப்படி, போகரும், பல முனிவர்களும் சேர்ந்து மூலிகைகள் கொண்டு 81 வகையான பாஷாணத்தை உருவாக்கி ஞான தண்டாயுதபாணியின் உருவத்தைச் சமைத்தனர் என்று இக்கதை கூறுகின்றது.

## போகர் - அகத்தியர் கோவில்

கிரிவீதியிலுள்ள அருள்மிகு தன்னாசியப்பன் கோவிலின் உட்பகுதியில் போகர் - அகத்தியர் கோயில் உள்ளது. பக்தர்கள் இக்கோயிலை வழிபட்டுவருகின்றனர். "போகரும், அகத்தியரும் மலை அடிவாரத்திலுள்ள தன்னாசியப்பன் கோவிலில் பழனியாண்டவரின் உருவத் திருமேனியைச் செய்தனர். அதனால்தான் இங்கு போகருக்கும், அகத்தியருக்கும் கோவில் உள்ளது" [52] என்று இக்கோவில் பூசாரி பேட்டியின்பொழுது தெரிவித்தார். தமிழ் முனியாகிய அகத்திய முனிவர் முருக வழிபாட்டில் பல்வேறு நிலைகளில், பல்வேறு இலக்கியங்களிலும், புராணக் கதைகளிலும் சுட்டப்படுகின்றார்.

வழிபடுவோர் பழனி ஆண்டவரை வரம் தரும் வள்ளல் என்றும் நோய்தீர்க்கும் கடவுள் என்றும் நம்பி வழிபடுகின்றனர். பழனி முருகன் கோவில் மிகவும் புகழ்பெற்று விளங்குவதற்குப் பழனியாண்டவரின் உருவத்திருமேனி ஒரு முக்கியக் காரணம் எனலாம்.

## பழனி முருகனுக்கு வழங்கும் பெயர்கள்

மலைக்கோவிலின்மீது வீற்றிருக்கும் முருகனைப் பழனியாண்டவர் என்றும், 'தென்பழனி வேலவர்' என்றும், 'மொட்டையாண்டி' என்றும் வடிவேலர் என்றும், பழனி மலைக்கந்தா என்றும், பழனி முருகா என்றும் குமரா என்றும் பக்தர்கள் அழைக்கின்றனர். வடமொழியாக்கம் செல்வாக்குப் பெற்ற காலத்தில் இக்கோவிலில் உள்ள முருகனுக்குத் தண்டாயுதபாணி என்ற பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும்.

பழனி முருகன், பழனி ஆண்டவர் என்ற பெயர்களே மக்கள் வழக்கில் இன்றும் வழங்கப்பட்டு வருகின்றன.

## அருள்மிகு பெரியாவுடையார் திருக்கோவில்

பழனிக்கு வடபுறம், 5 கி.மீ. தொலைவில் பழைய தாராபுரம் சாலையில் இயற்கை அழகு சூழ்ந்த இடத்தில் அருள்மிகு பெரியாவுடையார் திருக்கோவில் அமைந்துள்ளது. இத்திருக்கோவில், சண்முகநதியின் கிழக்குக் கரையில் அமைந்துள்ளது.

அருள்மிகு பெரியாவுடையார் திருக்கோவில் அமைந்துள்ள இடமானது கன்னிகார வனம் ஆகும் எனப் பழனித் தலபுராணம் குறிப்பிடுகிறது.[53] இக்கோவில் சேரர்களாலும், பாண்டியன், கொங்கு சோழ அரசர்களாலும் சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முன் கட்டப்பட்டிருத்தல் வேண்டும்.[54] ஈசுவரன் சுயம்புலிங்கம் மேற்குப் பார்த்த திருக்கோலத்தில் அமைந்துள்ளது. சுவாமியின் பெயர் பிரகதீசுவரர் என்ற பெரியாவுடையார்.

இங்கு, சிவபிரானாகிய பெரியாவுடையாருக்கு மட்டும் சந்நிதி உள்ளது. 'பிருஹந் நாயகி' என்ற பெரியநாயகியம்மையாருக்கு முன்பு சந்நிதி இருந்ததென்றும், சுமார் 111 ஆண்டுகட்கு முன்னர் சிதைந்திருந்த அச்சந்நிதியை நீக்கிவிட்டு அதனை ஊர்க்கோவிலில் கொணர்ந்து வைத்துக் கட்டுவித்தார்களென்றும் கூறுவர்; தவஞ் செய்யும் பொருட்டு அங்கு வந்து சேர்ந்ததாகவும் கூறுவர்.[55] பெரியாவுடையார் கோவிலில் அம்மையாருக்கு இப்பொழுது சந்நிதி இல்லை. திருமால், பிரமன், முதலியவர்களுக்குப் பரிவார தேவர்களாகத் தனிச் சுற்றாலயங்கள் அமைந்துள்ளன. இங்குள்ள தட்சிணாமூர்த்தி, சந்திரசேகரர், திருமால், சண்டேசுவரர், கணபதி திருவுருவங்கள் சிறபத்திறன் வாய்ந்தனவாகும். பெரியாவுடையார் சந்நிதியை அடுத்து மகாமண்டபத்தில் நடராசர், தெற்கு நோக்கிய மூலத்தானப் பெருமானாக விளங்குகிறார்.

பழனியில் உள்ள கோவில்கள் மட்டுமின்றிப் பிற வட்டாரங்களில் உள்ள கோவில்களும் விழாக்காலத் தொடர்புகள் கொண்டுள்ளன. பழனியிலிருந்து 80 கல் தொலைவிலுள்ள கொடுமுடி அருள்மிகு மகுடேசுவரர் திருக்கோவில், பழனி பங்குனி உத்திரவிழாவோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறது.

அதுபோல, ஒட்டன்சத்திரத்திற்கு அருகாமையில் உள்ள அருள்மிகு குழந்தை வேலப்பர் திருக்கோவிலும், தைப்பூசத் திருவிழாவோடு தொடர்புடையதாக அமைகின்றது.

இவ்வாறு, பழனி முருகன் கோவிலோடு பிற வட்டாரத்திலுள்ள கோவில்களும் விழாக்காலத் தொடர்பு கொண்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## உற்சவ மூர்த்திகள்

### அருள்மிகு சின்னக்குமரர்

மலைக்கோவிலின் உற்சவ மூர்த்தி சின்னக்குமரர் ஆவார். இவர் மாதந்தோறும் கார்த்திகை நட்சத்திரத்தன்று மலைக்கோவிலின் உட்பிரகாரத்திலும், வெளிப்பிரகாரத்திலும் உலா வருவார்.

அண்மைக் காலங்களில் நாள்தோறும் நிகழும், தங்கரத உற்சவத்தின் பொழுது சின்னக்குமரர் உட்பிரகாரத்தில் மயில் வாகனத்திலும், வெளிப்பிரகாரத்தில் தங்கரதத்திலும் உலா வருகின்றார்.

மேலும், இவர், ஆண்டிற்கு ஒருமுறை சூரசம்ஹாரத்தின்பொழுது கிரிவீதிக்கு எழுந்தருளி, முத்துக்குமாரசாமியுடன் சூரசம்ஹார நிகழ்ச்சிகளில் பங்கு கொள்கிறார்.

### அருள்மிகு குழந்தை வேலாயுதசாமி

திரு ஆவினன்குடிக் கோவிலின் உற்சவமூர்த்தி அருள்மிகு குழந்தை வேலாயுதசாமி ஆவார். இவ்வுற்சவமூர்த்தியும், சின்னக்குமரரைப்போல மாதந்தோறும் வரும் கார்த்திகையன்று திரு ஆவினன்குடிக் கோவிலின் உட்பிரகாரத்திலும், வெளிப்பிரகாரத்திலும் உலா வருகின்றார்.

### அருள்மிகு முத்துக்குமாரசாமி-வள்ளி-தெய்வயானை

அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோவில் உற்சவமூர்த்தி, அருள்மிகு முத்துக்குமாரசாமி-வள்ளி-தெய்வயானை ஆவார். இவ்வுற்சவமூர்த்தி அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோவிலில் நடைபெறும் வசந்தோற்சவம், தைப்பூசம் ஆகிய உற்சவங்களில் கலந்து கொள்வதோடு மட்டுமல்லாமல், திரு ஆவினன்குடிப் பங்குனி உத்திர விழாவிலும், மலைக்கோவிலோடு தொடர்புடைய அக்கினி நட்சத்திர விழாவிலும், சூரசம்ஹார விழாவிலும், விஜயதசமி விழாவிலும் கலந்துகொள்கிறார். மேலும் இத்தலத்தில் நிகழும் இறைவன்-இறைவி திருக்கல்யாணத்தில் இவ்வுற்சவ மூர்த்தியே கலந்துகொள்கிறார்.

## சண்முகநதி

பழனியிலிருந்து மூன்று கிலோ மீட்டர் தொலைவில், மேற்கு எல்லையில் சண்முகநதி ஓடுகின்றது. இந்நதி, பழனித்தலத்தின் புண்ணிய நதியாகவும், தீர்த்தமாகவும் கருதப்படுகின்றது. பக்தர்கள் விழாக் காலங்களிலும், விழா அல்லாத நாட்களிலும் இந்நதியில் நீராடிவிட்டுப் பழனியாண்டவரைத் தரிசிக்கின்றனர். முடிக்காணிக்கை செலுத்துவோர், இதன் கரையிலுள்ள முடிக்காணிக்கை மண்டபத்தில் முடிக்காணிக்கை செலுத்திவிட்டு, நீராடிவிட்டுப் பின் பழனியாண்டவரை வழிபடுவர்.

பழனிவட்டாரத்திலுள்ள நாட்டுப்புறத் தெய்வ வழிபாடுகளின் பொழுது இவ்வட்டாரத்து மக்கள், இந்நதியிலிருந்து தீர்த்தம் எடுத்துக் கொண்டுபோய் அத்தெய்வங்களை நீராட்டி வழிபடுவது குறிப்பிடத்தக்கதாகும்.

பழனிமலைத் தொடரில் உற்பத்தியாகிற, கல்லாறு, கானாறு, பொருந்தலாறு, பச்சையாறு, பாலாறு, வரத்தாறு (வறட்டாறு) ஆகிய சிற்றாறுகள் பழனி நகரின் மேற்கு எல்லையில் ஒன்றாக இணைகின்றன. இவ்வாறுகள் உற்பத்தியாகிற இடங்களிலிருந்து சற்றுத் தொலைவிலேயே ஒன்றிணைந்துவிடுகின்றன. சண்முகநதியாக ஆன பின்னரே அது நீண்டதூரம் பாய்கின்றது. இந்த ஆறுகள் ஒன்றிணைந்து சண்முகநதியாக ஆவதை வையாபுரிப்பள்ளு பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

> **" சுழலினீ ராறுடன் புகழ்**
> **பூதிப் பச்சைப் பாலாறுடன்**
> **தடமிலகிய வரத்தாறு முதல்**
> **அடைவா யாறாறு மோராறாய்ச்**
> **சண்முக நதியும் பெருகிவர"** [56]

என்று சண்முகநதியின் தோற்றம் கூறப்படுகின்றது.

சண்முகநதியின் தீர்த்தச் சிறப்புக் குறித்துப் பழனித் தலபுராணம் சண்முகநதிச் சருக்கம்' எனும் பகுதியில் விரிவாக எடுத்துரைக்கின்றது.

சண்முகநதி தீர்த்தத்தின் கரையில் வேலாயுதப் பெருமான் இப்பூமி உய்யும்படி வீற்றிருந்து, பூரணச் சந்திரனைப் போன்ற ஆறு திருமுகங்கள்

தோறும், திருவருள்மிக்க ஆறுநதிகள் தோன்றி சண்முக நதியாக விளங்கிற்று என்று பழனித் தலபுராணம் சண்முகநதியின் தோற்றம் பற்றிக் கூறுகின்றது. [57]

சண்முகநதியில் நீராடி, முருகப் பெருமானின் திருவடியை வழிபடும் அடியார்களின் பெருமையை எடுத்துரைக்க இயலாது என்று பழனித் தலபுராணம் கூறுகின்றது. மேலும் சண்முகநதி நீரானது சிவசக்தி வடிவமாகவும், அதன் கண்ணுள்ள நுண்ணிய மணல்கள் சிவலிங்கமாகவும் விளங்குகின்றன என்று இந்நதியின் தெய்வீகத் தன்மை குறித்து எடுத்துரைக்கின்றார் பழனித் தலபுராண ஆசிரியர். [58]

சண்முக நதியில் நீராடுவோர் வீடு சேர்வார் என்றும், நீராடி முருகனை வழிபடுவோர் சீவன் முத்தராவர் என்றும் தலபுராணம் குறிப்பிடுகின்றது.

> ***"அண்ணலம்பதி கடம்மிலாவினன் குடியுமாடுந்***
> ***தண்ணமர் நதிகடம்மிற் சண்முகநதியும் போற்று***
> ***மெண்ணரும் தேவர் தம்மின் முருகனுமேற்ற மென்னா***
> ***நண்ணி நின்றாடி யுள்ளே நவின் றருச்சிப்போர் முத்தர்"[59]***

இவ்வாறு, சண்முகநதியின் பெருமையினைப் பழனித் தலபுராணம் குறிப்பிடுகின்றது.

## புண்ணியமும் தூய்மையும்

சண்முகநதியில் நீராடினால் தங்களுடைய பாவம் நீங்கும் என்று பெரும்பாலான பக்தர்கள் நம்புகின்றனர். வேதகாலம் தொடங்கிக் காலந்தோறும் மக்கள் தாங்கள் செய்த பாவங்களைத் தீர்த்துக் கொள்ளவும் புண்ணியத்தைத் தேடிக் கொள்ளவும் வாழ்வியல் கடமைகளை முடித்தோர் சாந்தியடையவும் புண்ணிய ஆறுகளில் புனித நீராடச் செல்கின்றனர். இப்புனித நீராடல் யாத்திரையின் ஒரு முதன்மையான நிகழ்வாக அமைகின்றது. புண்ணிய நீரில் புனித நீராடினால் பாவங்களைத் தீர்த்துக் கொண்டு புனிதமாகலாம் என்ற எண்ணம் மக்களிடம் பன்னெடுங்காலமாக நிலவி வருகின்றது என்று மக்கள் கூறுகின்றார். [60]

புண்ணிய தீர்த்தங்கள் நோய் தீர்க்கும் தீர்த்தங்கள் என்று ராபர்ட்சன் ஸ்மித் குறிப்பிடுவார். நோய் தீர்க்கும் ஆற்றல் (Healing Power) நீருக்கு இயல்பாக வருவதில்லை ; நீரைச் சூழ்ந்துள்ள இயற்கைச் சூழ்நிலைகளால்தான் வருகின்றது என்று ராபர்ட்சன் ஸ்மித் குறிப்பிடுகின்றார்.[61] மலைகளிலும், இயற்கைப் பகுதிகளிலும் தோன்றி ஒன்றாகக் கலப்பதால் மருந்துச்செடி, மூலிகைகள், மருந்து மரத்தின் வேர்கள் இவற்றின் தன்மைகளைச் சண்முகநதி சேர்த்துக் கொண்டு வருகின்றது எனலாம்.

புனித நீரில் உள்ள நோய் தீர்க்கும் ஆற்றல் "அசுத்தம்" எனும் கொடிய தோற்றுநோயைப் போக்குகின்றது[62] என்கிறார். ராபர்ட்சன் ஸ்மித், மேலும், இது தூய்மைப்படுத்தல் எனும் சடங்கின் (purification rites) பாற்பட்டது என்றும் அவர் கூறுவார்.[63]

புண்ணிய நதியாகவும், நோய் தீர்க்கும் ஆற்றல் பெற்றதாகவும் இருப்பதால், சண்முகநதியில் நீராடுவோர் பாவம் நீங்கப் பெறுவதோடு நோய் நீங்கவும் பெறுகின்றனர்.

## பழனிக் கோவிலும் இலக்கியங்களும்

சங்க இலக்கியமான அகநானூற்றில் பொதினிபற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.[64] இவ்வூர், பழங்காலத்தில் ஆவினன்குடி என்று வழங்கப்பட்டதாகவும் ஆவியர் என்னும் அரச குலத்திற்குரிய நகராக இருந்ததாகவும் ரா.பி.சேதுப்பிள்ளை குறிப்பிடுவார். திருமுருகாற்றுப்படை திரு ஆவினன் குடியை மூன்றாவது படைவீடாகக் குறிப்பிடுகின்றது. நீண்ட கால இடைவெளிக்குப் பிறகு முருகன் புகழ்பாடும் அருணகிரிநாதரின் திருப்புகழ், ஆவினன்குடியைப் 12 பாடல்களில் போற்றுகிறது. அடுத்து, பழனி பற்றிப் பல சிற்றிலக்கிய நூல்கள் தோன்றியுள்ளன. இவற்றுள் குறிப்பிடத்தக்கன *பழனித் தலபுராணம், வையாபுரிப்பள்ளு, பழனிப்பிள்ளைத் தமிழ், பழனியாண்டவர் மயில் விடு தூது* ஆகியனவாகும்.

## பழனித் தலபுராணம்

பழனிக் கோவிலை மையமாக வைத்துப் பழனித் தலபுராணம் தோன்றியுள்ளது. 1550ஆம் ஆண்டு தோன்றிய இந்நூலை

இயற்றியவர் பாலசுப்பிரமணியக் கவிராயர் ஆவார். யாழ்ப்பாணம் நா. கதிரைவேற் பிள்ளை இதற்கு உரை வரைந்துள்ளார்.[65]

நூலின் தொடக்கத்தில் அருள்மிகு பிரகதீச்சுரர், அருள்மிகு கைலாசநாதர், அருள்மிகு பெரியநாயகி, அருள்மிகு குழந்தை வேலாயுதசாமி, அருள்மிகு குழந்தை வேலப்பர், அருள்மிகு முத்துக்குமாரசாமி, அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி ஆகிய முக்கிய தெய்வங்களைக் கடவுள் வாழ்த்தில் பாடியுள்ளார். மேலும் ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய நாயன்மார்கட்கு இவர் கடவுள் வாழ்த்துப் பாடியுள்ளார்.

இடும்பன் சத்திகிரி, சிவகிரி ஆகிய மலைகளைக் காவடியாகக் கட்டிக்கொண்டு வந்த செய்தியினை இந்நூல் குறிப்பிடுகின்றது.

**பீடர்பீடந்த புன்குஞ்சியும் பெரிய கருணைக்**
**கடலலம்பு கண்களும் கவினொழுகிய முகமும்**
**வடிவு நூலு மார்பும் கையொண்கோலும் வயங்க**
**நெடிய கோவணவுடையுடன் நின்றது கண்டான்** [66]

என்று சிவகிரியின் ஒரு பக்கத்தில் குராமரத்தின்கீழ் முருகப் பெருமான் நிற்கும் தோற்றத்தை இடும்பன் கண்டான் என்று பழனித் தலபுராணம் எடுத்துரைக்கின்றது. பழனித் தலத்திலுள்ள தீர்த்தச் சிறப்புப் பற்றியும், சண்முகநதியின் பெருமைகளைப் பற்றியும் கூறுகின்றது.

நகர் செய் சருக்கத்தில் பழனித்தலத்தைச் சூழ்ந்த ஆறுகள் பற்றியும், ஊர்கள் பற்றியும் குறிப்பிடுகின்றது. பழனிக் கோவிலின் வரலாற்றை அறியவும், தல மகிமையை அறியவும் இப்புராணம் உதவுகின்றது. அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோவில், அருள்மிகு பெரியாவுடையார் திருக்கோவில், திரு ஆவினன்குடிக் கோவில், மலைக்கோவில் ஆகிய நான்கு கோவில்களின் பெருமைகளையும் இத்தலபுராணம் குறிப்பிடுவது குறிக்கத்தக்கதாகும்.

## வையாபுரிப் பள்ளு

வையாபுரிப் பள்ளு சுமார் முந்நூறு ஆண்டுகட்கு முன் இயற்றப்பட்டது. இதன் ஆசிரியர் பழனிச் சமீன் விசையகிரி

வேலச்சின்னோவையன் ஆவார். இந்நூல் பழனி முருகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது. இப்பள்ளு 247 செய்யுட்களைக் கொண்டது. பள்ளரினமக்களின் வாழ்க்கை முறைகள், பழக்க வழக்கங்கள், பழனித்தல வரலாற்றுக் குறிப்புக்கள் முதலிய பலவற்றையும் இந்நூல் குறிப்பிடுகின்றது.

முருகப் பெருமான் பண்ணையிலிருந்து படித்தரம் அளிக்கப்பட்ட கோவில்கள், மடங்கள், சத்திரங்கள் முதலியவற்றை இந்நூல் குறிப்பிடுவது இத்திருக்கோவில் வரலாற்றை அறிய உதவுகின்றது.

பழனியைச் சுற்றிலுமுள்ள 33 நாட்டுப்புறத் தெய்வங்களின் பெயர்களையும் வழிபாட்டு முறைகளைப்பற்றியும் இந்நூல் எடுத்துரைக்கின்றது.

## பழனிப் பிள்ளைத்தமிழ்

பழனிக் கோவிலின் வரலாற்றை அறிய இந்நூல் உதவுகின்றது. இந்நூல் 31 பாடல்களைக் கொண்டது. இந்நூலை இயற்றியவர் பழனிச் சமீன் விசயகிரி வேலச்சின்னோவையன் ஆவார்.

இப்பிள்ளைத் தமிழில் உள்ள 'வருகைப் பருவப்' பாடல்கள் மூன்றும் அருள்நலமும், இலக்கிய நயமும் கொண்ட பாடல்களாகும். காட்டாகப் பின்வரும் பாடலைக் குறிப்பிடலாம்.

**"பொன்னே வருக பொன்னரைஞாண்**
**பூட்ட வருக சிறு சதங்கை**
**புனைய வருக மணிப்பதக்கம்**
**பூண வருக தவழ்ந்தோடி**
**முன்னே வருக செவிலியர்கண்**
**முகத்தோ டணைத்துச் சீராட்டி**
**முத்த மிடற்கு வருக வெதிர்**
**மொழிகண் மழலை சொல வருக**
**தன்னே ரில்லா நுதற்றிலதந்**
**தரிக்க வருக விழியினின்மை**
**சாத்த வருக மேலாகத்**
**தானே வருக தேவர் தொழ**

**மன்னே வருக மாமாவின்**
**மருகா வருக வருகவே**
**வளஞ்சேர் பழனிச் சிவகிரிவாழ்**
**வடிவேல் முருகா வருகவே" [67]**

என்று பழனி முருகனை அழைக்கின்றார் நூலாசிரியர்.

**" தவளங் கொழிக்குந் திருப்பழனித் தலைவா**
**தாலோ தாலே லோ**
**சைவந் தழைக்கப் பிறந்தருளுஞ் சதுரா**
**தாலே தாலேலோ" [68]**

பழனி முருகனைப் பழனித்தலைவன் என்றும், சைவம் பிழைக்கப் பிறந்த தலைவன் என்றும் குறிப்பிடுகின்றார்.

## பழனியாண்டவர் மயில்விடுதூது

இந்நூலை இயற்றியவர் கவியரசு கு. நடேசக் கவுண்டர் ஆவார். முருகப் பெருமானிடம் மயிலைத் தூதாக அனுப்புகின்றார். பழனித் தலச்சிறப்பு, மலைக்கோவிலில் நிகழும் பூசைகள், வழிபாட்டுமுறைகள், பூசையின் போது கமழும் நறுமணங்கள், தேவார-திருப்புகழிசை, பக்தர்கள் கூறும் அரகர மந்திர ஒலி, முருகனுக்குச் செய்யப் பெறும் அபிடேகங்கள், முருகப் பெருமான் உலா வரும் காட்சி, பழனியாண்டவரின் அருள்பாலிக்கும் திறம் முதலியனவற்றைப் பக்திச்சுவை ததும்ப எடுத்துரைக்கின்றார் கவியரசு கு. நடேசக் கவுண்டர். எடுத்துரைத்தல் முறையில் (Narrative) சொல்லிச் செல்லும் பாங்கும், வருணனைத் திறனும் இந்நூலாசிரியனின் கவித்திறனைக் காட்டுகின்றது.

***சந்தனச் சாந்தின் மணமோ தண் பனி நீர் வாசனையோ***
***மந்திரமாம் வெண்ணீற்றின் மாமணமோ – பந்தமுறு***
***மாலைகளின் தாமணமோ மட்டற்ற தேனறுநெய்***
***ஆலை தரு பூங்கழைச்சா றைந்தமிர்தம் – கோலக்***
***கலயரிடு குங்கலியம் காரகிலின் றூப***
***மலையு மணமோ வகுத்துச் – சொலவொண்ணா***
***தோதுந் திருப்புகழ் தேவார மோங்கிசையோ***
***கீதங்க ளின்முழக்கோ கேடில்லா – நாதகர***

வாசினையோ கண்டா மணி முழக்கோ தொண்டர் குழாம்
ஆசி லரஹரவென் னார்ப் பொலியோ – பேசுங்கால்
ஏது பெரிதென் றியம்ப லெளிதன்று
சோதி திருவாலயத்துட் தொண்டர் குழாம் – கோதில்
ஒருவர் திருமார்பி லுற்றதிரு வெண்ணீ
றொருவர் முதுகிலுற வீண்டித் – திருமுன்னர்ச்
சேவித்து நிற்கும் திறங்கண்டவர் போலப்
பாவித்து நின்று பரவினேன்"[69]

என்று கவிஞர் மலைக்கோவிலில் நிகழும் பூசைச் சிறப்பினை எடுத்துரைக்கின்றார்.

ஞானவடிவேல் வலக்கை நண்ணுமுரு கேசனைப்
பானல்வாய் ஞானம் பரிமளிக்கும் – மோன
ப்ரமகுரு நாதனைப் பண்ணவர்தம் கோவை
வாதனைமெய் யன்பர்தமை வாழ்த்தும் – வீரதனை
மாணிக்க வண்ணனை வண்பவளத் தின்றிரளை
ஆணிக் கனகத்தை யாரொளியைப் – பேணுநரைப்
பேணிப் பிறப்பிறப்புப் பேராழி நீக்கியருள்
தோணியை முத்தியினைத் துய்க்கவீடும் ஏணியை
அன்பர்க் கிருநிதியை யாரமுதை யோர்முக்கண்
இன்பக் கரும்பி யெழுஞ்சாற்றைத் –துன்பமற
வேததரு மீது விளையு நறுந்தேனைத்
தீதகலு மெய்ஞ் ஞானத் தீங்கனியைச் – சோதி
யயில்வே லருட்பழனி யாண்டவனை யென்பால்
மயிலே விரைந்தழைத்துவா"[70]

என்று பழனியாண்டவரிடம் கவிஞர் மயிலைத் தூதுவிடுகின்றார். முருகப் பெருமானின் சிறப்புக்களையெல்லாம் எடுத்துக் கூறி நூலை முடிக்கின்றார் ஆசிரியர்.

முருகன் கோவில் கொண்ட இத்தலம் தமிழிலக்கியங்களில் தொடர்ந்து குறிக்கப்பட்டுவந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும். பழனியாண்டவர் மீது நூற்றுக்கும் மேற்பட்ட பக்திச் சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன.

# குறிப்புக்கள்

1. பி.ஸ்ரீ. ஆறுபடைவீடுகள். (பழனி). ப. 7.
2. பாலசுப்பிரமணியக் கவிராயர். பழனித்தலபுராணம். சேரர்கோன் சருக்கம். பா.எண். 23.
3. மேலது. பா.எண். 24.
4. மேலது. பா.எண். 31.
5. கோ.ம. இராமச்சந்திரன் செட்டியார். கொங்குநாட்டு வரலாறு. ப. 2.
6. மேலது. ப. 2.
7. மேலது. ப. 4.
8. மயிலை. சீனி. வேங்கடசாமி. கொங்குநாட்டு வரலாறு. ப. 156.
9. மேலது. ப. 150.
10. முருகவேள் பன்னிரு திருமுறை - தொகுதி 1. திருஆவினன்குடி. பா.எண். 100.
11. (ஆ.பெஇ). பழனி ஸ்தல வரலாற்றின் ஆதி கொடிவழி விபரம். ப. 37.
12. கோ.ம. இராமச்சந்திரன் செட்டியார். மு.நூல்.. ப. 37.
13. பா.அ.ம. மணிமாறன். மதுரை மாவட்ட ஊர்ப்பெயர்கள் - ஓர் ஆய்வு. ப. 128.
14. M.S. Baliga, *Madurai*, Gazetteer of India; MADRAS, p. 415.
15. சோமலெ. மதுரை மாவட்டம். ப. 379.
16. Mannual of the Administration of the Madras Presidency, Vol. III, p. 724.
17. பாலசுப்பிரமணியக் கவிராயர். பழனித் தலபுராணம். திருவாவினன்குடிச்சருக்கம். பா.எண். 73.
18. பா.அ.ம. மணிமாறன். மு.நூல்.. ப. 128.
19. கந்தரலங்காரம். பா.எண். 75.
20. முருகவேள் பன்னிரு திருமுறை. தொகுதி -1. திரு ஆவினன்குடி. பா.எண். 194.
21. மேலது. பா.எண். 170.
22. திருப்புகழ். மூன்றாம் தொகுதி. பழனி. பா.எண். 38.
23. மேலது. பா.எண் 36.
24. விசையகிரி. வேலச்சின்னோவையன். பழனிப் பிள்ளைத்தமிழ். பா.எண். 18.
25. மேலது. பா.எண். 8.
26. சோழன்பூர்வ பட்டயம். ப. 65
27 சே. தண்டபாணி தவராஜ பண்டிதர். இ.ஆ.. பழனியாண்டவர் விழா தத்துவ விபரம். (கையெழுத்துப் பிரதி. 9-7-1966) ப. 13.

28. முருகவேள் பன்னிரு திருமுறை. தொகுதி-1.
திருஆவினன்குடி. பா.எண் 160.
29. (ஆ.பெ.இ). பழனித்தல வரலாறும் திருக்கோவில் வழிபாடும். ப. 11.
30. ரா.பி. சேதுப்பிள்ளை. தமிழகம் ஊரும்பேரும். ப. 90.
31. திருமுருகாற்றுப்படை. அடி. 175-176
32. கந்தபுராணம். பா.எண். 16.
33. திருப்புகழ். மூன்றாம் தொகுதி. பழனி. பா.எண். 1.
34. மேலது. பா.எண். 10.
35. மேலது. பா.எண். 7.
36. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.
பழனித் திருவாயிரம்; முதற்பகுதி வெண்பாமாலை. பா.எண். 31 .
37. தொல். பொருளதிகாரம். நூற்பா. 5.
38. திருப்புகழ். மூன்றாம் தொகுதி. பழனி. பா.எண். 60.
39. மேலது. பா.எண் 51.
40. மேலது. பா.எண் 28.
41. மேலது. பா.எண் 58.
42. நஜன். முருக தரிசனம். ப. 70.
43. T.A. Gopinatha Rao, Elements of Hindu Iconography, Vol. II, p.426.
44. பி.ஸ்ரீ., மு. நூல்., ப. 8.
45. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். பழனித்திருவாயிரம்;
முதற்பகுதி. வருகைப்பருவம். பா.எண். 1.
46. மேலது. முதற்பகுதி. அலங்காரம். பா.எண். 2.
47. மேலது. இரண்டாம் பகுதி. யமக அந்தாதி. பா.எண். 4.
48. மேலது. முதற்பகுதி. அலங்காரம். பா.எண். 3.
49. பி.ஸ்ரீ. மு.நூல்., ப. 11.
50. அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் திருக்குட
நன்னீராட்டுப் பெருவிழா மலர். பக். 123 -124..
51. இந்த நாட்டுப்புறக் கதையைக் கூறியவர்
பி. இராமசாமிக் கவுண்டர். வயது 45. நாள்: 7-2-81.
52. கே. சாமியப்பன். வயது 48. பேட்டி நாள் 10-2-81
53. பாலசுப்பிரமணியக் கவிராயர். மு.நூல். கன்னிகார வனச்சருக்கம். பா.எண். 16.
54. (ஆ.பெ.இ). பழனித்தல வரலாறும் திருக்கோயில் வழிபாடும்.
தண்டாயுதபாணி சுவாமி தேவஸ்தான வெளியீடு. 1964. ப. 19.
55. மேலது. ப. 21.
56. விசையகிரி வேலச்சின்னோவையன். வையாபுரிப்பள்ளு. பா.எண். 64.
57. பாலசுப்பிரமணியக்கவிராயர். மு.நூல்., சண்முகநதிச் சருக்கம். பா.எண். 2.

58. மேலது. பா.எண். 7
59. மேலது. பா.எண் 9
60. பக்தவத்சலபாரதி. தமிழர் மானிடவியல். ப. 271.
61. Robertson Smith, The Religion of Semities, p. 183.
62. Ibid., p. 184.
63. Ibid., p. 184.
64. அகநானூறு. பா.எண். 1. 17.
65. பழனித் தலபுராணம் ப. 8
66. மேலது மலைகள் பழனியடைந்த சருக்கம். பா.எண். 64.
67. விசையகிரி வேலச்சின்னோவையன். பழனிப் பிள்ளைத்தமிழ். பாஎண். 19.
68. மேலது. பா.எண். 9.
69. கவியரசு. கு. நடேசக் கவுண்டர்.
பழனியாண்டவர் மயில் விடுதூது. அடிகள் 124-134.
70. மேலது. அடிகள் 391-399.



# உ. பழனி முருகன் கோவில் வழிபாடுகள்

நாள்வழிபாடும் திருவிழாவும் கோவில்களுக்குரிய சிறப்பான பண்புகளாகும். நாள்தோறும் அதிகாலையில் தொடங்கி இரவு வரை கோவிலின் உட்பகுதியில் மூலவருக்கும், பரிவார தெய்வங்கட்கும் செய்யப்படுகின்ற பூசைகள் நாள்வழிபாடு எனப்படும். விழா என்பது கோவிலின் உள்ளும் வெளியும் நடக்கின்ற சமய நிகழ்வுகளாகும். விழாக்கள் நடைபெறும் பொழுதும் நாள்வழிபாடுகள் எப்போதும் போல் தொடர்ந்து நடைபெறுவதுண்டு.

பழனி முருகன் கோவிலில் நடக்கின்ற நாள்வழிபாடுகள், விளக்க அடிப்படையில் தரப்படுகின்றன. நாள்வழிபாட்டின் கூறுகள் என்று கருதப்படக் கூடியவை பூசை, அபிடேகம், அருச்சனை, அலங்காரம் ஆகியனவாம். இவற்றைக் கண்டறிய கள ஆய்வில் உற்று நோக்கலும், குருக்கள் மற்றும் அடியார்களுடனான பேட்டிகளும் பயன் படுத்தப்பட்டுள்ளன.

## நாள் வழிபாட்டின் விளக்கமும் நோக்கமும்

வழிபாடு, ஏதாவது ஒரு நோக்கினை அடிப்படையாகக் கொண்டு அமைவது. "மனிதனை அவனுடைய புலன்களைச் சரிவரப் பயன்படுத்தி புலனுணர்வுத் தன்மையினின்று இறைத்தன்மைக்கு உயரச் செய்வதே இறைவழிபாட்டின் நோக்கம்" [1] என்று டி.எம்.பி. மகாதேவன் வழிபாட்டின் நோக்கம்பற்றிக் கூறுகின்றார். இவ்விளக்கம் இறைவழிபாட்டின் நோக்கம் பற்றிக் கூறுவதோடு மட்டுமல்லாமல், வழிபாட்டினால் உடலில் ஏற்படும் (Transformation of human body) மாற்றம் பற்றியும் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

**"அன்புடனே நின்றமுதமும் ஏற்றியே**
**பொன்செய் விளக்கும் புகைதீபந் திசை தொறுந்**
**துன்பம் அகற்றித் தொழுவோர் நினையுங்கால்**
**இன்புடனே வந் தெய்திடும் முத்தியே "** [2]

என்று வழிபாடு பற்றித் திருமூலர் எடுத்துரைக்கின்றார்.

உள்ளன்புடன் இறைவனுக்கு அமுது படைத்தல் வேண்டும், திருவிளக்குகள் எல்லாப்பக்கமும் ஏற்றி வழிபடுதல். வேண்டும் புகையும், ஒளியும் காட்டி வழிபடுதல் வேண்டும். மணியும், இயமும், இயம்புதல் வேண்டும். இவ்வாறு வழிபட்டால் திருவடிப் பேரின்பம் உடனே கைகூடும் என்கிறார் திருமூலர்.

**வழிபாட்டிற்குரிய உறுப்புக்கள் ஐந்து : அவையாவன,**

1. பூவும் புகையும், 2. புனலும் படைப்பும், 3 விளக்கும் ஒளியும், 4. பாவும் பண்ணும், 5. மணியும் இயமும்.

**எய்தி வழிப்படில் எய்தா தனவில்லை**
**எய்தி வழிப்படில் இந்திரன் செல்வமுன்**
**எய்தி வழிப்படில் எண்சித்தி உண்டாகும்**
**எய்தி வழிப்படில் எய்திடும் முத்தியே** [3]

என்கிறார் திருமூலர். மெய்ம்மையாக வழிபாடு செய்தால் இவ்வுலகின் கண் எய்த வேண்டுவன அனைத்தும் எய்தும். மேலும், தேவவுலக வாழ்வும் கிட்டும். எண்வகையான சித்திகளும் கைகூடும்; வீடு பேறு கிட்டும். இவ்வாறு வழிபாட்டின் பயன் குறித்து எடுத்துரைக்கின்றார்

திருமூலர். கைகளை உச்சியின் மேல் குவித்துக் கசிந்த உள்ளத்துடன், பாட்டுப்பாடி வழிபட்டால் இறைவன் உள்ளத்தில் தோன்றுவான் என்று இயம்புகின்றார் திருமூலர்.

முருகனை வழிபடுவோர்க்கு முருகனிடத்து இடையறாத உறுதி இருக்கவேண்டும்; உறுதியுடன் வழிபட்டால் அருள், செல்வம் முதலிய எல்லாச் செல்வங்களையும் முருகன் அளிப்பான் என்று முருக வழிபாட்டின் அடிப்படை பற்றித் திரு.வி.க. கூறுகின்றார்.[4]

சைவத் திருக்கோயில்களில் நடைபெறும் வழிபாடுகளை மூன்று வகையாகப் பகுப்பர். ஆகமங்கள் இவற்றைக் கிரியைகள் எனக் குறிப்பிடும். "இவை நித்தியக் கிரியைகள், நைமித்திகக் கிரியைகள், காமியக் கிரியைகள் எனப் பெயர் பெறுவன. தினந்தோறும் நிகழுங் கிரியைகள் 'நித்தியக் கிரியைகள்' . நிமித்தம் என்பது காரணம். எனவே, நைமித்திகக் கிரியைகள் காரணங்கொண்டு நிகழ்வன. பெறு பேற்றினை அவாவிச் செய்யப்படுங் கிரியைகள் காமியக் கிரியைகள் எனப்படும் "[5] என்று மூவகை வழிபாடுகள் பற்றிக் கைலாசநாத குருக்கள் குறிப்பிடுகின்றார்.

## நித்தியக் கிரியைகள்

நித்தியக் கிரியைகள் என்று சொல்லப்படுபவை நாள்வழிபாடுகள் ஆகும். மூலவருக்கு நாள்தோறும் தொடர்ந்து ஒரே சீராக நடைபெறும் வழிபாடு இது.

## நைமித்திகக் கிரியைகள்

நைமித்திகக் கிரியை என்பது சிறப்பு நாட்களில் மட்டும் நிகழ்வதாகும். இவ்விசேட தினங்கள் வாரத்திற்கு ஒருமுறை அல்லது இரு வாரத்திற்கு ஒருமுறை நிகழலாம். மேலும், மாதத்திற்கு ஒருமுறை அல்லது சில மாதங்களுக்கு ஒருமுறையோ வருடமொரு முறை அல்லது, பல வருடங்களுக்கு ஒருமுறையோ நிகழும் நைமித்திகக் கிரியைகளுமுண்டு என்று கைலாசநாத குருக்கள் கூறுவார்.[6] பழனி முருகன் கோவிலில் மாதந்தோறும் வரும் கார்த்திகை சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. கார்த்திகையையும், திருவிழாக்களையும், நைமித்திகக் கிரியைகளில் அடக்கலாம்.

## காமியக் கிரியைகள்

பலனை அவாவி ஆண்டவனை வழிபடுவது மானிடரின் பொதுவான இயல்பு. உயர்நிலை எய்திய ஒருசிலர் மட்டுமே தாம் செய்பவற்றைப் பலன் கருதாது செய்வர். பலன் அவாவிக் கிரியைகள் நிகழ்த்தும் பெரும்பாலோர்க்கு உரியவாறு அமைவது காமியக் கிரியையாகும்.' வேண்டுதல்' கருதிச் செய்வது இது. ஆயின் பயன்கருதாது செய்யும்-நிஷ்காமியமாகச் செய்யும் ஏனைய கிரியைகளே சிறந்தன என்பார் கைலாசநாத குருக்கள்.[7]

பழனியில் உள்ள மலைக்கோவிலிலும், திரு ஆவினன்குடிக் கோவிலிலும் குமாரதந்திரத்தினை அடிப்படையாகக் கொண்டும், அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலிலும், அருள்மிகு பெரியாவுடையார் கோவிலிலும் சிவாகமங்களை அடிப்படையாகக் கொண்டும் வழிபாடுகள் செய்யப்படுகின்றன.[8]

குமாரதந்திரம் வடமொழி ஆகம நூலாகும். நாள்வழிபாடு, மாதவழிபாடு, ஆண்டு விழாக்கள் ஆகியவற்றின்போது பின்பற்றப்பட வேண்டிய நியதிகளை இவ் ஆகமம் விரிவாகக் கூறுகின்றது.[9]

## மலைக்கோவிலில் நடைபெறும் நாள்வழிபாடு:[10]

### 1. விசுவரூபதரிசனம் (காலை 6 மணி)

முதலில் நடைபெறும் நிகழ்ச்சி விசுவரூப தரிசனம் ஆகும். முருகனுடைய விசுவரூபம் என்பது புராண அடிப்படையில் சூரபத்மன்வதையின்போது அவன்முன் காட்டிய பெருந்தோற்றமாகும். சூரபத்மன் விசுவரூப மகிமையைப் புரிந்து கொள்ளவில்லை. பள்ளியறையிலிருந்து எழுந்துவரும்போதுதான் சகல கோவில்களிலும் ஒரு மூர்த்தியின் சக்தி பரவி நிறைவதாகக் கூறுவர்.[11]

துவார விநாயகர் தீபாராதனையும், பள்ளியறை தீபாராதனையும் நடைபெற்றபின் உள்ளிருக்கும் மூலவருக்குத் தீபாராதனை செய்யப்படுகிறது. பழனி முருகனின் விசுவரூப தரிசனம் காண்பது மிக முக்கியம் என்று பக்தர்கள் கருதுகிறார்கள். அதிகாலை நேரத்தில் மலையேறிச் சென்று, மலைமீது வீசும் மலைக்காற்றினை நுகர்ந்து கொண்டு பழனியாண்டவரை வழிபடுவது உடலுக்கும் உள்ளத்துக்கும் மிக நன்மை பயப்பது ஆகும்.



காவடிக் கூட்டத்துடன் தப்பு அடித்து வருவோர்



"திடும்" அடிக்கும் கூட்டத்தினர்



பாட்டுப் பாடிக்கொண்டு வரும் பாதயாத்திரைக் குழுவினர்



தைப்பூசத் திருவிழா – பாதயாத்திரைக்குழுவினர்

2. *விழாபூசை (காலை 7-15 மணி)*

ஆத்மார்த்த மூர்த்திகளை ஆண்டவர் திருமுன்பு வைத்துப புண்ணியாக வசனம் செய்து, நான்கு திக்கிலும் புனித நீர் தெளித்துப் பின், அர்த்த மண்டபத்திலுள்ள சொக்க விநாயருக்கு அபிடேக அலங்காரம் செய்து, ஆண்டவருக்கும் ஆத்மார்த்த மூர்த்திக்கும் பூசை செய்யப்படும்.

ஆண்டவர் கோவில் கொண்டு விளங்கும் கருவறையில், ஆண்டவருக்கு இடதுபக்கத்தில், படிகலிங்க வடிவில் ஈசுவரனும், அம்பிகையும், சாலிக்கிராமமும் ஒரு பேழையில் வைக்கப்பட்டுள்ளன. விழாபூசையின்போது, ஆண்டவர் முதலில் தாமே தம் ஆத்மார்த்த மூர்த்தியாகிய ஈசுவரனைப் பூசித்து வழிபடுவதாகக் கொள்வது ஐதீகம். அதனால், இக்காலத்தில் செய்யப்படும் அபிடேகங்கள் முதலில் ஆத்மார்த்த மூர்த்திக்கும், அடுத்து ஆண்டவருக்கும் செய்யப்படும். ஏனைய காலங்களில் ஆத்மார்த்த மூர்த்திக்குத் தனி அபிடேகம் இல்லை. அபிடேகம், அலங்காரம், அர்ச்சனை ஆனபின், ஆத்மார்த்த மூர்த்திக்குத் தூபதீப நைவேத்தியமும், ஏகதீபாராதனையும் செய்யப்பட்டு அன்பர்கட்குப் பிரசாதம் வழங்கப்படும். இக்காலத்தில், ஆண்டவருக்குக் காவியுடையொடு வைதிக கோலத்தில் அலங்காரம் செய்யப்படும்.[12]

3. *சிறுகாலசந்தி (காலை 8 மணி)*

ஆண்டவருக்கு, அபிடேகம், அலங்காரம், அருச்சனைக்குப்பின் நைவேத்தியம், ஏகதீபாராதனைகாட்டி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கப்படுகிறது. வெண்ணெய், வெண்பொங்கல் நைவேத்யமாகப் படைக்கப்படுகிறது. இவற்றுடன் கோதுமை ரொட்டியும் பிரசாதமாகப் படைக்கப்படுவதாகக் கோவில் குருக்கள் பேட்டியின்பொழுது குறிப்பிட்டார்.[13]

4. *காலசந்தி (காலை 9 மணி)*

சிறுகாலசந்தியினைப் போலவே வழிபாடு நிகழும், வெண்பொங்கல் நைவேத்யமாகப் படைக்கப்படும்.

### 5. *உச்சிக்காலம்* (பகல் 12 மணி)

உச்சிக்காலபூசை முக்கியப் பூசையாகக் கருதப்படுகிறது. ஆண்டவருக்கு அபிடேக அலங்கார அருச்சனைக்குப் பின் தளிகை நைவேத்தியம் செய்து, சோடச தீபாராதனையும் உபசாரங்களும் செய்யப்பட்டுப் பக்தர்களுக்குப் பிரசாதம் வழங்கப்படும். இக்காலத்தில் ஆண்டவருக்குக் கிரீடத்தொடுகூடிய வைதிக அலங்காரம் செய்யப்படும். தீபாராதனைக்குப் பின்னர் தேவாரம் இசைத்தலும், கட்டியங்கூறலும் நடைபெறும். சிறப்பு நாட்களில் இவற்றோடு கந்தபுராணம் சொல்லலும், வேதம் ஓதுதலும் நிகழும்.

### *காட்டப்படும் சோடச தீபங்கள்*

அலங்கார தீபம், நட்சத்திர தீபம், பஞ்சமுக தீபம், கைலாச தீபம், சர்ப்ப தீபம், மயூர தீபம், குக்குட தீபம், கஜ தீபம், அஜ தீபம், புருஷாமிருக தீபம், பூரணகும்ப தீபம், பஞ்சஸ்தம்ப தீபம், சதுர்ஸ்தம்ப தீபம், காயத்திரி தீபம், வாமதேவ தீபம், ஈசான தீபம் பின்னர் கற்பூர தீபம் என்பன சோடச தீபங்களாகும்.

### *தீபம் காட்டும்முறை*

தீபம் காட்டும் முறைகளைப் பற்றி ஆகமங்கள் கூறுகின்றன. "பரிசாரகர் தரும் தீபத்தை நிரிஷணம் முதலிய சம்ஸ்காரங்கள் செய்து, மலரால் அருச்சித்துக் கையில் வாங்கி சுவாமிக்கு நேரே உயர்த்தி; முதலில் இடது கண்ணுக்கு நேரிலும்; பின்னர் வலது கண்; நெற்றி ஆகிய இடங்களிலும் காலிலிருந்து தலைவரையும் மூன்று முறை சுற்றிக்காட்டல் வேண்டும். தலையிலும், நெற்றியிலும், கழுத்திலும், மார்பிலும், பாதங்களிலும் தனித்தனி 'பிரணவாகாரமாகச்' சுற்றிக் காட்டும்முறை ஆகமங்களில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.[14]

பழனி முருகன் கோவில் உச்சிக்காலம் பூசையின் போது நீண்ட நேரம் நிகழும் வழிபாடு சோடச தீபாராதனை ஆகும். விழாக் காலங்களில் தலைமைக் குருக்கள் இதனை நிகழ்த்துகின்றார். இத்தீபாராதனை பழனி முருகன் கோவில் பூசைகளில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

ஒவ்வொரு தீப வழிபாட்டிற்கும் தத்துவ விளக்கம் கூறப்படுகிறது. 'தீபத்தினால் ஒருகிளை விழிப்பு உண்டாகும். மகா தீபத்தினால் சாம்ராஜ்யம் கிடைக்கும். நாக தீபத்தினால் உயர்ந்த பதவி கிடைக்கும். விருஷப தீபமானது இராஜ்யத்தை அளிக்கும். புருஷாமிருக தீபமானது பிணி நீக்கமளிக்கும்' என்று சோடச தீபங்களின் தத்துவம்பற்றி 'சோடசதீப விளக்கம்' சுட்டிக் காட்டுகின்றது.[15] தீப வழிபாடு வெறும் சடங்காக இல்லாமல் தத்துவம் சார்ந்ததாகவும் பயன் விளைவிப்பதாகவும் கருதப்படுவது குறிப்பிடத்தக்கது.

### 6. *சாயரட்சை (மாலை 5-30 மணி)*

ஆண்டவருக்கு அபிடேக அலங்கார அருச்சனைக்குப்பின் தளிகை நைவேத்தியம் செய்யப்படுகிறது. சோடச தீபாராதனையும், உபசாரங்களும் நடைபெற்றபின் அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கப்படும்.

### நாள்தோறும் நிகழும் தங்கரத வைபவம்

மாலை வழிபாடு முடிந்தபிறகு நித்திய காமிய உற்சவமாகத் தங்கரத வைபவம் நாள்தோறும் பழனி மலைக்கோவிலில் இடம்பெறுகிறது. அடியார்களின் விருப்பத்தின் பொருட்டுத் திருக்கோவில் நிர்வாகத்தினர் இதனைக் குறிப்பிட்ட கட்டணம் பெற்றுக்கொண்டு நடத்திக் கொடுக்கின்றனர். முதலில் உற்சவமூர்த்தியாகிய சின்னக்குமரர், தங்கமயில் வாகனத்தில் கோவிலின் உட்பிரகாரத்தில் இருமுறை உலா வருகிறார். உற்சவமூர்த்தியின் முன் குடையும், சுருட்டிகளும், சூரிய சந்திர பிரபைகளும் பணியாளர்களால் கொண்டு செல்லப்படுகின்றன. நாதசுர இசையுடன் உற்சவர் அழைத்துச் செல்லப்படுகிறார். ஓதுவார்கள், தேவாரப்பாடல்களை இனிமையாகப் பாடிக்கொண்டு உடன் செல்கின்றனர். மேலும் நறுமணப்புகை போடுபவரும், கட்டியங்கூறுவோரும், கந்தபுராணம் ஓதுவோரும் உற்சவருக்கு அருகில் அணி வகுத்துச் செல்கின்றனர்.

தங்கமயில் உலாவிற்குப்பின்பு சரியாக ஏழு மணிக்குச் சின்னக்குமரர் வெளிப்பிரகாரத்திலுள்ள தங்கரதத்தில் எழுந்தருளப்பெற்று வெளிப்பிரகாரத்தில் வலம் வருகின்றார். தங்கரத உலாவின்பொழுது

ஒன்பது பலிபீடங்களுக்கு அருகிலும், சிறிதுநேரம் தேர் நின்று பலிபீடப் பூசைகள் செய்யப்பெறுகின்றன. இதன்போது கட்டியம் கூறுபவர், இப்பலிபூசைகளின் பொழுது தேருக்கு முன்னின்று கட்டியம் கூறுகின்றார். 'கட்டியம் கூறுதல்' என்பது பழனி முருகனின் பெருமைகளையும், சிறப்புக்களையும் எடுத்துக்கூறும் வாய்மொழிப்பாடலாகும். இவ்வாய் மொழிப்பாடலைக் கட்டியம் கூறுவோர் தலைமுறை தலைமுறையாகப் பாடிவருகின்றார். பழனி முருகன் கோவில் வழிபாட்டில் வாய்மொழி மரபு (Oral tradition) இடம் பெற்றுள்ளது என்பதற்குக் கட்டியப் பாடல் சான்றாகும். இறுதியில் தங்கரதம் இழுப்பதற்கு வேண்டிக்கொண்ட அடியார்கட்குப் பரிவட்டம் கட்டித் திருக்கோவில் மரியாதைகள் செய்யப்படுகின்றன.

தங்கரத வைபவத்தின்போது நூற்றுக்கணக்கான அடியார்கள் கலந்துகொண்டு முருகனை வழிபடுகின்றனர். இது ஒரு விழா போன்றே நடை பெறுகின்றது. தங்கரதம் 1958ல் செய்யப்பெற்றது. இதன் பிறகே இத்தகைய உலா தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இது செல்வாக்குப் பெற்றதாக ஆகிவிட்டமையினால், இதன் தாக்கத்தில் இன்று தமிழகத்தில் பல பெருங்கோவில்களில் தங்கரதம் செய்யப்பட்டு உலாக்கள் நிகழ்த்தப்பெறுகின்றன.

## 7. இராக்காலம் (இரவு 8- மணி)

இராக்காலப் பூசை, இத்திருக்கோவிலில் நடைபெறும் பூசைகளுள் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். பெரும்பாலான பக்தர்கள், இராக்காலப் பூசையின்பொழுது பழனியாண்டவரை வழிபட வேண்டும் என்று வெளியூரிலிருந்து பழனிக்கு வருகின்றனர்.

கார்த்திகை நாட்களிலும், தைப்பூசம், பங்குனி உத்திரம் ஆகிய விழா நாட்களிலும் இராக்காலப் பூசையைக் காணப் பக்தர்கள் திரளாகக் கூடுகிறார்கள்.

ஆண்டவருக்கு அபிடேக, அலங்கார அருச்சனைக்குப்பிறகு நைவேத்தியம் செய்து ஏக தீபாராதனை முடிந்தபின் அன்பர்கட்குத் தேனும் தினைமாவும் பிரசாதமாக வழங்கப்படுகின்றன. இக்காலங்களில் மலைக்கோவிலிலுள்ள சண்முகர், சின்னக்குமரர் ஆகிய மூர்த்திகளுக்குத் தளிகை நைவேத்தியத் தீபாராதனை உண்டு.

இராக்காலப் பூசையின்போது பக்தர்களுக்குத் தேனும் தினைமாவும் பிரசாதமாக வழங்கப்பட்டு வருவது பண்டைய குறிஞ்சிப் பண்பாட்டினை உணர்த்துகிறது.

இராக்காலத்தின்பொழுது பழனியாண்டவருக்கு மணம் கமழும் மலர்களால் அலங்காரம் செய்து வழிபடுகின்றனர். மனோரஞ்சிதப்பூ, பன்னீர்ப்பூ, பிச்சிப்பூ இம்மூன்றும் கலந்த மாலை மட்டும் சாமி கழுத்தில் விடியும்வரை இருக்கும் என்று திருக்கோவில் மாலை கட்டுபவர் பேட்டியின்பொழுது தெரிவித்தார்.[16] இராக்காலப் பூசையின் பொழுது அர்த்த மண்டபம் முழுதும் நறுமணம் கமழும்.

**"நித்யக்கற் பத்திற் சித்தர்க**
**ளெட்டுத்திக் குக்குட் பட்டவர்**
**நிஷ்டைக்கற் புற்றப் பத்தர்கள் அமரோரும்**
**நெட்டுக்குப் புட்பத்தைக் கொடு**
**முற்றத்துற் றர்ச்சிக் கப்பழ**
**நிக்குட்பாட் டத்துக் குற்றுரை பெருமாளே"**

(திருப்புகழ். 44)

என்று பழனி முருகன் கோவில் வழிபாட்டில் நறுமணம் கமழும் மலர்கள் இடம்பெற்றது பற்றி அருணகிரி நாதர் குறிப்பிடுகின்றார்.

'கற்பம்' உண்ட சித்தர்கள் எப்போதும் அழியாது வாழ்ந்து கொண்டிருப்பவர்கள். அப்படிப்பட்ட சித்தர்களும், எட்டுத்திக்கில் உள்ளவர்களும், நிஷ்டையில் ஈடுபட்டோரும் பழனி முருகன் கோவிலுக்கு வந்து, முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள கருவறையில் நெட்டுக்கு மலர்களைத் தூவி பழனியாண்டவரை வழிபடுகின்றனர் என்று அருணகிரிநாதர் கூறுகின்றார். சித்தர்களின் குருவாக விளங்கும் முருகப் பெருமானை, சித்தர்கள் வழிபடுவது பழனி முருகனின் சிறப்பினை எடுத்துக் காட்டுகின்றது.

"கோவிலின் உள்ளே சந்தனத்தின் பரிமளம், மாலையின் பூமணம், தேன், நெய், கருப்பஞ்சாறு, பஞ்சாமிர்தம் முதலியவற்றின் மணம் குங்கிலியம், அகில் முதலிய புகைகளின் மணம் என்பவற்றுள் எது மிகுந்துள்ளது என்று சொல்ல முடியாது"[17] என்று பழனி

மலைக்கோவிலில் வீசும் மணத்தின் தன்மைபற்றி *மயில்விடுதூது* குறிப்பிடுகின்றது.

## இராக்கால சந்தனம்

ஆண்டவரின் திருமேனியில் இராக்கால பூசையின்பொழுது சந்தனம் சார்த்துவர். திருமேனியின் மார்பில் சார்த்தும் சந்தனத்தின் அளவு 200 கிராம் என்று மாலைகட்டி பேட்டியின்பொழுது தெரிவித்தார்.[18] திருமேனியில் சாத்துப்படி செய்த சந்தனம் மறுநாள் காலையில் அன்பர்கட்குப் பிரசாதமாக வழங்கப்படும். இந்த இராக்கால சந்தனம்தான் கோவிலில் வழங்கப்படும் மிக முக்கியமான பிரசாதமாகக் கருதப்படுகின்றது.[19]

## பள்ளியறைப் பூசை

இராக்காலப் பூசை முடிந்ததும், தீபாராதனைக்குப்பின் சுவாமியைப் பள்ளியறைக்கு எழுந்தருளச் செய்வர். திங்கள், வெள்ளி, கார்த்திகை நாட்களில் சுவாமியின் திருவடி தங்கப் பல்லக்கிலும், மற்ற நாட்களில் வெள்ளிப் பல்லக்கிலும் ஆண்டவர் எழுந்தருளுவார்.

திருச்செந்தூர் முருகன் கோவிலில் முருகப் பெருமான், வள்ளி தெய்வானையுடன் எழுந்தருளியுள்ளதால், பள்ளியறைப் பூசையின் போது ஓதுவார்கள் ஊஞ்சல் பாடல்களைப் பாடுகின்றனர். [20]

பழனி மலை மீது முருகப்பெருமான் துறவுக்கோலத்தில், ஞான தண்டாயுதபாணியாக எழுந்தருளியுள்ளதால், பள்ளியறைப் பூசையின் போது திருக்கோவில் ஓதுவார்கள் முருகன் பற்றிய தாலாட்டுப் பாடல்களைப் பாடுகின்றனர். இறைவனை, இறைவியோடு சேர்த்து லயப்படுத்தி வழிபடும் முறை இத்திருக்கோவிலில் இல்லை. பழனியாண்டவர் பள்ளியறை புகுமுன் திருக்கோவிலின் வரவு செலவுக் கணக்குப் படிக்கப்படும்.

## பரிவார தெய்வங்கட்குப் பூசைகள்

பொதுவாக மூலவருக்குப் பூசைகள் முடிந்த பின்பு பரிவார தெய்வங்கட்குப் பூசை நடைபெறுகிறது. மலைக்கோவிலில் இப்பூசை பின்கண்டவாறு நிகழ்த்தப்படுகின்றது. உற்சவமூர்த்தியான சின்னக்குமரருக்கும், சண்முகருக்கும் ஆறுகாலப் பூசைகளிலும் பூசைகள்

செய்யப்பெறுகின்றன. அபிடேகமும், அலங்காரமும், விழாபூசையின் பொழுது மட்டுமே நடத்தப்படுகின்றன. ஏனைய காலங்களிலும் தூப, தீப, நைவேத்ய ஆரத்தி மட்டுமே நடத்தப்படுகிறது. சிறுகால சந்தியின் பொழுது கைலாசநாதர், கருடகும்பம், துவாரபாலகர்கட்கும், உச்சிக்காலத்தின்பொழுது மலைக்கொழுந்துசிவன், அம்மன் மற்றும் வலம்புரி விநாயகருக்கும், சாயரட்சையில் மீண்டும் கைலாசநாதர், தட்சிணாமூர்த்தி, துவாரபாலகருக்கும், பள்ளியறை முடிந்தபிறகு பைரவருக்கும் வழிபாடுகள் நடத்தப்பெறுகின்றன.

## திருக்காப்பிடுதல்

திருக்கோவில் ஓதுவார்கள் பள்ளியறைத் தாலாட்டுப் பாடுவர். திருக்கோவில் கட்டியக்காரர் பழனியாண்டவர் மீது கட்டியம் கூறிய பின்னர் மகாதீபாராதனை நடைபெறுகிறது. பைரவர் பூசை முடிந்தபின்னர் சன்னதி திருக்காப்பிடப்படும். காலையில் திறக்கப்படும் திருக்கோவிலின் திருவாயில் இரவு பள்ளியறைக்குமுன் மூடப்படுவதில்லை.

*கார்த்திகை முதலிய சிறப்பு நாட்களிலும், விழா நாட்களிலும் கால பூசைகள் தொடங்கும் நேரம் மாறுபடும்.

## திரு ஆவினன்குடியில் நாள்வழிபாடு

திரு ஆவினன்குடியில் முருகப்பெருமான் அருள்மிகு குழந்தை வேலாயுதசாமியாக எழுந்தருளி அடியார்களுக்கு அருள் பாலித்து வருகின்றார். மூலவருக்கு ஆறுகால பூசை செய்யப்பெறும்பொழுது, இக்கோவிலுள்ள உற்சவருக்கும் பூசை செய்யப்பெறுகிறது. சிறுகால சந்தியின்பொழுதும், சாயரட்சையின் பொழுதும் பரிவார தெய்வங்கட்குப் பூசை செய்யப்படுகிறது. நாள்வழிபாட்டின்போது ஓதுவார்கள் முருகன் பிள்ளைத் தமிழிலிருந்தும், திருப்புகழிலிருந்தும் பாடல்களைப் பாடுகின்றனர்.

## அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோவிலில் நாள்வழிபாடு

மலைக்கோவிலில் செய்யப்பெறுவது போலவே இக்கோவிலிலும் நாள்வழிபாடு செய்யப்பெறுகிறது; விசுவரூப தரிசனத்திலிருந்து தொடங்கி, சொக்கநாதர்-பிருகந்நாயகி பள்ளியறை பூசை வரை இங்கு நடைபெறுகின்றது. மலைக்கோவிலில் நடைபெறுவது போல அபிடேக,

அலங்காரத்திற்குப் பின் 'அஷ்டோத்திரம்' இங்கு சொல்வதில்லை. ஆயின், காலசந்தியின் பொழுது மூலவருக்கு முன்னால் வேதபாராயணம் சொல்லுதலும், கட்டியம் கூறலும் இடம்பெறுகின்றது. சாயரட்சை பூசையின்பொழுது, திருக்கோவில் ஓதுவார்கள் தேவாரத்திலிருந்தும், திருப்புகழிலிருந்தும் பாடல்களைப் பாடுகின்றனர்.

## அருள்மிகு பெரியாவுடையார் திருக்கோவிலில் நாள்வழிபாடு

சிவாகமங்களை அடிப்படையாகக் கொண்டு இத்திருக்கோவிலில் பூசைகள் செய்யப் பெறுகின்றன. உச்சிக்காலப் பூசை, சாயரட்சை பூசை ஆகிய இரு பூசைகள் மட்டுமே இக்கோவிலில் செய்யப்பெறுகின்றன. நாள் வழிபாட்டைவிட, இக்கோவிலில் பட்ச வழிபாடே பிரசித்தி பெற்றதாக விளங்குகிறது.

பழனித் திருக்கோவில், வழிபாடுகளில் இறைவனுக்கு ஐவகை உபச்சாரமும் (பஞ்சோபச்சாரம்), பதினாறுவகை உபச்சாரமும் (சோடச உபச்சாரம்) செய்யப்பெறுகின்றன. ஐவகை உபச்சாரம் பெரும்பாலும் எல்லா வழிபாடுகளிலும் நடைபெறுகின்றது. ஆனால் சோடச உபசாரம் சிறப்பு வழிபாடுகளின்பொழுது மட்டுமே நடத்தப்படுகின்றது.

## மலைக்கோவிலில் மூலவருக்குச் செய்யப்பெறும் அபிடேகம்

மூலவரை நீரினாலும், மற்ற வாசனைத் திரவியங்களினாலும் நீராட்டுதல் அபிடேகம் ஆகும்.

**"ஆனைந்தும் ஆட்டி அமரர் கணந்தொழத்**
**தானந்த மில்லாத் தலைவன் அருளது**
**தேவைந்து மாமலர் உள்ளே தெளிந்த தோர்**
**பாரைங் குணமும் படைத்து நின்றானே** [21] "

என்று அபிடேகத்தின் சிறப்பு குறித்து விளக்குகின்றார் திருமூலர். அடியார்கள் இறைவனுக்குப் பால், தயிர், வெண்ணெய், நெய், மோர் முதலியன கொண்டு அபிடேகம் செய்தல் வேண்டும். இவ்வாறு அபிடேகம் செய்யும் பொழுது தேன் பொருந்திய மலரினுள் மணம் உறைந்திருப்பது போல இறைவன் வெளிப்பட்டுத் தோன்றுவான் என்று கூறுகின்றார் திருமூலர். பழனியாண்டவரின் உருவத் திருமேனி நவபாஷாணத்தால் ஆனதால் இதன்மீது அபிடேகம் செய்யப்பெறும்

பொருள்கள் மருந்தாக மாறுகின்றன என்ற நம்பிக்கை காணப்படுகின்றது. இதனால், பழனி முருகப் பெருமானுக்கு அபிடேகம் செய்வதைப் பலர் விரும்புகின்றனர்.

பழனி முருகன் கோவில் வழிபாட்டில் முக்கிய இடம் வகிப்பது அபிடேகம் ஆகும். பழனி ஆண்டவரை அபிடேகப் பிரியன் என்றும் அழைப்பர். "இரண்டாம் படைவீடான திருச்செந்தூரில் அலங்காரப் பிரியனாக இருக்கும் முருகப்பெருமான் இங்கு (பழனியில்) அபிடேகப் பிரியனாக, சிவ அம்சமாக விளங்குகிறார். காலை முதல் இரவு பூசை முடியும்வரை பன்னீர், சந்தனம், பஞ்சாமிர்தம், திருநீறு முதலிய பொருள்களால் அபிடேகங்கள் நடந்தவண்ணம் இருக்கின்றன. அபிடேகம் செய்யப்பட்ட இப்பொருள்கள் மக்களது நோய்களையெல்லாம் குணப்படுத்த வல்லவை எனக் கருதப்படுகின்றன"[22] என்று இக்கோவிலில் செய்யப்பெறும் அபிடேகத்தின் முக்கியத்துவத்தைக் கூறுவர்.

மூலவருக்கு இடையறாது அபிடேகங்கள் செய்த காலத்தில் எடுத்த கணக்குப்படி, இங்கு ஓர் ஆண்டிற்கு 2.50 இலட்சம் அபிடேகங்கள் நடைபெற்றன.[23] மருந்துகளால் செய்யப்பெற்ற உருவத்திருமேனி கரைந்து போகாதிருப்பதற்காகவே மூலவருக்கு எந்நேரமும் அபிடேகங்கள் நடந்தவண்ணமாக உள்ளன என்று சோமலெ கூறுகின்றார்.[24]

"நவபாஷாணத்தின்மீது சார்த்திய எந்தப் பொருளையும் சாப்பிடலாம். சித்தர்கள் சொன்ன ஒழுக்கநெறி, உணவுநெறி முறைகளின்படி சாப்பிட்டால் இராக்கால சந்தனம் மேலும் பலனளிக்கும். நோய் வந்தவர்களும், நோய் வராதவர்களும், இராக்காலச் சந்தனத்தைச் சாப்பிடலாம். அதனால் கெடுதல் இல்லை"[25] என்று சித்த மருத்துவர் ஆர். கிருட்டிணமூர்த்தி பேட்டியின் பொழுது தெரிவித்தார்.

## அபிடேகத்திற்குரிய திரவியங்கள்

அபிடேகத்திற்குப் பல திரவியங்கள் பயன்படுத்தப்பெறுகின்றன. அவை, எண்ணெய், அரிசிமா, மஞ்சள்மா, பஞ்சகவ்யம், பஞ்சாமிர்தம், பால், தயிர், நெய், தேன், கருப்பஞ்சாறு, பழவகைகளின் சாறு, இளநீர்,

அன்னம், வெந்நீர், விபூதி, குங்குமம், சந்தனம், பன்னீர், கும்பஜலம், கங்கை முதலிய புண்ணிய நதி தீர்த்தம் என்பன" என்பர்.[26]

## அபிடேகத்தின்பொழுது கடைபிடிக்கும் ஒழுங்கு

பழனி முருகனுக்கு அபிடேகம் செய்வது தொடர்ச்சியாக நிகழ்கின்றது. அபிடேகம் தொடங்கும் வேளைமுதல் ஈரந்துவட்டும் (உத்வர்த்தனம்) கிரியை நிகழும்வரை இடையீடு சிறிதுமின்றித் தொடர்ச்சியாகச் செய்தல் மிகவும் அவசியம் என்று ஆகமம் கூறுவதாகக் கைலாசநாத குருக்கள் கூறுவார். மேலும் எண்ணெய் சாத்தும் பொழுது இறைவனுக்குச் சிரமம் ஏற்படாதிருக்க வேண்டி விசிறிகொண்டு வீசவேண்டும் என்றும் ஒவ்வொரு திரவியமும் அபிடேகமானதும், மலரால் அருச்சித்துப் பழமும் தாம்பூலமும் கொண்டு நிவேதனம் செய்ய வேண்டும் என்றும் ஆகமம் கூறுவதாக அவர் கூறுவார்.[27] ஒவ்வொரு அபிடேகமும் தொடர்ச்சியாகச் செய்யப்பெறுவதால் அபிடேக பூசை, நீண்ட நேரமாக நடைபெறுவதை இக்கோவிலில் காணலாம்.

## அபிடேக ஒழுங்கு

கீழ்க்கண்டவாறு தொடர்ச்சியாக அபிடேகங்களைப் பழனியாண்டவருக்குச் செய்கின்றனர். 1. நல்லெண்ணெய், 2. வறட்டாற்றுத் தீர்த்தம், 3. திரவியப் பொடி (அரிசிமா, மஞ்சள்தூள், சீயக்காய்த்தூள், இவைகள் கலந்தது), 4. பஞ்சாமிர்தம், 5. பால், 6. தயிர், 7. இளநீர், 8. பன்னீர், 9. கரும்புச்சாறு, 10. பழச்சாறு, 11. சந்தனம், 12. விபூதி.

## தீர்த்த அபிடேகம்

முதலில் பழனியாண்டவரை நல்லெண்ணெயால் முழுக்காட்டி, அதன் பின்னர் தீர்த்தத்தினால் நன்கு நீராட்டுகின்றனர். பக்தர்கள் புண்ணிய நதி தீர்த்தங்களைக் கொண்டு வந்து பழனி ஆண்டவருக்கு தீர்த்த அபிடேகம் செய்கின்றனர். விழாக்காலங்களில் தீர்த்த அபிடேகம் சிறப்பிடம் வகிக்கிறது. அபிடேகம் செய்த தீர்த்தத்தை அருந்தினால் வெண்குட்டம், ஆஸ்த்துமா முதலிய நோய்கள் நீங்கும் என்று கூறுவர்.[28]

"போது கங்கையினீர் சொரிந்திரு
பாத பங்கயமே வணங்கியெ
பூசை யுஞ்சில வே புரிந்திட அருள்வாயே "[29]

என்று அருணகிரிநாதர் முருகப் பெருமானிடம் வேண்டிக் கொள்கின்றார்.

பூக்களைத் தூவியும், புண்ணிய தீர்த்தம் நிரம்பச் சொரிந்தும் முருகப் பெருமானது திருவடிகளை எப்போதும் வழிபட அடியேனுக்கு அருள்புரிதல் வேண்டும் என்று மனம் உருகிப்பாடுகின்றார் அருணகிரிநாதர்.

## பஞ்சாமிர்த அபிடேகம்

தீர்த்த அபிடேகமும், திரவியப்பொடி அபிடேகமும் நடைபெற்ற பின்னர், பஞ்சாமிர்த அபிடேகம் செய்கின்றனர். பழனி முருகன் கோவில் வழிபாட்டில் பஞ்சாமிர்தம் முக்கிய இடம்பெறுகிறது. பஞ்சாமிர்த அபிடேகம் பழனிக் கோவிலில் செய்யப்பெறுவது போல வேறு கோவில்களில் அதிகம் செய்யப்பெறுவது இல்லை. பழனிப் பஞ்சாமிர்தம் புகழ் பெற்றது. பழனிப் பஞ்சாமிர்தத்தை மிகப் பழமையான பழக்கூட்டு என்றும், பல மாதங்கள் பாதுகாத்து வைக்கலாம்"[30] என்றும் சோமலெ குறிப்பிடுகின்றார்.

தைப்பூச விழாவின் போது செட்டிநாட்டுக் குழுவினரும், சேலம் இடைப்பாடிக் குழுவினரும், இன்னும் வேறு குழுவினரும் பெருமளவில் பஞ்சாமிர்தம் கரைக்கின்றனர். கரைத்த பஞ்சாமிர்தத்தை சிறிது தனியே எடுத்து முருகனுக்கு அபிடேகம் செய்து, அவ்வாறு அபிடேகம் செய்ததனைப் பெரிய அளவில் தயாரித்து வைத்துள்ள பஞ்சாமிர்தத் தோடு கலப்பர். இது முழுக்கவே அபிடேகப் பஞ்சாமிர்தமாகக் கருதப்படுகிறது.

இத்தகைய அபிடேகப் பஞ்சாமிர்தமே சிறந்ததாகவும் புனிதமானதாகவும் கருதப்படுகிறது.[31] மேலும், "அபிடேகம் செய்த பஞ்சாமிர்தம் சுவையானது மட்டுமல்லாமல் நீண்ட நாட்கள் குளிர்சாதனப் பெட்டிப் பாதுகாப்பு இல்லாமல் வைத்துச் சுவைக்கலாம்.[32]

## பாலாபிடேகம்

நாள்வழிபாட்டின்பொழுது பலர், பழனியாண்டவருக்குப் பாலாபிடேகம் செய்கின்றனர் கார்த்திகை நாட்களிலும், விழா நாட்களிலும் பாலாபிடேகம் மிகுதியாக இடம்பெறுகின்றது தைப்பூசத்திரு விழாவின் பொழுது மிகுதியான பக்தர்கள், பாற்குடமும், பால்காவடியும் எடுத்து வந்து முருகப் பெருமானுக்குப் பாலாபிடேகம் செய்கின்றனர்.

பழனியாண்டவரின் உருவத்திருமேனியில் பாலாபிடேகம் செய்ததும் அப்பால் நோய் தீர்க்கும் மருந்தாக மாறிவிடுகின்றது என்ற நம்பிக்கை காணப்படுகின்றது. மேலும், பால்கள் பல வகையனவாக இருப்பினும் அவை கெட்டுப்போவதில்லை. இதற்குக் காரணம் கூறும்போது ஆண்டவர் சிலை நவபாஷாணத்தினால் ஆனதால் அதிலுள்ள நுண்ணிய அணுக்கள் பாலில் ஒரளவு கரைந்து வரும். பாலில் ஒரு சிலவாக வந்த அணுக்கள் ஒன்று நூறாக, நூறு பத்தாயிரமாக இப்படிப்பட்ட பெரிய விகிதத்தில் தமக்குத்தாமே பரவும். இதன் காரணமாகவே பல்வேறு பால்களை ஒன்றாக்கியும்கூட மிக விரைவில் அது கெடுவதில்லை என்று கூறுவர்.[33]

## தயிர் அபிடேகம்

பங்குனி உத்திரவிழாவின் போது பக்தர்கள் தயிர்க்காவடிகள் கொண்டுவந்து பழனியாண்டவருக்குத் தயிர் அபிடேகம் செய்கின்றனர். தாராபுரம் அருகிலுள்ள சிவன்மலை, முருகன் கோவில் தைப்பூசத் திருவிழாவில் தயிர் அபிடேகம் மிகுதியாக நடைபெறுகிறது. ஆயின், பழனி முருகன் கோவிலில் குறைவான அளவே தயிர் அபிடேகம் செய்யப்படுகின்றது.

## இளநீர் அபிடேகம்

தைப்பூசத் திருவிழாவின்பொழுதும், பங்குனி உத்திர விழாவின் பொழுதும் அதிக அளவில் இளநீர்க் காவடிகள் கொண்டு வரப்பட்டு அபிடேகம் செய்யப்படுகின்றது. மேலும் இளநீரைத் தனியாகக் கொண்டு வந்தும் நாள்வழிபாட்டின் பொழுது அபிடேகம் செய்வதுண்டு.

## பன்னீர் அபிடேகம்

பன்னீர் புட்டிகளைக் காவடியில் வைத்துக் கட்டி. காவடிகள் கொண்டு வந்து அபிடேகம் செய்வதும் இடம்பெறுகிறது. நறுமணம் கமழும் பொருள்களைக் கொண்டு முருகப்பெருமானுக்கு அபிடேகம் செய்வதைப் பல பக்தர்கள் விரும்புகின்றனர்.

## கரும்புச்சாறு அபிடேகம்

தைப்பூசம். பங்குனி உத்திரம் ஆகிய விழா நாட்களில் திருத்தலப் பயணிகள் காவடிக் கூட்டத்துடன் தங்கள் வயலில் விளைந்த கரும்புகளை உடன்கொண்டு வருகின்றனர்; மலைமீது கைகளால் தட்டிச் சாறுபிழிந்து எடுத்து ஆண்டவருக்கு அபிடேகம் செய்கின்றனர்.

## சர்க்கரை அபிடேகம்

சர்க்கரையினைக் காவடியாகக் கட்டிக்கொண்டு வந்து செய்யப்படும் 'சர்க்கரை அபிடேகம்' தைப்பூச விழாவின் பொழுது மிகுதியாகச் செய்யப்படுகின்றது. இந்தச்சர்க்கரையுடன். பழம். பேரீச்சம்பழம். கற்கண்டு இவற்றினைச் சேர்த்துப் பஞ்சாமிர்தம் தயார் செய்து பஞ்சாமிர்த அபிடேகமாகவும் செய்கின்றனர்.

## சந்தன அபிடேகம்

"பழனியாண்டவருக்குச் செய்யும் அபிடேகங்களுள் குறிப்பிடத்தக்கது சந்தன அபிடேகம்" என்று சோமலெ குறிப்பிடுகின்றார்.[34] பழனிச் சந்தனம் புகழ் பெற்றதாகும்.

## விபூதி அபிடேகம்

பழனியாண்டவருக்கு இறுதியாகச் செய்யப்படுவது 'விபூதி அபிடேகம்' ஆகும். ஆண்டிக்கோலத்தில் வீற்றிருக்கும் முருகப் பெருமானுக்கு இத்தலத்தில் விபூதி அபிடேகம் செய்வது மிகப்பொருத்தம். பழனிக் கோவில் விபூதி. சக்தி வாய்ந்தது என்று பக்தர்கள் நம்புகிறார்கள்.

காலப்போக்கில். பழனியாண்டவரின் உருவத் திருமேனி தேய்மானமாகத் தொடங்கியது. இதற்குக் காரணம் தரம் குறைந்த பன்னீர் மற்றும் பிற அபிடேகப் பொருள்களே என்று கூறுகின்றனர்.

இதனைக் கருதித் திருக்கோவில் நிருவாகம் பக்தர்கள் நாள்தோறும் மூலவருக்குச் செய்யும் பாலாபிடேகம். பன்னீர் அபிடேகம், பஞ்சாமிர்த அபிடேகம் போன்ற அபிடேகங்களை 1-10-1984 முதல் தற்காலிகமாக நிறுத்தி வைத்துள்ளது.[35] அதற்குப் பதிலாக உற்சவமூர்த்திக்கு அபிடேகங்கள் செய்யப்படுகின்றன. ஆயின் திருக்கோவில் நிருவாகத்தினர் மட்டும் மரபாகச் செய்து வரும் அபிடேகங்களை, மூலவருக்குத் தொடர்ந்து செய்து கொண்டு வருகின்றனர்.

## பழனியாண்டவருக்குச் செய்யப்படும் அலங்காரங்கள்

பழனியாண்டவரைக் கோவில் குருக்கள் உடனுக்குடன் நன்கு அலங்கரித்து முருகப்பெருமான் நேரில் தோன்றுவது போன்ற காட்சியினை உண்டாக்கி விடுகின்றனர்.

இவ்வாறு செய்யப்படும் அலங்காரங்கள், பின்வருவன

1. அரசன் (இராஜ அலங்காரம்) 2. ஆண்டி 3. வேலன்
4. வேடன் 5. விருத்தன் 6. குமரன்
7. மலர் அலங்காரம்

நின்றகோலத்தில் ஆண்டியாக எழுந்தருளியிருக்கும் ஆண்டவரைப், பலவிதமாக அலங்காரங்கள் செய்துபார்த்து வழிபடுவதையே பெரும்பாலான பக்தர்கள் விரும்புகின்றனர். இத்தலத்தில் பழனியாண்டவர் அலங்காரப் பிரியனாகவும் காட்சி அளித்து வருகின்றார். "அலங்கரித்தல் தனிக்கலை, இக்கலையில் துறை தோய்ந்தவர் அலங்கரணாசாரியார் எனப்படுவர். இவரது கைவண்ணத்தின் விளைவே இறைவன் அழகு பொலிந்து கவர்ச்சி மிக்குத் தோற்றமளிப்பது. அலங்காரத்திற்குரிய பொருள்கள் வஸ்திரம், உத்தரீயம், ஆபரணங்கள், மாலை வகைகள் ஆகியன" [36] ஆகும்.

பழனி முருகனை அலங்காரத்தோடு பார்ப்பது சிறப்புடையது ஆகும். "ஞான தண்டாயுதபாணியின் திருக்கோலம் கண்டு தொழுது பிறவிப் பயனை அடையலாம். அரசனாக, ஆண்டியாக, வேலனாக, வேடனாக, விருத்தனாக, குமரனாகக் காணும் எந்தக் கோலத்திலும் தம்மை வழிபட வந்திருக்கும் அடியார்களை 'என்று வந்தாய்' என்னும் திருக்குறிப்பில் புன்னகையோடு நின்றருளும் காட்சி; மண்ணிற்

பிறந்தோர் காணவேண்டியதொரு அருங்காட்சியாகும்"[37] என்று பழனி ஆண்டவரின் அலங்காரச் சிறப்புப்பற்றிக் கூறுவர்.

அலங்காரங்களுள் குறிப்பிடத்தக்கது இராஜ அலங்காரம் ஆகும். பழனியாண்டவரை, இராஜ அலங்காரத்தில் கண்டு வழிபடுவதையே பெரும்பாலான பக்தர்கள் விரும்புகின்றனர். இராஜ அலங்காரப்படம் வண்ணநிறத்தில்அச்சிடப்பட்டுத் திருக்கோவில் நிர்வாகத்தினரால் விலைக்கு வழங்கப்பெறுகின்றது. பெரும்பாலான பக்தர்கள் தமிழ்ப்புத்தாண்டு நாளன்று ராஜ அலங்காரப் படத்தை, வீட்டுப் பூசை அறையில் வைப்பதற்காக வாங்கிச் செல்கின்றனர்.

மன்னனிடம் இறைவனின் பண்புகளைக் காணலும், இறைவனிடம் மன்னனின் பண்புகளைக் காணலும் பண்டையத் தமிழர்களின் வழக்கமாக இருந்து வந்திருக்கின்றது.

**"முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறை என்று வைக்கப் படும்"[38]**

என்ற இக்குறள் மன்னனிடம் உள்ள தெய்வாம்சக் கோட்பாட்டினை எடுத்துக்காட்டுகிறது.

மக்கள், அரசனைப்போலவே இறைவனையும் காணுகின்றனர். அரசனுக்குச் செய்யவேண்டிய அனைத்தையும் கோவில்களில் தெய்வங்களுக்கும் செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள். இந்த எதிர்பார்ப்பின் காரணமாகவே இராஜ அலங்காரம் செய்யப்படுகின்றது. அரசவையைப் போலவே கோவில் வழிபாடும் அமைகின்றது. இது பற்றிய தத்துவத்தை டி.எம்.பி. மகாதேவன் பின்வருமாறு விளக்குகின்றார். ஒவ்வொரு நாளும் அரசர்க்கரசனது சபை தொடங்குகிறது. பக்தர்களுக்கு அவன் சமூகம் அளிக்கிறான், அவர்கள் குறைகளைக் கேட்கிறான். தனது அருளை அவர்கள் மேல் பொழிகின்றான், விழாக் காலங்களில் அவன் நாடெங்கும் ஊர்வலம் வருகின்றான். அப்போது மன்னர் மன்னனுக்குரிய படோடபமான மரியாதைச் சின்னங்களுடன் பவனி வருகின்றான். இப்புதிர் நிரம்பிய தெய்விக விளையாட்டு, இந்தியாவில் எல்லா ஆலயங்களிலும் நடைபெறுகிறது. இது பாமர மக்களை அறியாமைப் பேரிருளில் தள்ளக்கூடிய அன்றாட ஆட்டம்பாட்டமான வாழ்க்கையினின்று கவர்ந்திழுத்து அவர்களைச் சமயவழியில் திருப்பி

விடுவதற்காகவே நடைபெறுகிறது.[39] பழனி முருகன் கோவிலில் செய்யப்பெறும் இராஜ அலங்காரத்தின் முக்கியத்துவத்தையும் சிறப்பையும் மேற்கூறிய விளக்கம் புலப்படுத்துகின்றது.

## மலர் அலங்காரம்

இராக்கால பூசையின் பொழுது பழனியாண்டவரை மலராலும் மாலைகளாலும் அலங்கரிப்பர். இராக்கால பூசையின்பொழுது செய்யப்படும் மலர் அலங்காரம் மரபுவழிப்பட்ட முறையிலும், அழகிய முறையிலும் அமைகிறது என்று ஜே.எம். சோமசுந்தரம் பிள்ளை கூறுகின்றார்.[40]

## தங்கக் கவசம்

சிறப்பு நாட்களில் முருகப் பெருமானுக்கு அணிகலன்களை அணிவிப்பதும் உண்டு. ஆபரணங்கள் பொன்னாலும் நவரத்தினங் களாலும் ஆனவை. தங்கக் கவசம் சாத்துவதற்குக் கட்டணம் வசூல் செய்யப்படுகிறது. கிழமைதோறும் இன்னின்ன நவரத்தினமும், ஆபரணங்களும் அணிவிக்க வேண்டும் என்று ஆகமங்கள் குறிப்பிடுகின்றன.[41]

## அருச்சனை

இறைவன் பெயர்களை ஒவ்வொன்றாகக் கூறி மூலவர்முன் மலர் தூவுதல் அருச்சனை என வழங்கப்படுகிறது. ஆகம வழக்கு ஓங்கி விளங்கும் தென் பாரதத்துக் கோவில்களுக்கே இது சிறப்பாக உரியது.[42] வில்வத்தாலும், கடம்பமலராலும் அருச்சனை செய்வது முருகனுக்கு உகந்தது என்று திருக்கோவில் அர்ச்சகர் பேட்டியின்பொழுது குறிப்பிட்டார்.[43]

***"அம்புய நீலங் கழுநீ ரணி செய்தல்
வம்பவிழ் பூகமும் மாதவி மந்தாரந்
தும்பை வகுளஞ் சுரபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே"*** [44]

என்று இறைவனுக்கு மலர்தூவி அருச்சிக்கும் முறை குறித்துத் திருமூலர் குறிப்பிடுகின்றார். தாமரை, கருங்குவளை, செங்கழுநீர், நெய்தல்,

பலா, மாதவி, மந்தாரம், தும்பை, மகிழ், சுர புன்னை, மல்லிகை, செண்பகம், பாதிரி, செவ்வந்தி ஆகிய பதினான்கு வகையான பூக்களைக் கொண்டு வழிபட வேண்டும் என்று திருமூலர் அருச்சனை குறித்து எடுத்துரைக்கின்றார்.

## அருச்சனை பற்றிய புராணக்கதை

திருமால் இறைவன் பெயர்கள் ஆயிரத்தினையுங் கூறி ஒவ்வொரு பெயருக்கும் ஒவ்வொரு மலரைச்சாத்தி அருச்சித்த வேளை ஒரு மலர் குறையக் கண்டு, தம் கண்ணைப்பிடுங்கி மலராய் அருச்சித்தார் என்னும் புராணக்கதை அருச்சனையின் மகத்துவத்தை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. [45]

## அருச்சனையின் பலன்

அருச்சித்து வழிபடும் முறையினை ஆதிசங்கரர் சிவானந்தலஹரி என்னும் தோத்திர நூலில் பாடியுள்ளார். "அருச்சனையில் ஈடுபடுபவனின் மனம் இறைவன் பாத தாமரையில் படிகின்றது. வாய், அவன் புகழ்பாடுவதில் ஈடுபடுகின்றது. கரங்கள் இரண்டும் அவனை அருச்சித்தலில் தொழிற்படுகின்றன. அவன் புகழ் கூறும் ஒவ்வொரு நாமமும் காதில் விழும் பொழுது காது அதைக் கேட்டுப் பெரும்பயன் எய்துகின்றது. அவனைத் தியானிப்பதில் புத்தி செல்கின்றது. இரு கண்களும் அவன் கோலத்தின் வைபவத்தினால் ஈர்ப்புண்டு அதன் வயமாகி அசைவற்று நிற்பன. இவ்வாறு நிற்கும் நிலையில் இவன் நூல்களைப் படிப்பதனால் ஆவது யாது? நூல்களாயிரங் கற்றுவரும் அறிவிலும் இறைவனை இவ்வாறு அருச்சித்தல் அரும் பெரும் பேற்றினை எய்துவிக்கும் என்று வழிபாட்டில் இடம் பெறும் அருச்சனை குறித்து கா.கைலாசநாத குருக்கள் எடுத்துரைக்கின்றார்.[46] மேலும், தொடர்ந்து அவர் இவ்வருச்சனை நித்திய பூசையிலும், நைமித்திக காமியக் கிரியைகளிலும் இடம் பெறுவன என்று குறிப்பிடுகின்றார்.[47]"

அருச்சனையின் இறுதியில் வேதமந்திரங் கூறி புஷ்பாஞ்சலி செய்தல் மரபு. இது விரிவாக நிகழும் பொழுது சுவர்ண புஷ்பாஞ்சலி, மந்திர புஷ்பாஞ்சலி, லாஜ புஷ்பாஞ்சலி என விரியும் என்று அருச்சனையின் சிறப்புத் தன்மை குறித்து கா. கைலாசநாத குருக்கள் விளக்குகின்றார்.[48]

பழனி முருகன் கோவில் நாள் வழிபாட்டின் போதும், கிருத்திகை மற்றும் விழாக்காலங்களில் பக்தர்கள் அருச்சனை செய்து வழிபடுகின்றனர். தமிழருச்சனை பழனித் திருக்கோவிலில் நடைமுறையிலுள்ளது.

## குமாரதந்திரம்

தமிழ்நாட்டில் பெரும்பாலான முருகன் கோவில்களில் குமாரதந்திரத்தில் கூறப்பட்டுள்ள முறைகளை ஒட்டியே பூசைகளையும் விழாக்களையும் நடத்தி வருகின்றனர். குமாரதந்திரத்தை அடிப்டையாகக் கொண்டே பழனி முருகன் கோவிலில் பூசைகளையும், விழாக்களையும் நடத்தி வருவதாகப் *பழனியாண்டவர் விழா தத்துவ விவரம்* கூறுகின்றது. மேலும் இவ்ஆகமம், மூலவருக்குச் செய்யக்கூடிய கிரியைகளைப் பற்றி விரிவாக எடுத்துரைக்கின்றது. '*பழனிமலை வடிவேலர் சந்நிதிமுறை*'[49] என்ற நூல், பக்தர்கள் பழனியாண்டவரை வழிபடும் முறைகளைப் பற்றிப் பேசுகிறது. மூலவருக்குச் செலுத்துகின்ற காவடிக் காணிக்கைகள் பற்றிக் கூறுகின்றது.

## பழனிமலை வடிவேலர் சந்நிதிமுறை

இந்நூலாசிரியா வை. அகிலாண்டநாயகி அம்மாள் ஆவார். இந்நூல் எட்டுப்பாடல்களைக் கொண்டு அமைந்துள்ளது. எட்டுப் பாடல்களும் பழனியாண்டவர் பற்றியும், பழனிமலை பற்றியும், பழனிமலைக்கு வரும் அடியார்கள் பற்றியும் கூறுகின்றன. பழனி முருகன் கோவிலை எவ்வெவ்வாறு வழிபட வேண்டும் என்ற விதிமுறைகள் பற்றியும், பழனியில் உள்ள தீர்த்தங்களில் நீராடுவது பற்றியும் குறிப்பிடுகின்றது. மேலும், பக்தர்கள் கொண்டுவரும் காவடிகளின் வகைகள் பற்றியும் குறிப்பிடுகின்றது. இறுதிப் பாடல், நோய்கள் பலவற்றின் பெயர்களைக்கூறிப் பழனியாண்டவரை வழிபட்டால் அந்நோய்கள் நீங்கும் என்றும் கூறுகிறது. பழனியாண்டவரை இந்நூல் ஒரு 'ஆற்றுவிக்கும் கடவுளாகப்' (Healing God) போற்றுவது குறிப்பிடத்தக்கதாகும்.

ஒவ்வொரு பாடலின் இறுதியிலும்

**"பழ மறை சொலிய சீல! தொழுமவர்களனுகூல!**
**பழனிமலை வடிவேலனே"**

என்று பழனியாண்டவரை வழிபடுவோர் அனைவரும் அனுகூலம் பெறுகின்றனர் என்று குறிப்பிடுகின்றது.

"பழனிமலை வடிவேலர் சந்நிதிமுறை" என்று இந்நூலுக்குப் பெயர் வைத்ததிலிருந்து பழனிமலையில் உள்ள முருகனை வழிபடுவதற்கென்றே இந்நூல் தோன்றியது என்று கூறலாம்.

## வடிவேலர் சந்நிதிமுறை கூறும் வழிபாட்டுமுறை

**"தரும் இரவி உதயமது கண்டு ; வைகாபுரி**
**தனைக்கண்டு ; சுத்திகண்டு,**
**சண்முகப் புனல்கண்டு ; நியமாதிகண்டு பின்**
**சரவணப் பொய்கையாடி**
**அருள் பெருகும் ஆவினன்குடி கண்டு, கைலாசர்**
**அம்மை பெரியம்மையக் கண்டு**
**அம் பொன்மலை கண்டு, அதில் இடும்பர் சந்நிதிகண்டு அங்கு**
**அநேகக் கண்காட்சி கண்டு**
**கருணைகண்டு அருள் வள்ளி தெய்வயானையைக் கண்டு**
**களிகண்டு இருக்கும் உன்றன்**
**கமலபாதம் கண்டபேர் ஒருகாலும் அக்**
**காலனைக் கண்டிடுவரோ?**
**பரிதிவலி கண்டவன் தனைவென்ற தம்பிதன்**
**பராக்ரமங் கண்ட துரையே!**
**பழமறை சொலியசில! தொழுமவர்கள் அநுகூல**
**பழநிமலை வடிவேலனே"** [50]

இவ்வாறு அதிகாலை நேரத்தில் முதன்முதலில் வைகாபுரிக் குளத்தில் நீராடிக் கோவிலைச் சுற்றிவர வேண்டும் என்று இந்நூல் கூறுகின்றது. முன்பு வைகாபுரிக் குளம் இக்கோவிலுக்கு உரிய தீர்த்தமாக இருந்து இருக்கின்றது என்பதனை இந்நூல்மூலம் அறியமுடிகின்றது. இன்று கழிவுநீர் வைகாபுரிக் குளத்தில் கலப்பதால் வைகாபுரிக் குளத்து நீரைக் குளிக்கவோ, குடிக்கவோ கூடாது என்று பழனி நகராட்சி அறிவித்துள்ளது. தற்பொழுது வைகாபுரிக் குளத்து நீரை யாரும் தீர்த்தமாகக் கருதுவது இல்லை.

பின்னர், சண்முகநதியில் நீராடிவிட்டு அங்குள்ள கோவில்களை வழிபட்டு வரவேண்டும். சரவணப்பொய்கையில் நீராடி ஆவினன் குடியினை வணங்க வேண்டும் என்றும் கூறுகின்றது. பழனியில் உள்ள முருகன் கோவில்களை வழிபடுவதற்குமுன், அங்குள்ள தீர்த்தங்களில் நீராட வேண்டும் என்று வற்புறுத்துகிறது இந்நூல். பின்னர் அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலை வழிபட வேண்டும். அதன்பின்னர் மலைக்குச் செல்ல வேண்டும். இடும்பன் சன்னிதியைத் தரிசித்த பின்னரே பழனியாண்டவரைத் தரிசனம் செய்ய வேண்டும் என்றும் இந்நூல் குறிப்பிடுகின்றது.

திரு ஆவினன்குடி, அருளமிகு பெரியநாயகி அம்மன் கோவில், மலைக்கோவில் ஆகிய இம்மூன்று கோவில்களையும் வழிபட்டபின்னர்தான் பழனியாண்டவர் தரிசனம் பூர்த்தியாகும் என்று *பழனிமலை வடிவேலர் சந்நிதிமுறை* குறிப்பிடுகின்றது. இவ்வாறு *பழனிமலை வடிவேலர் சந்நிதிமுறை* பழனி முருகனை வழிபடுவது தொடர்பான சடங்குத் தொடர்ச்சிகளை (Ritual Process) முறைப்படுத்திக் கூறுகின்றது.

## நான்கு வழிபாட்டுப்போக்குகள்

தற்காலத்தில் பழனி முருகனை வழிபடுவோர், குழுக்களாகவோ, தனியாகவோ சில முறைகளைத் தம் வசதிக்கேற்பப் பின்பற்றுகின்றனர். ஒருவர் முதலில் சண்முகநதியில் முடி இறக்குகிறார் என்றால், அங்கேயே நீராடி, அங்குள்ள கடவுளர்களை வழிபட்டு விட்டுப் பின்னர், வரும் வழியில் அருள்மிகு பெரியநாயகி அம்மனையும், திரு ஆவினன்குடி முருகனையும் வழிபட்டுவிட்டுக் கிரி சுற்றிவிட்டு மலையேறிப் பழனியண்டவரை வணங்குகிறார். இதுபோலவே ஏனைய முறைகளும் அமைந்துள்ளன. இம்முறைகளைக் கள ஆய்வில் கண்டறிந்து பகுக்கும் போது பின்வரும் போக்குகள் காணப்படுகின்றன.

### முதல் வழிபாட்டுப்போக்கு

1. சண்முகநதியில் முடி இறக்குதல்
2. சண்முகநதியில் நீராடுதல்
3. சண்முகநதியிலுள்ள கடவுளர்களை வழிபடுதல்

4. அருள்மிகு பெரியநாயகி அம்மனை கோவிலை வழிபடுதல்
5. திரு ஆவினன்குடி முருகனை வழிபடுதல்
6. அருள்மிகு பாதவிநாயகரை வழிபடுதல்
7. மலைவலம் வருதல்
8. மலையேறிச் செல்லுதல்
9. இடும்பன் கோவிலை வணங்குதல்
10. வெளிப்பிரகாரம், உட்பிரகாரம் இவற்றினை வலம்வருதல்.
11. பழனியாண்டவரைத் தரிசனம் செய்தல்
12. வெளிப்பிரகாரத்திற்கு வந்து தீப கம்பத்திற்குமுன் கீழே விழுந்து வணங்குதல்

இந்த வழிபாட்டுமுறை, பெரும்பாலும் பழனிமலை வடிவேலர் சந்நிதிமுறை குறிப்பிடும் வழிபாட்டுமுறைக்கு ஏற்ப அமைகிறது. விழாக்காலங்களின் பொழுதும், விழா அல்லாத நாட்களிலும் குழுவாக வருபவர்களும், தனியாக வருபவர்களும் இவ்வழிபாட்டு முறையைப் பின்பற்றுகிறார்கள். இந்த வழிபாட்டுமுறையும் இன்று நடைமுறையில் இருந்து வருகிறது.

## இரண்டாவது வழிபாட்டுப் போக்கு

1. சரவணப் பொய்கைக்கு அருகாமையில் உள்ள முடிக் கொட்டகையில் முடி இறக்குதல்.
2. சரவணப் பொய்கையில் நீராடுதல்
3. திரு ஆவினன்குடி முருகனைத் தரிசனம் செய்தல்
4. அருள்மிகு பாதவிநாயகர் கோவிலை வழிபடுதல்.
5. மலை வலம் வருதல்
6. மலையேறிச் செல்லுதல்
7. இடும்பன் கோவிலில் தரிசனம் செய்தல்
8. வெளிப்பிரகாரம், உட்பிரகாரம் இவற்றினை வலம் வருதல்
9. பழனியாண்டவரைத் தரிசனம் செய்தல்
10. தீப கம்பத்தின் முன் வணங்கிவிட்டுத் திரும்புதல்

இம்முறையைப் பின்பற்றுபவர்கள் சண்முகநதியில் நீராடுதல், அருள்மிகு பெரியநாயகி அம்மனை வழிபடுதல் ஆகிய செயல்களைச் செய்யாது, சரவணப் பொய்கையில் நீராடிவிட்டுப் பின்னர் பழனி ஆண்டவரைத் தரிசிக்கத் தொடங்குகின்றனர்.

### மூன்றாவது வழிபாட்டுப் போக்கு

1. சரவணப் பொய்கையில் நீராடுதல்
2. திரு ஆவினன்குடி முருகனைத் தரிசனம் செய்தல்
3. அருள்மிகு பாதவிநாயகர் கோவிலை வழிபடுதல்
4. மலையேறிச் செல்லுதல்
5. இடும்பன் கோவிலில் தரிசனம் செய்தல்
6. வெளிப்பிரகாரம். உட்பிரகாரம் இவற்றினை வலம் வருதல்
7. பழனியாண்டவரைத் தரிசனம் செய்தல்
8. தீப கம்பத்தின் முன் கீழே விழுந்து கும்பிடுதல்

இம்முறையும் விழாக்களின் பொழுதும், ஏனைய நாட்களிலும் பக்தர்களிடம் நடைமுறையில் இருந்து வருகின்றது.

### நான்காவது வழிபாட்டுப்போக்கு

1. திருஆவினன்குடியில் தரிசனம் செய்தல்
2. அருள்மிகு பாதவிநாயகரை வழிபடுதல்
3. மின் இழுவை இரயில்மூலம் மலையேறிச் செல்லுதல்
4. வெளிப்பிரகாரம், உட்பிரகாரம் இவற்றினைச் சுற்றி வருதல்
5. பழனியாண்டவரைத் தரிசனம் செய்தல்
6. தீப கம்பத்தின் முன் கீழே விழுந்து கும்பிடுதல்

இவ்வழிபாட்டுமுறை பழனிமலை வடிவேலர் சன்னதிமுறை கூறும் விதிகளில் பாதியினைத்தான் நிறைவு செய்கின்றது எனலாம். இவ்வழிபாட்டு முறையும் இக்கோவிலில் நடைமுறையில் இருந்து வருகின்றது. மின் இழுவை இரயில்மூலம் மலைக்குச் செல்வதால் நடந்து மலைக்குச் செல்லும் அனுபவத்தையும், இடும்பன் கோயிலைத் தரிசனம் செய்யும் வாய்ப்பினையும் இம்முறையைப் பின்பற்றுகிறவர்கள் இழந்துவிடுகிறார்கள். 'புதிய தொழில் நுட்பங்கள்' (New Technology) நகரிய ஆக்கங்கள் ஆகியன சடங்குமுறைகளில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தி வருகின்றன என்று இந்தியச் சமூகவியல் அறிஞர் எம். என். சீனிவாஸ் குறிப்பிடுவார்.[51]

பழனிக்கு வரும் பெரும்பாலான பக்தர்கள் திருஆவினன் குடியினையும், அருள்மிகு பாதவிநாயகர் கோவிலையும் வழிபட்டபிறகே

பழனியாண்டவரை வழிபடுகின்றனர். சில குழுக்கள் மலைவலம் வந்த பின்னர், மலையேறிச் சென்று பழனி முருகனை வழிபடும் வழக்கத்தைக் கொண்டுள்ளன.

## பழனி முருகன் கோயில் வழிபாடு கூட்டவழிபாடே

பக்தர்கள் கூட்டம் கூட்டமாக வந்து வழிபடும் போக்கினைப் பழனி முருகன் கோவிலில் காணலாம். கூட்டாகச் சேர்ந்து வந்து பழனியாண்டவரை வழிபடுவதையே மக்கள் பெரிதும் விரும்புகின்றனர்.

தைப்பூச விழாவின்பொழுதும், பங்குனி உத்திர விழாவின் பொழுதும், பிற விழாக்களின் பொழுதும் இக்கூட்ட வழிபாட்டுமுறை மேலோங்கி இருப்பதைக் காணலாம்.

பழனி முருகனை வழிபட வரும் பக்தர்களைக் கீழ்க்கண்ட கூட்டங்களாக வகைப்படுத்தலாம்.

1. கிராமக் கூட்டம் (Village group)
2. சாதிக்கூட்டம் (Caste group)
3. தொழிற்கூட்டம் (Professional group)
4. குடும்பக்கூட்டம் (Family group)
5. திருமணக்கூட்டம் (Marriage group)
6. காணிக்கை கொண்டு வருவோர் கூட்டம் (Offering group)
7. சுற்றுலாக்கூட்டம் (Tourist group)
8. ஐயப்பன் கூட்டம் (Iyyappan group)
9. மலையாளிகள் கூட்டம் ( Malayalee group)

### 1. *கிராமக்கூட்டம்*

ஒரே கிராமத்தைச் சேர்ந்த மக்கள் பலரும் ஒன்றாகச் சேர்ந்து வரும் கூட்டத்தினைக் கிராமக்கூட்டம் எனலாம். பங்குனி உத்திர விழாவின்பொழுதும், தைப்பூச விழாவின்பொழுதும், அக்னி நட்சத்திர விழாவின் பொழுதும் கிராமக்கூட்டத்தினரே பெரும்பாலும் ஒன்று சேர்ந்து பழனிக்கு வருகின்றனர்.

## 2. சாதிக்கூட்டம்

சிலபோது குறிப்பிட்ட சமூகத்தைச் சேர்ந்தவர்கள் விழாக் காலங்களிலும், விழா அல்லாத காலங்களிலும் கூட்டாக வந்து பழனியாண்டவரை வழிபட்டுச் செல்கின்றனர். ஒவ்வொரு சாதிப்பிரிவுக்கும் சொந்தமான மடங்கள் பழனியில் உள்ளன. ஒவ்வொரு சாதியைச் சேர்ந்தோரும் பழனிக்கு வரும்பொழுது தங்கள் சாதியைச் சேர்ந்த மடங்களில் தங்கிப் பழனியாண்டவரை வழிபடுகின்றனர்.

பங்குனி உத்திரவிழாவின் பொழுது கொங்கு வேளாளக்கவுண்டர் சமூகத்தினர், பணியாளர் சமூகத்தினரையும் (Service Castes) உடன் அழைத்து வருகின்றனர். இவ்வாறு ஒன்றுக்கு மேற்பட்ட சாதிக்கூட்டத்தினரும் ஒன்றாகச் சேர்ந்து கொண்டு வருதலும் உண்டு.

## 3. தொழிற்கூட்டம்

ஒரு நிறுவனத்தில் பணிபுரிகின்ற தொழிலாளர்கள் அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து வந்து வழிபடுவதைத் தொழிற்கூட்டம் எனலாம். பல்வேறு தொழில் நிறுவனங்களில் பணிபுரியும் தொழிலாளர்கள் பேருந்து, சிற்றுந்துகளின் மூலம் வந்து பழனியாண்டவரை வழிபடுகின்றனர்.

## 4. குடும்பக்கூட்டம்

குடும்பத்துடன் வந்து பழனியாண்டவரைத் தரிசனம் செய்பவர்களைக் 'குடும்பக்கூட்டம்' என்று கூறலாம். பெரும்பாலோர் குடும்பத்துடன் வந்து தரிசனம் செய்வதைப் பெரிதும் விரும்புகின்றனர். குடும்பத்துடன் வருபவர்கள் தங்குவதற்கு மடங்களும், திருக்கோயில் சத்திரங்களும் பழனியில் மிகுதியாக இருப்பதால் குடும்பக்கூட்டங்கள் மிகுதியாக வருகின்றன. சில குடும்பக்கூட்டங்கள் பழனியாண்டவரைத் தரிசித்துவிட்டு மலைமீது உள்ள மண்டபங்களிலும், திரு ஆவினன்குடிக் கோவிலிலும் தாங்கள் கொண்டுவந்த உணவினைக் குடும்பத்தாருடன் வட்டமாகக் கூடி உண்பதை இக்கோவிலில் காணலாம். இவ்வாறு குடும்பத்தினருடனும், உறவினர்களுடனும் சேர்ந்து உணவருந்துவது உறவு முறையை வலுப்படுத்தும் என்று மானுடவியல் அறிஞர்கள் கூறுகின்றனர்.

### 5. திருமணக்கூட்டம்

திருமணத் தம்பதியர் பலர் கூட்டம் கூட்டமாகப் பழனியாண்டவரைத் தரிசனம் செய்வதைக் காணலாம். பழனியில் வந்து திருமணம் செய்து கொள்வதைப் பல குடும்பங்கள் விரும்புகின்றன. முகூர்த்த நாட்களில் திரு ஆவினன்குடிக் கோவிலில், திருமணக் கூட்டங்கள் நிறைந்திருப்பதைக் காணலாம்.

### 6. காணிக்கைக் கூட்டம்

பழனிமலைக்கு வருவோர் காவடி, தேங்காய், பழம் போன்ற காணிக்கைப் பொருட்களைக் கொண்டு வருகின்றனர். பெரும்பாலோர் காணிக்கைப் பொருட்களுடன் வருகின்றனர். வேண்டிக் கொண்ட பக்தர்கள் உண்டியலில் 'காசு' களைச் செலுத்துகின்றனர். காணிக்கைக் காசுகளை ஒரு சிறிய மஞ்சள் துணியில் முடிந்து வைத்துக் கொண்டு வந்து பழனி முருகன் கோவில் உண்டியலில் செலுத்துகின்றனர். உண்டியலில் காசு செலுத்துவதைப் பெரும்பாலான பக்தர்கள் வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

விவசாயிகள் தங்கள் வயல்களில் விளைந்த நெல், கம்பு, சோளம் முதலிய தானியங்களையும், பயறு வகைகளையும், மிளகாய், புகையிலை முதலானவற்றையும் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். தானியங்களைக் காணிக்கையாகச் செலுத்துவதற்கு என்று திருக்கோவில் நிர்வாகம் மலைக்கோவிலில் நவதானிய உண்டியல் பெட்டி ஒன்றை வைத்துள்ளது.

சிறிய வெள்ளிவேல், தங்கவேல் முதலானவற்றையும் பக்தர்கள் காணிக்கையாக அளிக்கின்றார்கள். தைப்பூசம் மற்றும் பங்குனி உத்திரவிழாவின் போது சில பக்தர்கள் பசுமாடுகளைக் கன்றுக்குட்டியுடன் பழனி முருகன் கோவிலுக்கு காணிக்கையாக அளிக்கின்றனர். பழனி முருகப் பெருமானுக்குப் பாலாபிடேகம் செய்வதற்காகப் பசுமாட்டைக் காணிக்கையாக அளிப்பதாக, பக்தர் ஒருவர் பேட்டியின் போது தெரிவித்தார்.

கொங்கு நாட்டுக் கிராமப்புறங்களிலிருந்து வரும் பக்தர்கள் சேவலைக் கொண்டு வந்து பழனி முருகனுக்குக் காணிக்கையாக அளிக்கின்றனர்.

**7. சுற்றுலாக்கூட்டம்**

பிற பகுதிகளுக்குச் செல்லும் சுற்றுலாப் பயணிகள் பழனிக்கு வந்து சாமி தரிசனம் செய்துவிட்டுப் போகின்றனர். பழனி - கொடைக்கானல் மலைச்சாலை அமைப்பிற்குப் பிறகு சுற்றுலாப் பயணிகள் பழனிக்கு வருவது அதிகரித்துள்ளது.

**8. ஐயப்பன் கூட்டம்**

ஐயப்பன் கோவிலுக்குச் செல்லும் பக்தர்கள் பெரும்பாலோர் பழனிக்கு வந்து பழனியாண்டவரைத் தரிசித்துவிட்டுச் செல்கின்றனர். கார்த்திகை மாதங்களில் ஐயப்ப பக்தர்கள் கூட்டம் பழனிமலையில் நிரம்பி வழிவதைக் காணலாம்.

**9. மலையாளிகள் கூட்டம்**

கேரள மாநிலத்திலிருந்து மலையாளிகள் கூட்டம் கூட்டமாக வந்து பழனியாண்டவரைத் தரிசனம் செய்வதை நாள்தோறும் இங்குக் காணலாம். பொதுவாக மலையாளிகள் கூட்டம், கூட்டமாகவே பழனி முருகனை வழிபட வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாறு பல கூட்டங்களாக வந்து பழனியாண்டவரை வழிபடும் கூட்ட வழிபாட்டுமுறை பக்தர்கள் மத்தியில் சமுதாய ஒருமைப்பாட்டு உணர்வினைத் தோற்றுவிக்கிறது.

## வெளிப்பாட்டு வழிபாட்டுமுறை

பழனி முருகன் கோவில் வழிபாட்டில், தனி பக்தனாக அமைதியாகத் தியான நிலையிலிருந்து வழிபடுவதைவிட உரக்கச் சொல்லி வழிபடும் வெளிப்பாட்டு வழிபாடே பெரும்பான்மையாகக் காணப்படுகிறது.

தைப்பூசம், பங்குனி உத்திரம், பெரிய கார்த்திகை போன்ற விழாக்களின் பொழுதும், பிற நாட்களிலும் பல குழுக்களையும், தனி பக்தர்களையும் கள ஆய்வு செய்த பொழுது குழுவினரும், தனி பக்தர்களும் கோவிலின் உள்ளும், வெளிப்பகுதிகளிலும் உரக்கச் சொல்லி வழிபடும் "வெளிப்பாட்டு வழிபாட்டு" முறையினையே காணமுடிந்தது.

முருகனை வழிபட வரும் பக்தர்கள் ஆடிக்கொண்டும், பாடிக்கொண்டும், அரகர என்று உரக்கச் சொல்லிக் கொண்டும், முருகா முருகா என்று கூறிக்கொண்டும் வருகின்றனர்.

மலைவலம் வரும்பொழுதும், மலையேறிச் செல்லும்பொழுதும், கோவில் குருக்கள் பழனியாண்டவருக்குத் தீபாராதனை காட்டும் பொழுதும், பக்தர்கள் உண்டியலில் காணிக்கை செலுத்தும்பொழுதும் 'பழனியாண்டிக்கு அரோகரா', 'மொட்டையாண்டிக்கு அரோகரா', 'வடிவேல் முருகனுக்கு அரோகரா', 'முருகனுக்கு அரோகரா' என்று பலரும் ஒன்று சேர்ந்து உரக்கச் சொல்லி வழிபடுகின்றனர்.

## நாட்டுப்புற மந்திரங்கள் (Folk charms)

'நாட்டுப்புற மந்திரங்கள்' என்பன வாய்மொழியாக வழங்கப்பட்டு வரும் வாய்மொழி வாய்பாடுகளின் தொகுப்பாகும். இவை தலைமுறை தலைமுறையாக வழங்கப்பட்டு வருவனவாகும். மரபுவழிப்பட்டதாகும். ஒரு குறிப்பிட்ட தெய்வத்தின் உதவியை அல்லது அருளை வேண்டிப் பெறுவதாகும். தங்களது நோக்கங்கள் நிறைவேறுவதற்காகக் கூறுவனவாகும். ஓய்.எம். சொகலாவ் என்பார் "நாட்டுப்புற மந்திரங்கள் என்பன மந்திரத்தன்மைகள் கொண்ட வாய்பாடுகள்" (An oral formula possessing magic significance) என்று கூறுகின்றார்.[52]

பழனி முருகன் கோவில் வழிபாட்டில் பக்தர்கள் பல்வேறு சந்தர்ப்பங்களில் 'அரகர' மந்திரத்தை உரக்கச் சொல்லி வழிபடுகின்றனர். "அரகர அரகர அரோகரா" என்று முருகனை நினைத்து உரக்கச் சொல்லுகிறார்கள். இவ்வாறு சொல்லுவது முருகனின் அருளைப் பெறுவதற்காகும். பழனி முருகன் கோவில் வழிபாட்டில் வாய்மொழியாக வழங்கி வரும் அரகர மந்திரங்கள் தொன்று தொட்டு வழங்கி வரும் வாய்மொழி வாய்பாடுகள் என்று கூறலாம்.

பல குழுக்கள் மலையேறிக் கொண்டு செல்லும்பொழுது அரகர ஒலியினைத் திரும்பத்திரும்ப உரக்கச் சொல்லிக்கொண்டே மலையேறு வதைக் கள ஆய்வில் காணமுடிந்தது.

இவ்வாறு கோயிலுக்கு உள்ளேயும், வெளியிலும் பலர் சேர்ந்து உரக்கச் சொல்லி வழிபடும் வெளிப்பாட்டுப் போக்குதான் இக்கோவிலில் வழக்கிலுள்ளது.

ஆண்டவரின் பெயரினை உரக்கச் சொல்லி வழிபடுவது 'வாய்மொழி மரபு வழிபாடு' ஆகும். வாய்மொழி மரபினை அடிப்படையாகக் கொண்ட வழிபாட்டு மரபே பழனி முருகன் கோவிலில் நிலவி வருகின்றது.

பக்தர்கள் அவரவர் விருப்பத்திற்கேற்பப் பழனி முருகனை வழிபட்டு வருகின்றனர். முருகனைப் பெயரிட்டு அழைத்துத் தன்னைக் காப்பாற்றுமாறு உரக்கக் கூறுவது இங்குப் பெருவழக்கமாகும்.

***"அப்பா முருகா காப்பாத்திக்க***
***வடிவேல் முருகா காப்பாத்திக்க"***

என்று உரக்கச் சொல்லிக் கும்பிடுவதை நிறையக் காணலாம். சிலர் தங்கள் குறைகளைச் சொல்லியும் வழிபடுகின்றனர். இவ்வாறு தங்கள் விருப்பம் அல்லது வேண்டுதலைத் தெரிவித்து வழிபடுவது இங்குப் பெருவழக்காக உள்ளது.

## நாடு தழுவிய வழிபாடு

பழனி முருகன் கோவில் வழிபாடு, பழனியையும் அதன் சுற்றுப்புறங்களையும் சார்ந்த வழிபாடாக மட்டும் அமையாது, தமிழகத்தின் பல பகுதிகளையும், கேரள மாநிலத்தின் சில பகுதிகளையும் தழுவிய வழிபாடாகவும் அமைகின்றது. தற்போது பல மாநிலங்களைச் சேர்ந்த பக்தர்கள் பழனி முருகனை வழிபட வருகின்றனர்.

தைப்பூசத்திருவிழாவின்பொழுது திருவிழாத் தொடங்குவதற்கு ஒரு மாதத்திற்கு முன்பிருந்தே செட்டிநாட்டுப் பக்தர்களும், சேலம் பக்கம் உள்ள இடைப்பாடிப் பக்தர்களும், கேரள மாநிலத்தைச் சார்ந்த மலையாளி பக்தர்களும் பழனி முருகன் கோவிலுக்குப் பாதயாத்திரை வருகின்றனர்.

அரசாங்க விடுமுறை நாட்களிலும், திருமண முகூர்த்த நாட்களிலும், திருவிழாக் காலங்களிலும் இந்தியாவில் பல்வேறு பகுதிகளில் வாழும் மக்கள், திரளாக வந்து பழனி முருகனை வழிபட்டுச் செல்லும் போக்கு தற்போது அதிகரித்து வருகின்றது.

சாலைப்போக்குவரத்து வசதிகளால் பழனித் தலத்திற்குச் சுற்றுலா வரும் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கையும் அதிகரித்து வருகின்றது. மதுரை, இராமேஸ்வரம் முதலிய திருத்தலங்களுக்குத் திருத்தலப்பயணம் (Pilgrimage) செல்லும் பக்தர்கள் பழனி முருகன் கோவிலுக்கு வந்து செல்வதை இன்று பெருமளவில் காண முடிகின்றது.

## கல்வெட்டுக்கள் கூறும் வழிபாட்டுமுறைகள்

மிகப் பழங்காலத்திலிருந்தே பழனி முருகன் கோவில் புகழ்பெற்ற கோவிலாக விளங்கி வந்துள்ளது. பழனி முருகன் கோவிலின் கருவறை வெளிப்புறச் சுவரில் ஏழு கல்வெட்டுக்கள் உள்ளன. இக்கல்வெட்டுக்களின் மூலம் பழனி முருகன் கோவில் பூசை, திருவிழாக்கள், திருப்பணிகள் பற்றி அறிந்து கொள்ள முடிகின்றது.[53]

கி.பி. 1300இல் பாண்டிய அரசன் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் தனது பெயரில் பழனி மலைக்கோவிலில் ஒரு கால சந்தி பூசையை ஏற்படுத்துகின்றான். 'அதற்கு அவனி வேந்த ராமன் சந்தி' என்று பெயரிடுகின்றான். இச்சந்தி பூசைக்குத் தேவையான அமுது படிக்கும், சாத்துப்படிக்கும், விஞ்சனத்துக்கும், 'அவனி வேந்த நல்லூர்' என்ற ஊரைத் தானமாகக் கொடுக்கின்றான். கி.பி. 1316இல் ஆண்ட ஜடாவர்மன் வீரபாண்டியன் 22 வேலி ஒரு மா நிலங்களை அமுதுபடி, சாத்துப்படி முதலிய செலவுகளுக்காகத் தானமாகக் கொடுத்துள்ளான்

கி.பி. 1318இல் ஆண்ட ஜடாவர்மன் வீரபாண்டியன் காலத்தில் சுந்தரபாண்டிய நல்லூரைச் சேர்ந்தவர்கள் காடுகளையும், புன்செய்களையும், குடியிருப்புக்களையும், தோட்டங்களையும், குளங்களையும் பழனி முருகன் கோவிலுக்குத் தானமாகக் கொடுத்துள்ளார்கள்.

விஜயநகர மாமன்னர் மல்லிகார்ஜுனன் ஆண்டகாலத்தில் (18.10.1471இல்) பழனி முருகன் கோவிலில் மூன்று சந்திகளில் பூசையும், மகாபூசையும் சிறப்பாக நடக்கவும், திரு அமுது, திரு நந்தாவிளக்கு, திருமாலை, திருமஞ்சனம் முதலியவைகளுக்காகவும் வைகாவூர் நாட்டு 'இரவிமங்கலம்' தானமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

## இராமப்பய்யன் பட்டயம் கூறும் வழிபாட்டுமுறைகள்

பழனி முருகன் கோவில் பூசை முறைகள், வழிபாடுபற்றி இராமப்பய்யன் பட்டயம் குறிப்பிடுகின்றது. வரலாற்று முறையில் முருகன் கோவில் வழிபாட்டு முறைகளை அறிந்துகொள்ளவும்; பூசை முறைகளில் ஏற்பட்ட மாற்றங்களை அறிந்து கொள்ளவும் இப்பட்டயம் உதவுகின்றது. பழனிக் கோவிலில் முன்பு பூசை செய்தவர்கள் பற்றியும், இன்னின்னாருக்கு இன்னின்ன பணிகள் என்பது பற்றியும் இப்பட்டயம் குறிப்பிடுகின்றது.

இராமப்பய்யன் காலத்திற்குமுன், சித்தர்கள் இக்கோவிலில் பூசை செய்து வந்திருக்கின்றனர். சித்தர்களுக்கு உதவியாகப் பண்டாரங்கள் பூசைக் காரியங்களைச் செய்து வந்தனர் என்றும் இப்பட்டயம் குறிப்பிடுகின்றது. "பண்டாரங்கள் இருபத்தினாலுபேரும் மாமூல் வழக்கப்படிக்குத் திருமஞ்சனம், மாலை, சந்தனம், வில்வம் வகையறா, பள்ளியறைக் கட்டியம், ஓதுவார், கந்தபுராணம், திருப்புகழ், திருவலகு, சட்டக்கால், தூபக்கால் பரிவட்டம் துவைக்கிறது கொல்லச் சேவகம் உபயத் திருமஞ்சனம் வகையறா கட்டளை முதலானதெல்லாம் எண்ணெனைக்கும் மாமூலாய்க் கட்டளையிட்டிருக்கிறோம்" [54] என்று பட்டயம் கூறுவது சித்தர்கள் முருகனுக்குப் பூசை செய்யும் பொழுது, பூசைக்கு வேண்டிய காரியங்களைப் பண்டாரங்கள் செய்ய வேண்டும் என்று குறிப்பிடுகின்றது.

வரலாற்று நிலையில் வடமொழியாக்கத்தினைப் பற்றி அறிந்து கொள்ள இப்பட்டயம் சான்றாக அமைகின்றது. இன்றைய சமூக அமைப்பில் சமுதாயப் படித்தர நிலையில் கீழ்நிலையில் உள்ளவர்கள் மேல் நோக்கிச் செல்வதற்கு வடமொழியாக்க நெறியினைப் பின்பற்றுகின்றனர் என்று எம்.என். சீனிவாஸ் குறிப்பிடுகின்றார். பழனி முருகன் கோவிலைப் பொறுத்தவரை இராமப்பய்யன் கால கட்டத்தில் தான் வடமொழியாக்கம் தொடங்கிவைக்கப்பெற்றது எனலாம். கொடுமுடி சரஸ்வதி அய்யனை " ஸ்தவராச பண்டிதர்" என்று காரணப் பெயரிட்டு வடமொழியாக்கப்படி அழைக்க உத்தரவிடுகின்றான் இராமப்பய்யன்.

காலப்போக்கில் பழனி முருகன் கோயில் வழிபாட்டு முறைகளில் வடமொழியாக்கம் படிப்படியாக இடம்பெறலாயிற்று. திருக்கோவில்

நிர்வாகம் நடத்தும் பூசை, கும்பாபிடேகம், விழாக்கள் ஆகியனவற்றில் வடமொழியாக்கச் செல்வாக்கு இருக்கின்றதே தவிர பாமர மக்கள் பழனியாண்டவரை வழிபடும் போக்கில் வடமொழியாக்கம் காணப்படுவது இல்லை.

இன்று பழனி முருகன் கோவிலில் நடைபெறும் திருவிழாக்களைக் கூர்ந்து கவனித்தால் ஒருபுறம் கோவில் குருக்கள் மூலமாக வடமொழியாக்க முறையும் ; மற்றொருபுறம், பாமரர்களால் கொண்டு வரப்படும் நாட்டுப்புற வழிபாட்டுமுறையும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

## தொகுப்புரை

மலைக்கோவிலில் ஒவ்வொரு நாளும் ஆறுகாலப் பூசைகள் முறையாக நிகழ்த்தப் பெறுகின்றன. இப்பூசைகளில் இராக்காலப்பூசை மிகவும் சிறப்பாகவும், குறிப்பிடத்தக்கதாகவும் அமைந்துள்ளது.

வேண்டிக் கொண்ட பக்தர்கள் பலர் தங்கரதம் இழுப்பதற்கு திருக்கோவிலில் கட்டணம் செலுத்துகின்றனர். கட்டணம் செலுத்திய பக்தர்கள், குடும்பத்தினருடனும், உற்றார் உறவினருடனும் வந்து தங்கரதம் இழுக்கின்றனர்.

திரளான பக்தர்கள் பழனி முருகன் கோவில் தங்கரத வைபவத்தில் கலந்து கொண்டு பழனி முருகனை வழிபடுகின்றனர். அருள்மிகு பெரியாவுடையார் கோவிலில் நாள்வழிபாடு சிவாகமங்களை அடிப்படையாகக் கொண்டு நடைபெறுகிறது.

பழனி ஆண்டவரின் உருவத்திருமேனி நவபாஷாணத்தால் ஆனது என்று கூறுகின்றனர். பழனியாண்டவரின் உருவத்திரு மேனியில் சார்த்திய இராக்கால சந்தனத்தை நோய்தீர்க்கும் மருந்தாகப் பக்தர்கள் கருதி உட்கொள்கின்றனர். பழனியாண்டவரைப் பக்தர்கள் அபிடேகப் பிரியன் என்று அழைக்கின்றனர்.

அபிடேகப் பொருள்களில், இங்கு பஞ்சாமிர்தம் மிகவும் சிறப்பான பொருளாகக் கருதப்படுகிறது. பழனிப் பஞ்சாமிர்தம் உலகில் சிறப்புப்பெற்றதாகும்.

துறவுக்கோலத்தில் எழுந்தருளியிருக்கும் பழனியாண்டவருக்கு இராஜ அலங்காரமே அதிகமாகச் செய்யப்படுகிறது. குமாரதந்திரம், கோவிலினுள் மூலவருக்குச் செய்கின்ற வழிபாடு பற்றியே பேசுகிறது. பழனிமலை வடிவேலர் சந்நிதிமுறை இதற்கு மாறாகக் கோவிலுக்கு வெளியே நடைபெறுகின்ற சடங்குகளையும், வழிபாட்டு முறைகளையும் பற்றிப் பேசுகிறது.

பழனி முருகன் கோவிலில், மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து வழிபடுவதே பெருவழக்காகக் காணப்படுகிறது. எனவே இவ்வழி பாட்டினைக் கூட்டவழிபாடு என்று குறிப்பிடலாம்.

தனியாகத் தியான நிலையிலிருந்து வழிபடுவது இங்கு மிக அரிது. உரக்கச் சொல்லி வழிபடும் வெளிப்பாட்டு வழிபாடே பழனி முருகன் கோவிலில் பெரும்பாலும் காணப்படுகின்றது.

இக்கோவில் வழிபாடு பழனியையும், அதன் சுற்றுப்புறங்களையும் மட்டுமல்லாது தமிழகத்தில் பல பகுதிகளையும், மற்றும் கேரள மாநிலத்தின் சில பகுதிகளையும் தழுவிய ஒன்றாக அமைந்துள்ளது.

இந்தியாவிலுள்ள பல மாநில மக்கள் பழனி முருகன் கோவிலை வழிபட வருகின்றனர். பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த மக்கள் நாள் வழிபாட்டின்போதும், திருவிழாக்களின் போதும் ஒன்றாகக் கூடுவதால், சமூக ஒருமைப்பாட்டுணர்வு உண்டாகின்றது. மொழிக் கலப்பு, பண்பாட்டுக் கலப்பு ஏற்பட பழனி முருகன் கோவில் களமாக அமைகின்றது.

## குறிப்புக்கள்

1. டி.எம்.பி. மகாதேவன், இந்து சமயத் தத்துவம், ப. 164.
2. திருமந்திரம், தொகுதி. 1 பா.எண். 981.
3. மேலது, பா.எண். 982.
4. திரு.வி.க., முருகன் அல்லது அழகு பக். 100-101.
5. கா. கைலாசநாத குருக்கள், சைவத் திருக்கோவிற் கிரியை நெறி, ப. 167.
6. மேலது, ப. 174,
7. மேலது, ப. 183,



தீர்த்தக்காவடி எடுத்துவரும் பக்தர்கள்



ஆறுமுகக்காவடி கொண்டுவருவோர்



காவடிக் கூட்டத்தினர்



அலகு குத்திக்கொண்டு வரும் பக்தர்

8. ஏ. பாலதண்டாயுதபாணிக் குருக்கள், வயது 44, பேட்டி நாள் 23-9-80
9. E.M. Kandaswami Sarma (Ed.), Kumaratantram, இந்த வடமொழி ஆகமப் பகுதிகளைத் தமிழில்மொழி பெயர்த்துச் சொன்னவர்: எஸ். சாம்பசிவ சிவாச்சாரியார், முதல்வர், வேத சிவாகமப் பாடசாலை, பழனி, வயது 52.சொன்ன நாள்: 11-8-80.
10. நாள்வழிபாடு பற்றிய செய்திகள் குருக்களின் பேட்டிகள் வாயிலாகவும், திருக்கோவில் நிர்வாகம் வெளியிட்டுள்ள கும்பாபிடேகமலர் (1973) வாயிலாகவும், 'உற்றுநோக்கலின்' அடிப்படையிலும் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.
11. அ. அறிவொளி, பழனி, ப. 118.
12. பழனி, அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாச் சிறப்புமலர்,(1973), ப.127.
13. ஏ. பாலதண்டாயுதபாணிக் குருக்கள், வயது 44, பேட்டி நாள், 23-9-80.
14. கா. கைலாசநாத குருக்கள், மு. நூ., பக். 199-200.
15. எஸ். சுவாமிநாத சிவாச்சாரியார், சோடச உபசார விளக்கம், அருள்மிகு இராமநாத சுவாமி திருக்கோயில், இராமேஸ்வரம், மகாகும்பாபிடேகச் சிறப்புமலர், ப. 138.
16. பி.நடராசசுவாமி, வயது 45, பேட்டி நாள்: 10-6-80
17. கு. நடேசக்கவுண்டர், பழனியாண்டவர் மயில்விடுதூது, ப.10.
18. பி. நடராசசுவாமி, வயது 45, பேட்டிநாள்: 10-6-80
19. J.M. Somasundaram Pillai. Palani, The Sacred Hill of Muruga, p.8.
20. ந. கல்யாணசுந்தரம், திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு, ப.52.
21. திருமந்திரம்.இரண்டாம் பகுதி, பா.எண். 1800.
22. என். பத்மநாதன், ஆறுமுகனுக்குகந்த ஆறுபடை வீடுகள், ப. 129.
23. The Hindu, dated 25th January 1984.
24. சோமலெ, மதுரை மாவட்டம், ப. 382.
25. எஸ். கிருஷ்ணசாமி (சித்தவைத்தியர்), வயது 49, பேட்டி நாள் 11-3-84
26. கா. கைலாசநாத குருக்கள், மு.நூ., ப. 194.
27. மேலது பக். 195-196.
28. R.K. Das, Temples of Tamilnadu, p. 98.
29. திருப்புகழ், மூன்றாம் தொகுதி, பழனி, பா.எண். 5.
30. Somalay, Palani The Hill Temple of Muruga, p.65.

31. வி.மணி, வயது 52, பேட்டி நாள் 9-3-84.
32. Somalay, op. cit, p.65.
33. அ. அறிவொளி, பழனி, ப. 103.
34. சோமலெ, பழனி திருக்கோயில் வழிகாட்டி, ப. 13.
35. The Hindu, dated 10th January 1984,
36. கா. கைலாசநாத குருக்கள், மு.நூ., ப. 196.
37. சோமலெ, பழனி திருக்கோயில் வழிகாட்டி, ப.65.
38. திருக்குறள், பா.எண். 388.
39. டி.எம்.பி. மகாதேவன், மு. நூ., ப. 47.
40. J.M. Somasundaram Pillai, op. cit., p.18.
41. கா. கைலாசநாத குருக்கள், மு.நூ., ப. 196.
42. மேலது, ப. 201.
43. ஏ. பாலதண்டாயுதபாணி குருக்கள், வயது 44, பேட்டி நாள்: 23-9-80
44. திருமந்திரம், பகுதி 1, பா.எண். 979.
45. கா. கைலாசநாத குருக்கள், மு. நூல்., ப. 201.
46. மேலது, ப. 201.
47. மேலது, ப. 202.
48. மேலது, ப. 202.
49. 'பழனிமலை வடிவேலர் சந்நிதிமுறை' எனும் நூல் எட்டுப் பாடல்களைக் கொண்டதாகும். சென்னை ஆர்.ஜி.பதி கம்பெனி, இந்நூலைப் பதிப்பித்துள்ளது. இந்நூலில், நூலாசிரியர் பெயர் இடம் பெறவில்லை. ஆயின், அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் வெளியிட்டுள்ள கும்பாபிடேக மலரில் இடம் பெற்றுள்ள 'பழனியாண்டவர் இலக்கியங்கள்' எனும் கட்டுரையில் இந்நூலாசிரியர் பெயர் வை. அகிலாண்டநாயகி அம்மாள் என்று குறிக்கப் பெற்றுள்ளது. 'பழனி' பற்றி நூல் எழுதிய பலர் இந்நூற் பாடல்களை ஆங்காங்கே மேற்கோளாகக் காட்டியுள்ளனர்.
50. பழனிமலை வடிவேலர் சந்நிதிமுறை, பா.எண். 5.
51. M.N. Srinivas, Social Change in Modern India, pp. 53-54.
52. Sahab Lal Srivastava, Folk Culture and Oral Tradition, pp. 12-15.
53. பழனித் தலவரலாறு, பக். 4-14.
54. J.M. Somasundaram Pillai, op.cit, p. 45



# 3. ஆண்டுதோறும் நிகழும் திருவிழாக்கள்

பழனி முருகன் கோவிலில் விழாக்கள் இடையறாது நடந்து கொண்டிருக்கும். மக்கள், திரளாகக் கூடித் தமக்குள் ஓர் உறவை ஏற்படுத்திக் கொள்வதற்கு இக்கோவில் விழாக்கள் பெரிதும் துணை செய்கின்றன. விழாக்களின் அடிப்படைப் பண்பு பற்றி விளக்குகின்ற ராபர்ட் ஜெரோம் ஸ்மித் சமூக ஒருங்கிணைவுகளை வளர்த்தெடுக்கவும், தனிமனிதர்களைக் குழுவாகவோ, சமூகமாகவோ ஒன்றியைத்துத் திரும்பத்திரும்ப நிகழ்த்தப்பெறும் பொதுமைக் கூறுகள் கொண்ட செயல்களுக்கு உரியவர்களாக ஆக்குகின்ற ஒரு முக்கியமான கருவியென்றும், கேளிக்கைகளுக்கும், மகிழ்ச்சிக்கும் இடம் தந்து தம் வேறுபாடுகளை நீக்கும் தன்மையினை உருவாக்குகின்றதாகவும் அவர் விளக்குவார்.[1] இக்கருத்திற்கு ஏற்பவே பழனி முருகன் கோவில் விழாக்கள் அமைந்திருக்கின்றன.

பழனி முருகன் கோவிலிலும் அதன் சார்புக் கோவில்களிலும் ஆண்டுதோறும் விழாக்கள் நடைபெறுகின்றன. இக்கோவிலில் திருவிழாக்கள் பல நடப்பதனாலும், அவற்றுள் மக்களுடைய பங்கேற்பு குறிப்பிடத்தக்க முறையில் அமைந்திருப்பதாலும் அவற்றுடைய தன்மைகளையும் குறிப்பிட்டுக் கூறுதல் இங்கு அவசியமாகும்.

## திருவிழாக்களின் நோக்கமும் பயனும்

கோவில்களோடு தொடர்புடைய விழாக்கள் சமயச் சார்புடையனவாகவும் பரந்த அளவில் சமூக நிகழ்வுகளாகவும் அமைகின்றன. சமய அடிப்படையில் இவற்றை நோக்கும்பொழுது இவை ஆன்மீகத்தோடு தொடர்புடையனவாகத் தத்துவ அறிஞர்களால் கூறப்படுகின்றன. "மக்களுக்கு ஓர் ஆன்மீகச் சூழ்நிலையை ஏற்படுத்தித் தருவதற்கே திருவிழாக்கள் ஏற்பட்டன. அச்சூழ்நிலையில் மக்கள் ஆன்மீகச் சுகம் பெற்று; ஆன்மாவைப் பண்படுத்தித் திருத்தி அமைக்கலாம். விழாநாட்களை ஒருவன் சரிவரப் பயன்படுத்திக் கொண்டான் என்றால் அதுவே உண்மையில் ஒருவன் வாழ்ந்த நாட்களாகும். இறைவனோடு இடையறாது தியானத்திலிருப்பதற்கு விழாக்கள் உதவுகின்றன. பெரும்பாலான மக்களுக்கு நீண்ட ஆன்மீகப் பாதையில் நெடுந்தூரம் பயணம் செய்ய வேண்டியிருப்பதால் அவர்களுக்குத் தனித்தனி பிரார்த்தனை நாட்களும், சமய ஓய்வும் தேவைப்படுகின்றன. நாட்டின் பரப்பில் ஆலயங்களுக்குள்ள இடம் எப்படிப் பயன் உள்ளதாயிருக்கிறதோ அப்படியே காலங்களில் திருவிழா நாட்கள் பயனுள்ளனவாய் விளங்குகின்றன. ஆலயங்கள் இறைவனை நினைவூட்டும் இடங்களாய் இருப்பதுபோல, திருவிழாக்கள் இறைவனோடு தொடர்பு கொள்ளச் செய்யும் காலங்களாகப் பயன்படுகின்றன." [2] என்று திருவிழாக்களின் பயன்பற்றி டி.எம்.பி. மகாதேவன் கூறுகிறார்.

சமூக நிகழ்வுகளாக விழாக்கள் கருதப்படும்போது இவை

1. தனிமனித உறவுகளை வலுப்படுத்துகின்றன.
2. வேறுபட்ட குழுக்களிடையே பரஸ்பர தொடர்புகளை ஏற்படுத்துகின்றன.

3. தனிமனிதர்கள் அல்லது சமூகக் குழுக்களிடையே காணலாகும் வேறுபாடுகளுக்குப் பதிலாக அவர்களுக் கிடையே சகிப்புத்தன்மைகளை ஏற்படுத்துகின்றன.
4. தனிமனிதர்கள் குழுக்களோடு தம்மை இனங்கண்டு கொள்ளத் துணை செய்கின்றன.
5. நாள்தோறும் உழைப்பிலிருந்து விடுபடவும், உழைப்புத் தரும் சோர்விலிருந்து விடுபடவும் உதவுகின்றன.
6. பொருளாதார நிலையில் பரவலான பரிமாற்றம் நடைபெறுகிறது.
7. மக்கள் தம்முடைய கலைத்திறன்களை வெளிப்படுத்த ஏதுவாகிறது.
8. கேளிக்கை, மகிழ்வு ஆகிய உணர்வுகளை வளர்த்துக் கொள்ள இடமளிக்கின்றன.
9. பழக்க வழக்கம் - பண்பாட்டுப் பரிவர்த்தனைகளும் நிகழ்கின்றன.[3]

## விழாக்களின் சிறப்புத்தன்மை

பழனி முருகன் கோவிலில் நடைபெறும் விழாக்கள் முழுமதி நாட்களில் தமிழ் மாதங்களில் வரும் நட்சத்திரங்களை அடிப்படையாகக் கொண்டு, கொண்டாடப் பெறுகின்றன. நல்ல நாளிலும், வளர்பிறைக் காலங்களிலும், முழுமதி நாட்களிலும் பழந்தமிழர்கள் விழாக்களைக் கொண்டாடினார்கள் என்பதைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறிய முடிகின்றது. கார்த்திகை விளக்கீட்டு விழா, முழுமதி நாளில் தொடங்கியதனை அகநானூற்றுப்பாடல் குறிப்பிடுகின்றது[4] இந்திரவிழா சித்திரை மாதத்து முழுமதி நாளில் கொண்டாடப்பெற்றதைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.[5] இன்றும் சித்திரா பௌர்ணமி விழா, பெரும்பாலான கோவில்களில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டுவருகின்றது. வளர்பிறை நாட்களிலும், முழுமதி நாட்களிலும் விழாக் கொண்டாடும் மரபு இன்றும் பின்பற்றப் பட்டு வருகின்றது. இது பழந்தமிழர்தம் மரபாகும்.

விழாக்களைப் பொதுவாகப் பெருவிழா என்றும், சிறுவிழா என்றும் பாகுபாடு செய்யலாம். இவ்வாறு பாகுபாடு செய்வதற்கு

அடிப்படையாக இருப்பது பெருவாரியான மக்கள் பங்கேற்பேயாகும். பழனியைப் பொறுத்த அளவில் தைப்பூசமும், பங்குனி உத்திரமும் ஏனைய விழாக்களிலும் பெருவிழாக்களாகக் கருதப்படுதற்குரியவை. சோமலெ குறிப்பிடும்பொழுது "பழனி முருகன் கோவில் திருவிழாக்களுள் முதன்மையானது பங்குனி உத்திரம், அடுத்தது தைப்பூசம், மூன்றாவது ஐப்பசி மாதத்தில் கொண்டாடப்பெறும் கந்தசஷ்டி, சித்திரை - வைகாசியில் நடைபெறும் அக்கினி நட்சத்திரவிழாவும், வைகாசி விசாகம், தைக் கார்த்திகை, சித்திரை முதல் நாளில் தமிழ்ப் புத்தாண்டு விழாவும் குறிப்பிடத்தக்கவை" [6] என்று கூறுகின்றார்.

## திருவிழாக்களின் வகைகள்

விழாக்களைப் பெருவிழா, சிறுவிழா என்று பாகுபடுத்துவது போலவே, கிரியைகளின் அடிப்படையில் நான்காக வகைப்படுத்துவர்.[7] இவை, பின்வருவன.

1. சாகல்யம் : கொடியேற்றம் முதல் தீர்த்தவாரி வரை உள்ள கிரியைகள்.
2. பாவனம் : கொடியேற்றம் இல்லாது மற்ற கிரியை எல்லாம் உள்ளது.
3. சாந்திகம் : கொடியேற்றம் யாகபூசை இல்லாமல் மற்ற கிரியை உள்ளது.
4. மாங்கல்யம் : சாயுங்காலத்தில் ஒரு கால உற்சவம் ; எந்தக் கிரியையும் இல்லாமல் செய்வது.

பழனி முருகன் கோவிலில் கொண்டாடப்பெறும் தைப்பூசம், பங்குனி உத்திரம், வைகாசி விசாகம் ஆகியன "சாகல்யம்" எனும் வகையில் அடங்கும். கந்தர்சஷ்டி 'பாவன' உற்வசத்தில் அடங்கும். அக்கினி நட்சத்திரவிழா; ஆடிப்பூரம், விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, திருக்கார்த்திகை, மகாசிவராத்திரி, ஆகிய விழாக்கள் சாந்திகத்தில்' அடங்கும். சித்ரா பௌர்ணமி, அன்னாபிடேகம், ஆடிப்பதினெட்டாம் பெருக்கு, புட்டுத் திருவிழா ஆகியன மாங்கல்ய உற்சவத்தில் அடங்கும்.

விழாக்கள் பற்றி ஆராயும் நாட்டுப்புறவியலறிஞர் ஜெரோம் ஸ்மித் அதைப் பங்கெடுப்போர் அடிப்படையில் (1) பொதுவாகப் பலரும் பங்கேற்கும் விழாக்கள் என்றும் (General Participation Festivals); (2) சிறு குழுக்கள் பங்கு பெறும் விழாக்கள் (Limited Participation

Festivals) என்றும் இரண்டாகப் பிரிப்பார்.[8] பெருவாரியான மக்கள் பங்குகொள்ளும் விழாக்களில் ஒரு குறிப்பிட்ட சாதியோ குறிப்பிட்ட வட்டாரமோ என்றில்லாமல் பல்வேறுபட்ட குழுக்களும் கலந்து கொள்வர். பழனி முருகன் கோவிலில் நடைபெறும் திருவிழாக்கள் இத்தகையனவே ஆகும். குலதெய்வங்களுக்கு நிகழ்த்தப்பெறும் திருவிழாக்களை 'சிறு குழுக்கள் பங்கு பெறும் விழாக்கள்' என்று கூறலாம்.

பொதுத்தன்மை விழாவில், தனிமனிதன் தன்னை ஏனைய குழுக்களோடு ஒருவனாக இனங்கொண்டு விடுகிறான். மேலும், சமூகக் குழுவினுடைய பல்வேறு உறுப்பினர்களும் தமக்குள் நெருங்கி வருவதற்குப் பெரிதும் விழாவே ஒரே வாய்ப்பாக இருக்கிறதென்று இவர் கூறுவார்.[9]

## சார்புக் கோவில்களும் விழாக்களும்

மலைமேலிருக்கும் கோவிலும், அதன் சார்புடைய அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோவிலிலும், அருள்மிகு திருஆவினன் குடியிலும், நடைபெறும் விழாக்கள் அனைத்துமே பழனி முருகன் கோவில் விழாக்களாகவே கருதப்படுகின்றன. இக்கோவில்கள் அனைத்துமே முருகனை மையமாகக்கொண்டு அமைந்துள்ள ஒரே அமைப்பு (Unit) ஆகும். எனவே, விழாக்களும் அத்தகையனவே.

சார்புடைக் கோவில்களில் விழாக்கள் முடிவு பெறும்பொழுது, அககோவிலின் யாகசாலையில் வைக்கப்பட்டுள்ள தீர்த்தக்குடத்தை எடுத்துக்கொண்டு போய், மலைக்கோவிலில் எழுந்தருளியிருக்கும் பழனியாண்டவனுக்கு அர்த்தசாம பூசையின் பொழுது அபிடேகம் செய்வர். இது சார்புடைக் கோவிலில் விழா நடைபெற்றாலும் பழனி மலைக்கோவில் முருகனுக்கே விழா நடைபெறுகிறது என்பதையே காட்டுகிறது.

சில விழாக்கள் சார்புடையக் கோவில்களில் தொடங்கி மலைக்கோவிலோடு இணைந்தமைகிறது. தைப்பூசமும், பங்குனி உத்திரமும் அத்தகையனவே. ஆயின் இவ்விழாக்களின் தலைவன் முருகனே. மேலும் மலைக்கோவிலே மக்கள் பங்கேற்புக்குக் களமாக விளங்குகின்றது.

அக்கினி நட்சத்திரம், கந்தர்சஷ்டி, பெரிய கார்த்திகை ஆகிய விழாக்கள் மலைக்கோவிலிலேயே தொடங்கப் பெறுகின்றன. அதுபோது சார்புடையக் கோவில்களிலும் சிறப்புப் பூசைகள், அலங்காரங்கள், வழிபாடுகள் செய்யப்படுகின்றன.

சார்புக் கோவில்களில் சில விழாக்கள் நடைபெறுகின்றன. ஆடி மாதம் நடக்கின்ற விழாக்கள் அனைத்துமே சிவனுக்கும், பார்வதிக்கும் நடக்கின்ற விழாக்களாக அமைகின்றன. ஆவணியில் நடக்கின்ற புட்டுத்திருவிழா, மார்கழியில் நடைபெறும் திருவாதிரை ஆகிய விழாக்கள் சிவனுக்குரியனவாக நடக்கின்றன. விநாயகர் சதுர்த்தியன்று (ஆவணி) விநாயகருக்கு கோலாகலமாக விழா நடக்கின்றது. புரட்டாசியில் நவராத்திரி விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றது. இவ்விழாக்கள் முருகன் கோவிலோடு தொடர்புடைய சார்புடைக் கோவில்களில் நடைபெறுகின்றன. தனுர்மாத பூசை அருள்மிகு இலக்குமிநாராயணப் பெருமாள் கோவிலில் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. மகாசிவராத்திரி விழா அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலிலும், அருள்மிகு பெரியாவுடையார் கோவிலிலும் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றன. மகாசிவராத்திரி விழாவின் போது பழனியாண்டவருக்குச் சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தப் பெறுகின்றன.

"பழனியம்பதியில் வீற்றிருக்கும் பழனி ஆண்டவருக்குக் குமாரதந்திரம் அதன் சார்பு நூல்கள் இவைகளில் உள்ள விதிப்படியும், இத்தலத்தின் ஐதீக பழக்கவழக்கங்களையும் அனுசரித்தும் பூசை, மகோற்சவம் முதலியன நடைபெற்று வருகின்றன. இத்தலத்திற்கென்றே சில தனிச்சிறப்புக்களும் உண்டு" என்று 'பழனியாண்டவர் விழா தத்துவ விபரம்' பழனி முருகன் கோவில் திருவிழாக்கள் கொண்டாடப்படும் முறைபற்றிக் கூறுகின்றது.[10]

ஆண்டுதோறும் இத்திருத்தலத்தில் பல்வேறு திருவிழாக்கள் கோலாகலமாக கொண்டாடப்படுகின்றன. திருவிழாக் காலங்களில் உற்சவமூர்த்தி உலா வந்து பக்தர்களுக்கு அருள்புரிகின்றார்.

## சித்திரை

பழனித் திருத்தலத்தில் சித்தரை மாதத்தில் மூன்று திருவிழாக்கள் வெகு சிறப்பாக நடைபெறுகின்றன.

### அ. தமிழ்ப் புத்தாண்டு விழா

சித்திரை முதல் நாள், தமிழ்ப் புத்தாண்டு நாளாகும். தமிழ்ப் புத்தாண்டு நாளன்று அதிகாலை நான்கு மணிக்குக் கோவில் திறக்கப்பெறுகின்றது. அன்று முருகனை வழிபட்டு அருள் பெற்றால் ஆண்டு முழுவதும் நன்மை கிட்டும் என்ற நம்பிக்கை பக்தர்களிடம் காணப்படுகிறது. தமிழ்ப் புத்தாண்டு நாளன்று அதிகாலையில் அடியார்கள் முருகன்மீது பஜனைப் பாடல்களைப் பாடிக்கொண்டு வருகின்றனர். பலகுழுக்களாக மலைமீது அமர்ந்து முருகன் மீது பாடல்களைப் பாடி வழிபடுகின்றனர்.

இவ்விழாவில் குறிப்பிடத்தக்கது 'படிபூசை' விழா. இதனை அன்று அங்கு வரும் அடியார்கள் பலரும் செய்கின்றனர். மலை அடிவாரத்திலிருந்து மலை உச்சிவரை ஒவ்வொரு படியிலும் சந்தனப்பொட்டு வைத்து, மலர்தூவி, கற்பூரம் கொளுத்திப் பூசை செய்வது படிபூசையாகும். குழுக்களாக வருகிறவர்கள் திருப்புகழும் பிற பக்திப்பாடல்களும் பாடி வருவர். பஜனைப் பாடல்களைப் பாடிக் கொண்டு அனைவரும் மலையேறுவர்.

பழனி நகர மக்களும், வெளியூர்ப் பக்தர்களும், பழனியைச் சுற்றிலுமுள்ள கிராமப்புற மக்களும் பெரும் ஆர்வத்துடன் இவ்விழாவில் கலந்து கொள்கின்றனர்.

இந்நாளில் பக்தர்கள் நெல், கடலை, புகையிலை, மிளகாய் முதலியவற்றை மலைப்படிகளில் சூறை விட்டுக்கொண்டே செல்கின்றனர். தமிழ்ப் புத்தாண்டு நாளன்று 'பாட்டுவழிபாடு' இக்கோவிலில் இடம்பெறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

திருத்தணியில் நீண்ட காலமாகப் படிபூசை விழா தமிழ்ப்புத்தாண்டு நாளன்று கொண்டாடப் பெறுகின்றது என்பது இங்கு நினைவு கூரத்தக்கது.

### ஆ. *சித்திரா பௌர்ணமி விழா*

சித்திரா பௌர்ணமி விழா அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. அன்று, அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவில் உற்சவமூர்த்தியாகிய அருள்மிகு முத்துக்குமாரசாமி, வள்ளி தெய்வயானையுடன் வெள்ளிரதத்தில் உலா வருகின்றார். ஈரோட்டைச் சார்ந்த முருக பக்தர்கள் சித்திரா பௌர்ணமியன்று பழனியில் பெரிய அளவில் அன்னதானம் செய்து, அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் வெள்ளிரதம் இழுக்கின்றனர். தேர்த் திருவிழாவின் போது திரளான பக்தர்கள் கலந்து கொள்கின்றார்கள்.

### இ. *அக்கினி நட்சத்திரவிழா*

அக்கினி நட்சத்திரவிழா என்பது சித்திரை மாதத்துக் கடைசி ஏழு நாளிலும், வைகாசி மாத முதல் ஏழு நாளிலும் பக்தர்கள் பழனி மலையினை வலம் வருதல் ஆகும். இவ்விழா, வேனிற்கால விழாவாகும். பதினான்கு நாட்கள் இவ்விழா இத்தலத்தில் கொண்டாடப்பெறுகின்றது.

பழனியைச் சுற்றிலுமுள்ள கிராமங்களிலிருந்து கிராமப்புற மக்கள் அதிகாலை மூன்று மணிக்கே வந்து மலைவலம் வருகின்றனர். நெய்க்காரபட்டி, கஞ்சநாயக்கன்பட்டி ஆகிய கிராமங்களைச் சார்ந்த முருக பக்தர்கள் பஜனைக் குழுவுடன் பழனி வந்து பதினான்கு நாட்கள் பழனியில் தங்கி இருந்து காலை, மாலை நேரங்களில் ஆர்மோனியம் உள்ளிட்ட இசைக்கருவிகளை வாசித்துக் கொண்டும் முருகன் மீது பஜனைப் பாடல்களைப் பாடிக் கொண்டும் மலைவலம் வருவர்.

கிராமப்புற மக்கள் இவ்விழாவில் பெருவாரியாகக் கலந்து கொள்வதால் இவ்விழாவினைக் கிராமப்புற மக்கள் பங்கு கொள்ளும் விழா என்று குறிப்பிடலாம்.

விரதம் இருந்து பக்தர்கள் மலை வலம் வருகின்றனர். வேண்டுதல், நேர்த்திக்கடன் இவற்றிற்காகவும் மலைவலம் வருகின்றனர். பதினான்காவது நாள் விழா, 'கடைசி கிரி' அல்லது 'கடைசிக்கிழமை' யாகும். கடைசிக்கிரி நாளன்று ஆயிரக் கணக்கான பக்தர்கள்

காலையிலும், மாலையிலும் மலைவலம் வருகின்றனர். அக்கினி நட்சத்திர விழாவின் கடைசி நாளிரவில் அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவில் உற்சவமூர்த்தியாகிய அருள்மிகு முத்துக்குமாரசாமி வள்ளி தெய்வயானையுடன் கிரிவீதியில் உலா வருகின்றார். அக்கினி நட்சத்திரவிழாவின்போது கொங்கு நாட்டுக் கிராமப்புற மக்கள் காவடி எடுத்து வந்து பழனியாண்டவனை வழிபடுகின்றனர்.

பங்குனி மாதம் நடைபெறும் பங்குனி உத்திரவிழாவில் காவடி எடுத்துவர இயலாதவர்கள் அக்கினி நட்சத்திரவிழாவின்பொழுது காவடி எடுத்து வருகின்றனர். இப்பழக்கத்தினைப் பெரும்பாலான கிராம மக்கள் பின்பற்றி வருகின்றனர். குறிப்பாகப் பழனிவட்டம் காவலப்பட்டியைச் சார்ந்த காவடிக்கூட்டத்தினர். அலங்கரிக்கப்பட்ட காவடிகளை எடுத்து வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

சக்கிலியர் சமூகத்தைச் சார்ந்தவர்கள் "செருப்புக்காவடி" (சம்மாளி) எடுத்துக்கொண்டு வருகின்றனர். பங்குனி உத்திரவிழாவினைப் போலவே நாட்டுப்புற இசைக் கலைஞர்கள் நாட்டுப்புற இசைக்கருவிகளை வாசித்துக் கொண்டு வருவதையும் இவ்விழாவில் காணலாம். மேலும் 'தப்பு, திடும் ஆட்டங்கள் இவ்விழாவில் இடம்பெறுகின்றன. கரகாட்டம், காவடியாட்டம், கும்மியாட்டம் போன்ற நாட்டுப்புற ஆட்டங்களை இவ்விழாவின் போது காணலாம்.

பங்குனி உத்திரவிழாவில் காவடி எடுத்து வருதலும் அதன்போது காவடித் தாலாட்டுப் பாடல்கள் பாடப்பெறுதலும் இடம் பெறுவதுபோல, இவ்விழாவின்பொழுதும் அவை இடம் பெறுகின்றன. பெண்கள் பெருமளவில் இவ்விழாவில் கலந்து கொள்கின்றனர்.

அக்கினி நட்சத்திர விழாக்காலத்தேதான் நறுமணங் கமழும் கடப்ப மரங்களும், இனிய கனி மரங்களும், பழைய இலைகளை உதிர்த்து அழகிய கொழுந்துகளையும், தளிர்களையும் போதுக்களையும் பச்சிலைகளையும், அரும்புகளையும், மலர்களையும் பயனாகத் தந்து நிற்கும்.[11] இவ்விளவேனிற் காலத்து நறுமலர்ச் சோலையாகிய இதனகத்துப் புகுந்துவரும் தென்றல், மலைவலம் வருகிறவர்களின் உடலுக்கும், உள்ளத்திற்கும் தெம்பு தரக்கூடியது. பல மலர்கள், இலைகள் மேல் தழுவி வரும் இளங்காற்று, மூலிகை மணம் சுமந்து வருவதாகும்.

சித்தர்களோடு தொடர்புபடுத்தப்பெறும் இத்தலத்தில் இது சிறப்பானதாகும். மேலும் கடம்பமலர், முருகனுக்கு உகந்தது. அம்மலரை, வலம் வரும் மகளிர் விரும்பி அணிந்து வருவர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு சித்திரை மாதத்துத் திருவிழா தமிழ்ப் புத்தாண்டு விழா, சித்திரா பௌர்ணமி, அக்கினி நட்சத்திரவிழா என அமைகின்றது. இச்சித்திரை மாத விழாக்களில் தமிழ்ப்புத்தாண்டு தினத்தன்று பக்தர்கள் படிபூசை செய்து கொண்டு பழனியாண்டவரை வழிபடுதலும், சித்திரா பௌர்ணமி அன்று பக்தர்கள் அன்னதானம் செய்தலும், வெள்ளிரதம் இழுத்தலும், அக்கினி நட்சத்திரவிழாவின் பொழுது 'மலைவலம் வருதலும்' குறிப்பிடத்தக்கவையாகும்.

## வைகாசி - விசாகவிழா

விசாக நட்சத்திரம் முருகனின் பிறந்த நட்சத்திரமாகும். இந்நாளை முருகன் கோவில்களில் சிறப்பாகக் கொண்டாடுவர். அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் ஆண்டுதோறும் வைகாசி விசாகத்தன்று பத்து நாட்களுக்குச் சுவாமி புறப்பாட்டுடன் விழா சிறப்பாக நடைபெறும். தேர்த் திருவிழாவும் நடைபெறும்.

## ஆனி - அன்னாபிடேகம்

ஆனித் திங்களில் மலைக்கோவிலிலும், திரு ஆவினன்குடிக் கோவிலிலும், ஊர்க்கோவிலிலும், அருள்மிகு பெரியாவுடையார் கோவிலிலும் அன்னாபிடேகம் நடைபெறுகின்றது. நான்கு கோவில்களிலும், நான்கு நாட்களுக்குத் தொடர்ச்சியாக அன்னாபிடேகம் நடைபெறுகின்றது. ஆனி உத்திர நட்சத்திரத்தன்று அருள்மிகு நடராசப்பெருமானுக்கு அபிடேக ஆராதனைகள் நடைபெற்று அருள்மிகு நடராசப் பெருமானுடன் நால்வர் உற்வசமூர்த்திகளும் புறப்பாடாகி நகர்வலம் வந்து காட்சியளித்தல் சிறப்பானதாகும்.

## ஆடி

### 1. ஆடிப்பெருக்கு

ஆடிப்பதினெட்டாம் பெருக்கு விழாவிற்கு அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலிருந்து கைலாசநாதரும், அம்மனும் அருள்மிகு பெரியாவுடையார் கோவிலுக்குச் சென்று அங்குக் கன்னிமார்

பூசை முடித்துத் திரும்ப வந்து, இரவு நகர்வலம் வந்து காட்சி அளிப்பர். ஆடிப்பெருக்கு நாளன்று பழனி நகரமக்களும், சுற்றுப்புறத்தில் வாழும் கிராம மக்களும் சண்முகநதியில் தீர்த்தமாடி அருள்மிகு பெரியாவுடையார் கோவிலை வழிபடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

## 2. ஆடிக்கார்த்திகை

ஆடிக்கார்த்திகையன்று தமிழகத்தில் பல பகுதி களிலிருந்து பக்தர்கள் வந்து பழனியாண்டவரை வழிபடுகின்றனர். பலர் 'ஆடிக் கார்த்திகை' யன்று பூக்காவடி எடுத்து வந்ததைக் கள ஆய்வில் காண முடிந்தது. ஆடி மாதத்திலும் காவடி எடுத்துவரும் பழக்கத்தினை பழனி முருகன் கோவிலில் காணலாம்.

## 3. ஆடி அமாவாசை

ஆடி அமாவாசையன்று திரளான பக்தர்கள் பழனி வந்து சண்முக நதியில் உள்ள கொட்டகையில் முடிக்காணிக்கை செலுத்துகின்றனர். செலுத்தியபின், சண்முகநதியில் நீராடிப் பழனிமலை சென்று பழனியாண்டவரைத் தரிசனம் செய்வர். ஆடி அமாவாசையன்று முடிக்காணிக்கை செலுத்தி, சண்முகநதியில் நீராடினால் பாவம் 'நீங்கும் என்றும், வேண்டுதல் நிறைவேறும் என்றும் பக்தர்கள் நம்புகிறார்கள். இத்தினத்தன்று சண்முகநதிக்கரையில் முடிக்காணிக்கை செலுத்தும் கொட்டகையில் ஆயிரக்கணக்கான பக்தர்கள் நீண்ட வரிசையில் நின்றுகொண்டு இருந்ததைக் கள ஆய்வில் காணமுடிந்தது.

## 4. ஆடி இலட்சார்ச்சனை

ஆடித் திங்களில், அருள்மிகு பெரியநாயகியம்மன் திருக்கோவிலில் இலட்சார்ச்சனை நடைபெறுகின்றது.

இவ்விழாவின் பொழுது, அம்மன் சன்னதி மண்டபம் மலரால் பந்தலிட்டு அலங்கரிக்கப்படுகிறது. அம்மனையும் மலரால் அலங்காரம் செய்கின்றனர். கோவில் முழுதும் கோலம் தீட்டி அழகுபடுத்தப்படுகிறது. பெண்கள் மிகுதியான அளவிற்குக் கலந்து கொள்வதால் இவ்விழா-வினைப் பெண்கள் கொண்டாடும் விழா எனக் குறிப்பிடலாம். இலட்சார்ச்சனைப் பூர்த்தியன்று அம்மனுக்குப் புதிதாகச் செய்த

தங்கக்கவசம் சாத்துப்படி செய்யப்படும். அன்று இரவு அருள்மிகு அம்பிகை, வெள்ளி இரதத்தில் உலா வருகின்றார்.

### 5. ஆடிப்பூரம்

இவ்விழா பார்வதியின் தவத்தை நினைவுகூரும் வண்ணம் அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் பத்து நாட்கள் கொண்டாடப் பெறுகின்றது. நிறைமதி நாளில் சிவபெருமான தோன்றிப் பார்வதிக்குக் காட்சியளித்ததாகக் கருதப்படுகின்றது. ஆடிப்பூர நாளன்று அம்மன் ரத வீதிகளில் உலா வருகின்றார்.

ஆடி விழாக்களுள் ஆடிக்கார்த்திகை, ஆடி அமாவாசை, ஆடி இலட்சார்ச்சனை ஆகியன குறிப்பிடத்தக்க விழாக்கள் ஆகும். ஆடிக் கார்த்திகையன்று பக்தர்கள் பூக்காவடி எடுத்துக்கொண்டு வந்து பழனியாண்டவரை வழிபடுவதும், ஆடி அமாவாசையன்று பக்தர்கள் திரளாக முடிக்காணிக்கை செலுத்திச் சண்முகநதியில் நீராடிவிட்டுப் பழனியாண்டவரை வழிபடுதல், ஆடி இலட்சார்ச்சனையின் பொழுது பெண்கள் கூட்டம், கூட்டமாகப் அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலுக்குச் சென்று வழிபடுவதும் ஆடிவிழாக்களில் குறிப்பிடத்தகுந்த அம்சங்கள் ஆகும்.

## ஆவணி

பழனித்தலத்திலுள்ள அனைத்துக் கோவில்களிலும் விநாயகர் சதுர்த்தி சிறப்புடன் கொண்டாடப்படுகின்றது. ஆவணி மூலவிழா அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் கொண்டாடப் பெறுகின்றது. மூல நட்சத்திரத்தன்று 'பிட்டுக்கு மண் சுமந்த லீலையை' அடிப்படையாகக் கொண்டு இவ்விழா கொண்டாடப்படுகின்றது.

## புரட்டாசி

நவராத்திரிவிழா அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் ஒன்பது நாட்கள் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றது. பத்தாம் திருநாளன்று மலைக்கோவிலிலிருந்து 'பராசக்தி வேல்' புறப்பட்டு ஊர்க்கோவில் சென்றடைகின்றது. பராசக்தி வேல் புறப்பட்டதும் உடன், சன்னதி திருக்காப்பிடப்படும். பராசக்தி வேல், ஊர்க்கோவில் வந்தவுடன்

தங்கக்குதிரை வாகனத்தில் அருள்மிகு முத்துக்குமாரசாமி அம்பு, வில், வேல் இவற்றுடன் அருகிலுள்ள கோதைமங்கலம் கிராமத்திலுள்ள கோதை ஈசுவரர் கோயிலுக்கு 'விஜய யாத்திரை' செல்கிறார். அக்கோவிலின் முன் நடப்பட்டுள்ள வாழை மரத்தில் கோவில் குருக்கள அம்பு போட்டு, வன்னிகாசுர வதத்தினை நிகழ்த்துகின்றார். சுற்றுப்புறத்திலுள்ள கிராம மக்கள் திரளாக வந்து இவ்விழாவினைக் கண்டுகளிக்கின்றனா.

பழனி முருகன் கோவிலுக்கும் சுற்றியுள்ள கிராமத்திற்கும் உள்ள தொடர்பினை இவ்விழா காட்டுகின்றது.

## ஐப்பசி-கந்தர்சஷ்டி விழா

பழனி முருகன் கோவிலில் நடைபெறும் பெருவிழாக்களுள் கந்தர்சஷ்டியும் ஒன்றாகும். இவ்விழா, ஐப்பசி மாதம் 'சஷ்டி' திதியின் பொழுது இத்தலத்தில் ஏழு நாட்கள் கொண்டாடப்பெறுகின்றது. இதனை ஒரு "போர்விழா" என்றும் கூறலாம். முருகனுக்கும் - சூரனுக்கும் நடக்கும் போரினையே இவ்விழா மையமாகக் கொண்டு அமைகின்றது.

சஷ்டி விரதத்தின் பெருமையினையும் முருகனின் ஆற்றலையும் இவ்விழா எடுத்துக்காட்டுகிறது.

புராணக்கதைகளும், கந்தபுராணமும், கந்தர்சஷ்டி கவசமும் இவ்விழாவிற்கு அடிப்படையாகும். கந்தபுராணத்தை அடிப்படையாகக் கொண்டு இவ்விழா கொண்டாடப்படுகின்றது. இத்தலத்தில் நடைபெறும் சூரசம்ஹார நிகழ்ச்சிகளின்பொழுது கந்தபுராணம் (ஓலைச்சுவடி) படிக்கப்படுகிறது.

'விழா தொடங்கிய முதல் நாளிலிருந்து ஆறாம் நாள்வரை, முருகனின் புகழைச் சொல்லக்கூடிய நூல்களாகிய திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, கந்தர் அநுபூதி, கந்தர் அலங்காரம், கந்தர்சஷ்டி கவசம், கந்த புராணம் இவற்றில் ஒன்றினை நாள்தோறும் சொல்லி வழிபடுவா.[12]

இவ்வாறு, கந்தர்சஷ்டி விழாவிற்குக் கந்தன் பற்றிய நூல்களும், கந்த புராணக் கதைகளும் அடித்தளமாக அமைகின்றன. நூற்களைப்

போலவே விரதங்களும் இவ்விழாவிற்கு அடிப்படையாக அமைகின்றன. கந்தவிரதங்களுள் மூன்று விரதங்கள் மிக முக்கியமானவையாகும்.

அவை வருமாறு.

1. கார்த்திகை விரதம், 2. சுக்கிரவார விரதம், 3. சஷ்டி விரதம். இவற்றுள் சஷ்டி விரதம் மிகவும் முக்கியமானதாகும்.[13]

## சூரர்களை வதை செய்தல்

முருகன் சூரனை வதை செய்யும் 'போர்விழா' ஆறாம் திருநாளன்று கொண்டாடப்பெறுகின்றது. மலைக்கோவிலின் உற்சவமூர்த்தியாகிய அருள்மிகு சின்னக்குமரர் சூரர்களை வதை செய்யும் பொருட்டு மலைமீதிலிருந்து கீழிறங்கிவந்து கிரிவீதியில் நான்கு திக்குகளிலும் நான்கு சூரர்களை வதைசெய்துவிட்டு மீண்டும் மலைக்கு எழுந்தருளுகின்றார். ஒவ்வொரு சூரன் வதை பெற்றபொழுது முருகனுக்கும், வேலுக்கும் பூசை நடைபெறுகிறது.

சூரசம்ஹாரம் முடிந்தவுடன் ஊர்க்கோவிலில் உற்சவ மூர்த்தியாகிய அருள்மிகு முத்துக்குமாரசாமி, வள்ளி தெய்வயானையுடன் மலர்களால் அலங்கரிக்கப்பட்ட இந்திரவிமானத்தில் வெள்ளி மயில் வாகனத்தில் புறப்பட்டு ஊர்க்கோவில் ரதவீதிகளில் வலம் வந்து ஊர்க்கோவிலை அடைவார்.

ஏழாம் திருநாளன்று மலைக்கோவிலில் அருள்மிகு சண்முகர் வள்ளியை மணம் செய்து கொள்வார். மாலையில் அருள்மிகு சின்னக்குமரர் தங்கச் சப்பரத்தில் மலைக்கோவிலில் உலா வருவர். அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் முத்துக்குமாரசாமி தங்கக்குதிரை வாகனத்தில் ரதவீதிகளில் உலா வருகின்றார். அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் முத்துக்குமாரசாமி - வள்ளி திருமணத்துடன் சூரசம்ஹார விழா முடிவடைகின்றது.

## சூரனும் - அமைப்பியல் வறவமும்

மலையைச் சுற்றிலும் நான்கு இடங்களில் நான்கு சூரர்களின் பெரிய உருவங்களை வைத்து விடுகின்றனர். ஒவ்வொரு சூரனை முருகன் வதம் செய்துவிட்டு இறுதியில் சூரபத்மனை வதம் செய்த



உற்சவமூர்த்தி தங்கமயில் வாகனத்தில் உலாவரும் காட்சி



இடும்பன் குளத்தில் தீர்த்தம் ஆடிவிட்டுப்
பழனி மலையை நோக்கிப் பாதயாத்திரை செல்லும் பக்தர்கள்



தவில், நாதசுரத்துடன் வரும் காவடிக் கூட்டம்



அருள்மிகு முத்துக்குமாரசாமி, வள்ளி, தெய்வானை
உலாவரும் காட்சி

பிறகுதான் சூரசம்ஹார நிகழ்ச்சி ஒரு முழுமையைப் பெறுகின்றது. மானுடவியல் அறிஞர் லெவிஸ்ட்ராஸ் குறிப்பிடும் அமைப்பியல் கோட்பாட்டை பழனி முருகன் கோவிலில் நிகழும் சூரசம்ஹார விழாவில் பொருத்திப்பார்க்கலாம்.

நான்கு சூரர்களின் வதையையும் இணைத்துப் பார்க்கின்றபோது வட்ட வடிவமான ஒரு அமைப்பியல் முழுமை உண்டாகின்றது. கந்தர்சஷ்டி விழாவின் போது அருள்மிகு சின்னக்குமரர், மலையிலிருந்து கீழிறங்கி வந்து சூரனை வதம் செய்யும் செயல் லெவிஸ்ட்ராஸ் குறிப்பிடும் இருநிலை எதிர்வு அமைப்பு முறையில் (Binary Opposition) காணப்படுகின்றது.

| | | |
|---|---|---|
| மலை உச்சிப்பகுதி | X | மலையின் கீழ்ப்பகுதி (Space) |
| முருகப்பெருமானின் வெற்றி | X | சூரனின் தோல்வி |
| போர் | X | திருக்கல்யாணம் |

லெவிஸ்ட்ராசின் கருத்துப்படி பண்பாடு என்பது ஆழ்மனப்பட்டது (sub conscious). மக்களின் மனத்துக்குள் புதைந்து கிடக்கின்றது. இது மக்களின் மன உணர்வால் வெளிப்படுவன என்பதால் இது ஆழ்நிலை அமைப்பு (deep structure) கொண்டது ஆகப் பண்பாட்டின் மேற்தளத்தில் கண்ணால் காண்பவை, உணர்பவை அனைத்தும் ஆழ்நிலையில் புதைந்து கிடக்கும் சில பொதுப்படையான அமைப்புகளிலிருந்து உருவானவையாகும்[14]. அமைப்பியல்வாதிகள் புற உலகில் காண்பனவற்றை அப்படியே எடுத்துக் கொண்டு விளக்குவதை விடுத்து, அவற்றிற்குக் கீழ் ஆழ்நிலையில் புதைந்துள்ள கூறுகளின் உறவுகளைக் காணவேண்டும் என்கின்றனர்.

கிரேக்க நாடகங்கள் எல்லாம் திறந்தவெளி அரங்கில் நடிக்கப்பட்டுத், திறந்தவெளி அரங்குகளால் வளர்க்கப்பட்டன என்பர். மலைச்சாரல் பின்னணியில் திறந்தவெளி அரங்கில் நிகழும் 'சூரசம்ஹாரம்' ஒரு 'சடங்கியல் நாட்டுப்புற நாடகம்' (Ritual Folk Drama) என்று கூறலாம். புராதன நாடகங்கள் கூட்டுச் சடங்கிலிருந்துதான் தோன்றியது என்று கூறுவர். இதற்கு எடுத்துக் காட்டாக சூரசம்ஹார விழா அமைகின்றது. சடங்கும் நடிப்பும் கலந்ததே சூரசம்ஹாரம்.

கோவில் குருக்கள் கையில் வேலை வைத்துக்கொண்டு முருகனாகப் போலச் செயல் முறையில் நடிக்கின்றார். சூரனின் உருவத்திற்குப் பின்புறம் ஒழிந்து கொண்டு சூரனின் கை, கால், தலையை ஒருவர் இயக்குகிறார். இது சூரனின் நடிப்பாக அமைகின்றது. சுருங்கக்கூறின், 'சூரசம்ஹாரம்' எனும் பழமரபுக் கதையைப் 'போலச் செயல்' முறையில் திறந்தவெளி அரங்கில் தெய்வீகப் பின்னணியுடன் நடித்துக் காட்டுகின்றனர் எனலாம். சடங்கு என்பது பழமரபுக் கதையைத் திரும்ப நடித்துக் காட்டுதலாகும்[16] (Ritual was enactment of Myth). இக்கூற்றிற்கேற்ப சூரசம்ஹார விழா அமைகின்றது. இது நடைபெறுகிற கிரிவீதி ஒரு நாட்டுப்புற நாடகமேடையாக (folk stage) அமைகின்ற தெனலாம். கோயில் வளாகங்களிலில் நிகழ்த்தப்பெற்ற கூட்டுச் சடங்குகளிலிருந்துதான் 'Folk theatre' உருவாயிற்று என்று நாடகக்கலை ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

## கார்த்திகை

### *திருக்கார்த்திகை விழா*

தமிழ்நாட்டில் கொண்டாடப் பெறும் பழம் பெருவிழாக்களுள் கார்த்திகை விளக்கீட்டுவிழா ஒன்றாகும். இவ்விழா பற்றிய செய்திகள் அகநானூற்றில் பல இடங்களில் வருகின்றன. கார்த்திகை விழாச் சங்ககாலத்தில் பெருவிழாவாகக் கொண்டாடப்பட்டுள்ளது. மதி நிறைந்து அறுமீனாகிய கார்த்திகையுடன் சேரும் கார்த்திகைத் திங்கள் முழுமதி நாளில் எடுக்கப்படுவது இவ்விழாவாகும். இக்காலத்தில் உழு தொழில் முடிந்து, மழை பெய்வதும் நின்று விடுகின்றது. தெருக்களில் விளக்குகளை வரிசையாக வைத்து, மாலைகளைத் தொங்கவிட்டு ஊரில் உள்ள அனைவரும் ஒன்றுகூடிக் கார்த்திகை விளக்கீட்டு விழாவினைக் கொண்டாடுகின்றனர்.

> ***"உலகு தொழில் உலந்து, நாஞ்சில் துஞ்சி***
> ***மழை கால் நீங்கிய மாசு விசும்பில்***
> ***குறுமுயல் மறுநிறம் கிளர, மதி நிறைந்து***
> ***அறுமீன் சேரும் அகல் இருள் நடுநாள்***
> ***மறுகு விளக்குறுத்து, மாலை தூக்கிப்***

**பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய**
**விழவு உடன் அயர, வருகதில் அம்ம** [17]

என்று அகநானூறு கார்த்திகை விழா பற்றிக் கூறுகின்றது.

**" பெருவிழா விளக்கம் போல, பல உடன்**
**இலை இல மலர்ந்த இலவமொடு** [18]

என்று சங்கப்புலவர், கார்த்திகை விழாவில் ஏற்றப்படும் விளக்கு வரிசையைப்போல காடுகளில் மலர்கள் பூத்துக்குலுங்கின என்கின்றார். களவழிநாற்பது,[19] கார்நாற்பது[20] ஆகிய நூற்களும் இவ்விழாபற்றிக் கூறுகின்றன.

திருஞானசம்பந்தர் தேவாரத்தில் காரத்திகை விளக்கீடு பற்றிக் குறிப்பிடுகின்றார். 'தொல் கார்த்திகை நாள்' என்று இவர் கூறுவதிலிருந்து இவ்விழா, மிகப் பழமையானது என அறிய முடிகின்றது.[21]

## அறுவடைக் காலவிழா

கார்த்திகை விழா அறுவடைக் கால விழாவாகும். "விளக்கிற்கு வேண்டிய எண்ணெய் வித்துக்களாகிய நிலக்கடலை முதலியன நிறைந்து விளையும் பருவம் இது. அந்நெய்யில் திரியிட்டு வரிசை வரிசையாக விளக்கேற்றும் விழாவே கார்த்திகை விளக்கீடு ஆகும். [22]

உழைப்பின் பயனால் ஏற்படும் விழாக்கள் கார்த்திகை, தைப்பொங்கல் ஆகியன. ஆடியில் தொடங்கும் உழைப்பின் பயன் கார்த்திகையில் கைகூடத் தொடங்கும். முதலாவதாகக், ' கார்' நெல் அறுக்கும் காலம் கார்த்திகையாகும். எனவே, இந்நாளில் கொண்டாடப் பெறும் விழாவினை அறுவடைக்கால விழாவாக, உழைப்பின் பயனைக் காணுகிற விழாவாகக் கூறலாம்.

## பழனியில் கார்த்திகைவிழா கொண்டாடும்முறை

கார்த்திகை மாதத்தில் வரும் கார்த்திகை நட்சத்திரத்தைத்'திருக் கார்த்திகை' என்பர். இதனைக் கிராமப்புற மக்கள் 'பெரியகார்த்திகை' என்று அழைப்பர். இவ்விழா மலைக்கோவிலில் பத்து நாட்கள் நடைபெறும். நாள்தோறும் அருள்மிகு சின்னக்குமரர் தங்க விமானத்தில் உலா வருவார். கார்த்திகை நட்சத்திரத்தன்று தங்கமயில் வாகனத்தில்

மலையின் உட்பிரகாரத்தில் வலம் வருவார்; வெளிப்பிரகாரத்தில் தங்கரதத்தில் உலா வருவார். பத்தாம் திருநாளன்று தீபம் கொண்டாடப்படும்.

திருக்கார்த்திகை விழாவின்பொழுது மலைக்கோவில், திரு ஆவினன்குடிக் கோவில், அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவில் ஆகிய மூன்று கோவில்களிலும் 'ஜோதி' ஏற்றுதலும், சொக்கப்பனை கொளுத்துதலும் நடைபெறுகின்றது. முதன்முதலில் மலைக்கோவிலில் திருக்கார்த்திகை விழா தொடங்கப்படுகின்றது. தொடர்ந்து திருஆவினன்குடிக் கோவிலில் கொண்டாடப்படுகின்றது. மூன்றாவதாக அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் கொண்டாடப்படுகின்றது. ஒரேநாளில் இம்மூன்று கோவில்களிலும் ஒன்றன்பின் ஒன்றாகத் திருக்கார்த்திகைவிழா கொண்டாடப்படுகிறது.

## மலைக்கோவிலில் ஜோதி ஏற்றுதல்

பத்தாம் திருநாளான திருக்கார்த்திகை விழாவன்று மலைக்கோவிலின் மேல் உள்ள தீபகம்பத்தில் மாலை 6 மணிக்கு கோவில் குருக்கள் நாதசுர இசை முழங்க, பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் கண்டுகளிக்க ஜோதி ஏற்றுகிறார். ஜோதி ஏற்றியதும் கூடி இருக்கும் அனைவரும் 'அரகர அரகர அரோகரா' என்று உரக்க ஒலி எழுப்பி ஜோதி வழிபாடு செய்கின்றனர். தீபகம்பத்தில் ஜோதி ஏற்றி முடித்தபின் மயில்வாகனத்திற்குப் பூசை செய்தபிறகு முதல் விபூதியைப் பெறுபவர், பழனி நகரக் காணியாளக்கவுண்டர் வழியைச் சேர்ந்தவர் ஆவர். இவருடைய குடும்பத்தினர் ஆண்டுதோறும் பெரிய கார்த்திகை விழாவினைத் திருக்கோவில் நிர்வாகத்தினருடன் சேர்ந்து முன்நின்று நடத்துவதற்கு வழிவழியாக உரிமைகளைப் பெற்றிருப்பதாக காணியாளர் திரு.கே.சின்னப்பகவுண்டர் பேட்டியின் பொழுது ஆய்வாளரிடம் தெரிவித்தார்.

## சொக்கப்பனை

மலைக்கோவிலின்மேல் வெளிப்பிரகாரத்தில் முன்பகுதியில் சொக்கப்பனை அமைக்கப்படுகின்றது. தீபகம்பத்திற்கு இருபத்தி ஐந்து அடி தள்ளி ஐந்து அடி உயரத்திற்கு இதனை அமைக்கின்றனர். சொக்கப்பனை கொளுத்தி முடியும் வரை, இதனை அமைத்தவர்கள்

காவல் காத்து வருகின்றனர். சொக்கப்பனையைக் காய்ந்த தென்னங் கீற்றுக்களைக்கொண்டு அமைக்கின்றனர். நடுவில் தாழைமரத்தண்டை நட்டுவைக்கின்றனர். பக்தர்கள் சொக்கப்பனை மீது எண்ணெய், நெய் இவற்றை ஊற்றுகின்றனர்.

தீபகம்பத்தில் ஜோதி ஏற்றி முடிந்ததும் கோவில் குருக்கள் சொக்கப்பனை கொளுத்தத் தயாராகிறார். சொக்கப்பனைக்குள் உள்ள தாழைத் தண்டின்மீது வைக்கப்பட்டுள்ள தீபத்தை ஏற்றிவிட்டுச் சொக்கப்பனையைச் சுற்றிலும் தீவைத்துக் கொளுத்துகின்றார். பக்தர்கள் அனைவரும் 'அரோகரா அரோகரா' என்று ஆரவாரம் செய்து தீயை வழிபடுகின்றனர். சொக்கப்பனை எரிந்து சாம்பலானதும் அச்சாம்பலை எடுத்துப் பக்தர்கள் பிரசாதமாக அணிந்து கொள்கிறார்கள். எரியாத சிறு குச்சிகளையும், ஓலைத்துண்டுகளையும் பிரசாதமாக எடுத்துக் கொள்கிறார்கள். சொக்கப்பனை கொளுத்திய பின்னர் மூலவர் அருள்மிகு தண்டாயுதபாணிக்குப் பூசை செய்யப்பெறுகின்றது.

## இரு அமைப்பு முறைகள்

இத்திருக்கார்த்திகையின்போது நடைபெறும் விழாவின் தன்மைகளில் இரு போக்குகள் கவனத்திற்குரியன. மலைக்கோவிலின் மீது கோவில் குருக்கள், தீபகம்பத்தில் ஜோதியை ஏற்றுவது ஒன்று. இது பெருநெறி முறையாகும். தீபகம்பம் எப்பொழுதும் நிலைத்து நிற்கும் அமைப்பு ஆகும்.

சொக்கப்பனை, தீபகம்பத்திலிருந்து தள்ளி அமைக்கப்படுவது. தற்காலிகமான அமைப்பு முறையாகும். இதனை அமைப்பவர்கள் நாட்டுப்புற மக்களாவர். கிராமப்புறங்களில் இளைஞர்கள் திருக்கார்த்திகை விழா நாளன்று சொக்கப்பனை கொளுத்தியும், சூந்து வீசியும் விளையாடுவர். சொக்கப்பனை கொளுத்துதல், சூந்து வீசுதல் முதலியன நாட்டுப்புற வழிபாட்டு முறைகளாகும். நாட்டுப்புற மரபுகள் (Folk Traditions) திருக்கார்த்திகை விழாவில் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். மேலும், இவ்விழா, வளமைச் சடங்கோடு தொடர்புடையது என்றும் குறிப்பிடலாம். இவ்விழாவின் போது பக்தர்கள் மலைப்படிகளில் தானியங்களைச் சூறை விடுகின்றனர். தானியங்களைச்

சூறை விடுவதால் விளைச்சல் பெருகும் என்றும் பக்தர்கள் நம்புகின்றனர். தங்கள் வயல்களில் விளைந்த முதல் தானியங்களை (First grains) முருகனுக்குக் காணிக்கையாகக் கொடுப்பது பக்தர்களின் அன்பினைக் காட்டுகிறது. தானியங்களைச் சூறைவிடுவது சிறு நெறி மரபு சார்ந்தது.

ஏற்கனவே கூறியதுபோல இதேவிழாவில் கோவிலில் தீபகம்பத்தில் கோவில் குருக்கள் தீபம் ஏற்றுவது 'பெருநெறி' வகையிலானது. இவ்வாறு சிறுநெறி மரபும், பெருநெறிமரபும் ஒரே விழாவில் பக்கம் பக்கமாக அமைகின்ற போக்குக் குறிப்பாக முருகன் கோவில் விழாக்களில் காணப்படும் பொதுவான போக்கே எனலாம்.

வடஇந்தியாவில், கிஷான் கார்கி எனும் கிராமத்தில் கள ஆய்வு மேற்கொண்ட அமெரிக்க மானுடவியலறிஞர் மாக்கிம் மரியட் என்பவர், அவ்வூரில் கொண்டாடப்பெறும் திருவிழாக்களை ஆய்வு செய்து "திருவிழாக்கள் பெருமரபு, சிறு மரபு இவற்றின் விளைவினால் ஏற்படுபவை" (Festivals as products of great and little traditions) என்று குறிப்பிடுகின்றார்.[23] இக்கூற்றுக்கு ஏற்ப இக்கோவிலில் கொண்டாடப் பெறும் திருக்கார்த்திகைவிழா, பெருமரபு, சிறுமரபு நெறிகளின் விளைவால் அமைந்தவை.

## கார்த்திகைவிழாவும் பெண்களும்

கார்த்திகைவிழாவில் பெண்கள் திரளாகக் கலந்து கொள்கின்றார்கள். எனவே, இதனைப் 'பெண்களுக்குரிய விழா' என்றும் கூறலாம். இவ்விழாவின் பொழுது பெண்கள் மாலைக் காலங்களில் வீடுகளில் விளக்கேற்றி வழிபடுவர். இது பண்டைத் தமிழர்தம் மரபாகும். மாலை நேரத்தில் பெண்கள் விளக்கேற்றி வழிபட்ட செய்தியினைச் சிலப்பதிகாரமும், நெடுநல்வாடையும் குறிப்பிடுகின்றன.

இவ்விழாவன்று, பெண்கள் கூட்டம் கூட்டமாக விளக்குகள் கொண்டுவந்து கோவிலில் ஏற்றிவைக்கின்றனர். பல பெண்கள் எரிகின்ற விளக்குகளுக்கு எண்ணெய் ஊற்றிக் கொண்டு செல்கின்றனர். இச்செயல் பெண்களின் பக்தியியல்பையும் சமய ஈடுபாட்டையும் காட்டுகின்றது. ஆண்களைவிடப் பெண்கள் சமய உணர்வில் மேலானவர்கள் என்றும் உயரிய நம்பிக்கையோடு சடங்குகளைச் செய்கிறார்கள் என்றும்

ஆண்களைவிட மேலான தன்மையில் விரதம் இருந்து இறைவனை வழிபடுகின்றனர் என்றும் கூறுவர். இக்கூற்று திருக்கார்த்திகை திருவிழாவிற்கு மிகவும் பொருந்தும்.

## மார்கழி - தனுர் மாத பூசை

பழனித்தலத்தில் மலைக்கோவிலிலும் மற்றும் திரு ஆவினன்குடி, அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவில், அருள்மிகு பெரியாவுடையார் கோவில் ஆகிய கோவில்களிலும் 'உஷக் காலப் பூசை' சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது.

## திருவாதிரைத் திருநாள்

திருவாதிரைத் திருநாள் அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் கொண்டாடப்பெறுகின்றது. இந்நாளன்று அருள்மிகு நடராசருக்குச் சிறப்பு அபிடேகம், அருச்சனை செய்யப்படுகின்றது. அம்மன் ஊஞ்சல்பூசை நடைபெறுகின்றது. அருள்மிகு நடராசர் திருவுலா இடம்பெறுகின்றது.

## தை - தைப்பூசவிழா

தைப்பூசம், இக்கோவிலில் நடைபெறும் பெருவிழாக்களுள் ஒன்றாகும். தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து பக்தர்கள் இவ்விழாவில் கலந்த கொள்கின்றனர். இது, திருத்தலப் பயணத்தோடு தொடர்புடைய விழாவாகும். பழனி முருகன் கோவில் தைப்பூசவிழா ஆண்டுக்கு ஆண்டு சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. இவ்விழா இத்தலத்தில் பத்து நாட்கள் கொண்டாடப்பெறுகின்றது. இதன் சிறப்பும், அமைப்பும் பற்றி அடுத்த இயலில் விரிவாக விளக்கப்படுகின்றது.

## மாசி - மகாசிவராத்திரி

அருள்மிகு பெரியாவுடையார் கோவிலில் மகா சிவராத்திரி விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெறுகின்றது. நான்கு ஜாமங்களின்பொழுதும் சிவனுக்கு இரவுக்காலப் பூசைகள் நிகழ்த்தப்படுகின்றன. மலைக் கோவிலிலும், திரு ஆவினன்குடிக் கோவிலிலும், அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலிலும் இதுபோன்ற பூசைகள் நடத்தப்படுகின்றன.

## பங்குனி - பங்குனி உத்திரவிழா

கொங்குநாட்டுக் கிராம மக்கள் பழனி முருகன் கோவில் பங்குனி உத்திரவிழாவில் பெருமளவில் கலந்து கொள்கிறார்கள். காவடியாட்டம், கரகாட்டம், வேலனாட்டம், சக்கையாட்டம், சாமியாட்டம் முதலிய நாட்டுப்புற ஆட்டங்கள் இவ்விழாவில் பெருமளவில் இடம் பெறுகின்றன. பழனி முருகன் கோவிலுக்குக் காவடி எடுத்து வரும் பக்தர்கள் ஆடும் காவடியாட்டம் தொழில் முறைக்கலைஞர்கள் ஆடும் காவடியாட்டத்திலிருந்து வேறுபட்டதாகும். பங்குனி உத்திரவிழாவின் போது பக்தர்கள் கொடுமுடியிலுள்ள காவிரியாற்றிலிருந்து தீர்த்தக்காவடி எடுத்து வந்து பழனியாண்டவனுக்கு நீராட்டுச் செய்கின்றனர். பங்குனி உத்திரவிழா தீர்த்தயாத்திரையோடு தொடர்புடைய விழாவாகும்.

கொங்கு நாட்டுக் கிராமப்புறங்களில் உள்ள நாட்டுப்புற இசைக் கலைஞர்கள், தப்பு, திடும், நகார், பம்பை, உறுமி முதலிய நாட்டுப்புற இசைக் கருவிகளை வாசித்துக் கொண்டு வருகின்றனர். தாராபுரம் வட்டாரத்திலிருந்து வரும் நாட்டுப்புற இசைக் கலைஞர்கள் " கொம்பு" ஊதிக்கொண்டு வருகின்றனர்.

காவடிக் கூட்டத்தினருடன் நையாண்டி மேளம் வாசித்துக் கொண்டு வருவதையும் இவ்விழாவில் காணலாம். பழனி முருகன் கோவில் பங்குனி உத்திரவிழாவில் நாட்டுப்புற ஆட்டங்களும், நாட்டுப்புற இசையும் முக்கிய இடம் வகிக்கின்றன. இவ்விழா பத்து நாட்களுக்கு வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றது. திருவிழாக்கள் நாட்டுப்புற இயலின் பெரும் பிரிவாகும் (Festivals as a major class of Folk lore) எனும் கூற்றுக்கு ஏற்பப் பழனி முருகன் கோவில் பங்குனி உத்திரவிழா அமைகின்றது.

## தொகுப்புரை

பழனி முருகன் கோவில் திருவிழாக்கள் நட்சத்திரங்களின் அடிப்படையில் கொண்டாடப்பெறுகின்றன. இக்கோவிலில் ஆண்டுதோறும் நிகழும் திருவிழாக்கள் பற்றிய செய்திகள் விளக்கமுறையில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

சித்திரை மாதத் திருவிழாக்களுள் குறிப்பிடத்தக்க அம்சம் தமிழ்ப்புத்தாண்டு நாளன்று நடைபெறும் படிபூசைவிழாவும், அக்கினி நட்சத்திரத்தின் பொழுது பக்தர்கள் மலைவலம் வருதலும் ஆகும்.

ஆனி மாதத்தில் உத்திர நட்சத்திரத்தன்று மலைக்கோவிலில் அன்னாபிடேக வழிபாடு மிகச் சிறப்பாக நடைபெறுகின்றது.

ஆடிக் கார்த்திகையன்று பக்தர்கள் பழனி முருகனுக்குப் பூக் காவடி எடுத்துக்கொண்டுவருகின்றனர். ஆடி அமாவாசையன்று ஆயிரக்கணக்கான பக்தர்கள் முடிக்காணிக்கை செலுத்தி சண்முகநதியில் நீராடிவிட்டுப் பழனியாண்டவரை வழிபடுகின்றனர். 'ஆடி அமாவாசை' பெரும் திருவிழாபோல் இத்தலத்தில் கொண்டாடப்பட்டுவருகின்றது.

அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் கொண்டாடப்பெறும் ஆடி இலட்சார்ச்சனை விழாவில் பெண்கள் பெருமளவில் ஈடுபாடு காட்டுகின்றனர்.

அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் ஆவணி மாதத்தில் புட்டுத் திருவிழாவும், புரட்டாசி மாதம் நவராத்திரிவிழாவும் கொண்டாடப் பெறுகின்றன. விஜயதசமி விழா சுற்றுக் கிராமங்களுக்கும், பழனி முருகன் கோவில்களுக்கும் உள்ள தொடர்பினைக் காட்டுகின்றது.

ஐப்பசி மாதம், 'கந்தர்சஷ்டி விழா' மலை அடிவாரத்தில் கொண்டாடப்பெறுகின்றது. இவ்விழா விரதத்தோடு தொடர்புடைய விழா.

திருக் கார்த்திகை விழாவில் பெருநெறிமுறை, சிறுநெறிமுறை என்ற இரு தன்மைகளும் காணப்படுகின்றன.

ஆண்டுதோறும் நிகழும் திருவிழாக்களுள் தைப்பூசம், பங்குனி உத்திரம், அக்கினி நட்சத்திரம், கந்தர்சஷ்டி, பெரிய கார்த்திகை ஆகிய விழாக்களைப் பெருவிழாக்கள் என்றும் ஏனைய விழாக்களைச் சிறிய விழாக்கள் என்றும் வகைப்படுத்தலாம். மேலும் ஆடிப்பூரம், ஆடி இலட்சார்ச்சனை, புட்டுத் திருநாள், விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, தனுர் மாதபூசை, திருவாதிரைத் திருநாள், மகா சிவராத்திரி ஆகிய விழாக்கள் இத்திருத்தலத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன.

## குறிப்புக்கள்

1. Robert Jerome Smith, *Festivals and Celebrations*, Folklore and Folklife (Ed.) Richard M. Dorson. p. 167.
2. டி.எம்.பி. மகாதேவன், இந்து சமயத் தத்துவம். ப. 49
3. Robert Jerome Smith, op.cit., pp.166- 170.
4. அகநானூறு. பா.எண். 141
5. சிலப்பதிகாரம், இந்திரவிழவூரெடுத்த காதை, அடி. 64
6. சோமலெ, மதுரை மாவட்டம், ப. 393
7. செந்தில்துறவி (தொ.ஆ.), ஐம்பெருவிழாக்கள், ப. 35.
8. "Robert Jerome Smith,op. cit., p. 164.
9. Ibid., p. 165.
10. சே. தண்டபாணி தவராஜ பண்டிதர் (இ.ஆ.) பழனியாண்டவர் விழா தத்துவ விபரம், ப. 3 (கையெழுத்துப்பிரதி).
11. (ஆசிரியர் பெயர் இல்லை), பழனித்தல வரலாறும் திருக்கோயில் வழிபாடும். ப. 35.
12. சோமலெ, பழனி திருக்கோயில் வழிகாட்டி. ப. 27.
13. கிருபானந்தவாரி, முருகன், ப. 68.
14. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 193.
15. மேலது, ப. 193.
16. S.P. Nagendra, The Concept of Ritual in Modern Sociological Theory, p. 170.
17. அகநானூறு பா.எண். 141.
18. மேலது, பா.எண். 185.
19. களவழிநாற்பது பா.எண். 17.
20. கார்நாற்பது, பா.எண். 63.
21. திருஞானசம்பந்தர் தேவாரம், திருமயிலாப்பூர் பதிகம். பா.எண். 3.
22. அ.மு. பரமசிவானந்தம், தமிழ்நாட்டு விழாக்கள், ப. 82.



# 4. தைப்பூசத் திருவிழா

தைப்பூசத் திருவிழா பழனி முருகன் கோவிலில் கொண்டாடப் பெறும் பெருவிழாக்களுள் ஒன்றாகும். இவ்விழா பத்து நாட்கள் கொண்டாடப்பெறுகின்றது. பழனி முருகன் கோவிலின் சார்புடைக் கோவிலாகிய அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலுடன் இணைந்தே கொண்டாடப்படும் இவ்விழாவின் முதற்பகுதியாக, உற்சவமூர்த்தி ரதவீதிகளில் உலா வருதல், தேர்த்திருவிழா, மண்டபப்படி நிகழ்ச்சிகள் ஆகிய பத்துநாள் நிகழ்ச்சிகளைக் கூறலாம். இவ்விழாவின் மற்றொரு பகுதியாகத் 'திருத்தலப்பயணம்' அமைகின்றது. தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்தும் பக்தர்கள் பழனி முருகன் கோவிலுக்குத் திருத்தலப் பயணம் வருகின்றனர். குறிப்பாகச் செட்டிநாட்டுப் பகுதியிலிருந்து நாட்டுக்கோட்டைச் செட்டியார் இன மக்களும், சேலம் பகுதியிலிருந்து இடைப்பாடி பக்தர்களும் கொங்கு நாட்டுக்கிராம மக்களும், கேரள மாநிலத்திலிருந்து மலையாளி பக்தர்களும் பெரும் திரளாகத் திருத்தலப் பயணம் வருகின்றனர்.

## பாத யாத்திரை

யாத்திரையானது தனிமனிதர்களை அல்லது குழுவினரை ஒரு தகுதி நிலையிலிருந்து வேறொரு தகுதி நிலைக்கு நிலைமாற்றம் (transformation) செய்யும் தன்மையைப் பெற்றது என்று மானுடவியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். புண்ணிய தலத்திற்கு யாத்திரை செய்யும் பக்தர்கள் பல்வேறு வகையான யாத்திரை அனுபவங்களைப் பெறுகின்றனர். "உலகந்தழுவிய அனைத்துப் பழமைச் சமூகங்களிலும், திணைப் பண்பாடுகளிலும் யாத்திரை, சடங்குகள், பிற மீவியல் நிகழ்வுகளின்போது அந்தந்தச் சமூகங்களின் புனித உண்மைகள் அவர்களுக்குச் சொற்பொழிவு வாயிலாகச் சென்று சேர்வதில்லை; படிப்பதற்காக அவ்வுண்மைகளைத் தாள்களில் எழுதி வழங்குவதுமில்லை. மாறாகச் சடங்கு நிகழ்வுகளின் போது பல்வேறு நிலைகளில் அமையும் 'காட்சிப்படுத்தல்' வாயிலாகவும் (exhibition: what is shown) 'செயல்கள்' வாயிலாகவும் (Action : What is done)' 'சொல்லப்படுவன' வாயிலாகவும் (Instruction : What is said) சென்று சேர்கின்றன என்று டர்னர் கூறுகின்றார்.[1] மேற்கூறிய கூற்றிலிருந்து யாத்திரை அனுபவங்களைப் பக்தர்கள் யாத்திரை மூலமாகவே பெறுகின்றனர் என்பதை அறியமுடிகின்றது. பழனி முருகன் கோவில் தைப்பூச யாத்திரையின் போது, பல குழுக்கள் பல ஆண்டுகளாக யாத்திரை மேற்கொண்டு பல்வேறுவகையான யாத்திரை அனுபவங்களைப் பெறுகின்றனர்.

புதுப்புது ஊர், புதிய மக்கள், புதுப் பழக்க வழக்கங்கள், புதிய இடம், பார்ப்பதும் பழகுவதும், தங்குவதும் பேசுவதும், வசதிகளும் எல்லாம் புதுமையாக இருப்பதால் வருகின்ற இன்ப துன்பங்களைச் சகித்துக் கொள்ளும் மனப் பாங்கு நமக்கு உண்டாகிவிடுகின்றது என்றும் அநேக ஊர்ப் பிரயாணங்கள் அனுபவத்தை வளர்க்கின்றன என்றும் யாத்திரை குறித்துத் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் கூறுகின்றார்.[2]

## பனிக்கால விழா

தைப்பூசம் குளிர்காலத்தில் கொண்டாடப்பெறும் விழாவாகும். தைப்பூச விழாவினையும், ஆதிரை நோன்பினையும் பனிக்கால விழாக்கள் என்று அழைக்கலாம்.[3] எனப் பேராசிரியர் தெ.பொ.மீ.

கூறுகின்றார். பழனி முருகன் கோவில் தைப்பூச விழாவின் போது திரளான பக்தர்கள் கடும்பனியிலும், குளிரிலும் பாதயாத்திரை வருவதைக் காணலாம்.

## தைப்பூசமும் நீராடலும்

தைப்பூச நாளில் நீராடுதல் முக்கியமாகக் கருதப்படுகின்றது. "பூசம் நாம் புகுதும் புனல் ஆடவே"[4] என்று தைப்பூசத் திருநாளன்று நீராடுவது பற்றி அப்பர் பாடுகின்றார். ஆண்களும், பெண்களும், இளைஞரும், முதியோரும் தைப்பூசத் திருநாளன்று தங்கள் இருப்பிடத்திற்கு அருகிலுள்ள நதிகளில் நீராடுவது வழக்கம் என்பர்.[5] தமிழகத்தில் தைத்திருவிழா மிக நீண்ட காலமாக நடைபெற்றுவரும் ஒரு விழாவாகும். தைந்நீராடுதல் இதன் முக்கியமான பண்பு. மகளிர் இதில் பெரும்பங்கு வகித்தனர். நீராடி நோன்பு இருந்தது பற்றி" நோன்பியர் தையூனிருக்கையிற் றோன்றும் நாடன்" என்று நற்றிணை குறிப்பிடுகின்றது.[6] 'நீராட்டே' நோன்பாக இருந்தது என்று பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை குறிப்பிடுகின்றார்.[7]

தைந்நீராடுதல் சங்க காலத்தில் மகளிர் பங்குகொள்ளும் சமயச் சார்பற்ற (Secular) ஒரு சமூக நிகழ்வாக இருந்தது. அதுவே பின்னால் சைவமும், வைணவமும் எழுச்சி பெற்ற பக்தியியக்க காலத்தில் சமயச் சார்புடையவிழாவாகவே உருமாறியது. பக்தி இயக்க காலத்தில் விழாக்கள் இவ்வாறு சமயத்தன்மை பெறுதல் என்பது இயல்பே. இதுபற்றிக் கூறும் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை, "ஒரு நூற்றாண்டுகள் சென்ற பின்னர் இவ்வொழுக்கத்தில் முக்கியமான வேறுபாடுகள் தோன்றின. இக்காலப்பகுதியில் தமிழ் மக்களிடையே சமயவுணர்ச்சி மேன்மேலும் சிறந்து விளங்குவதாயிற்று. இதனால் வழக்க ஒழுக்கங்களெல்லாம் சமய வேடம் புனைந்து ஒரு புதிய காட்சியை நமக்களித்தன. இங்ஙனம் வேறுபட்ட காட்சியைத் தந்தவற்றுள் தைநீராட்டும் ஒன்றாகும்." [8] என்பார். இக்கருத்துக்கேற்ப அன்றைய் தைந்நீராடல் இன்று சமயவிழாவாக இடம்பெறுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

## கல்வெட்டுக்களும் தைப்பூசமும்

தைத்திருவிழா, தமிழகத்தில் நெடுங்காலமாகக் கொண்டாடப்பட்டு வந்தது மட்டுமல்லாமல், அதற்கு அரசு பெரும் ஆதரவும் நல்கியது. இதற்குப் பல கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன.

திருவிடைமருதூரிலுள்ள மகாலிங்க சுவாமி கோவில் கல்வெட்டு, தைப்பூசத் திருநாளில் கோவிலில் கூத்து நிகழ்த்துவதற்காக விளங்குடியில் ஒரு வேலிநிலம் அளிக்கப்பட்டதைக் கூறுகிறது. இந்நாளில் இறைவனுக்கு அபிடேகம், திருப்பாவாடை, அமுதுபடி, சாத்துப்படி ஆகியன நிகழ்ந்தன என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன.

***"அரிசி நாற்கலனென தூணிப்பதக்கும் திருத்தைப்***
***பூசம் திருப்பாவாடை அமுது செய்தருள***
***சீ பண்டாரத்திலே அளப்பவும்"***

இக்கல்வெட்டு, தைப்பூசத் திருவிழாவின் நிகழ்ச்சிகளை விளக்கும்.இதனைக் குறிப்பிடுகின்ற கல்வெட்டாய்வாளர், தொடர்ந்து, "தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவேடிக்குடியிலுள்ள வேதபுரீசுவரர் ஆலயக் கல்வெட்டு, தைப்பூசத் திருவிழாவிற்குப் பதின்மூன்று வேலிநிலம் தானமாகக் கொடுக்கப்பெற்ற செய்தியினையும், தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவடி, பஞ்ச நாதீசுவரன் கோவில் கல்வெட்டு, தைப்பூசத் திருவிழாவிற்குப் பத்தொன்பது வேலிநிலம் கொடுக்கப்பெற்ற செய்தியினையும் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு, கல்வெட்டுச் சான்றுகளிலிருந்து முற்காலத் தமிழகத்தில் தைப்பூசத்திருநாள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வந்ததை அறிய முடிகின்றது.

தைப்பூசம் கொண்டாடிய திறத்தினைப்பற்றி ஞானசம்பந்தர், தம் தேவாரப்பாடலில்,

***"மைப்பூசு மொண்கண் மடநல்லார் மாமயிலைக்***
***கைப்பூசு நீற்றான் கபாலீச் சரம மர்ந்தான்***
***நெய்ப்பூசு மொண்புழுக்க னேரிழையார் கொண்டாடும்***
***தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய்"*** [10]

என்று பாடுகின்றார். கபாலீச்வரத்தில் தைப்பூசம் கொண்டாடிய

திறத்தினையும், அடியார்களுக்கு அமுது செய்வித்ததனையும் அவர்குறிப்பிடுகின்றார்.

சம்பந்தரின் இப்பாடல்பற்றிக் குறிப்பிடும் பேராசிரியர் தெ.பொ.மீ., ஆண்டாள், 'பாற் சோறு மூட நெய் பெய்து முழங்கை வழி வார' என்று பாடுவதனை நினைவூட்டுவதாகக் கூறுவார். தொடர்ந்து அவர், பிற்காலத்தே இது கொண்டாடப் பெறுவதனைப் பற்றிக் குறிப்பிடும்போது, இன்று பெண்கள் தைப்பூசத்திலிருந்து தொடங்கி மயிலார் என்ற நோன்பினை மயிலை எழுதிவைத்துக் கொண்டாடுகிறார்கள்" [11] என்று கூறுகின்றார். தொடக்க காலத்தில் பெண்களுக்குரிய விழாவாகவே இது இருந்தது என்பதனை இக்கூற்று புலப்படுத்தும்.

## தைப்பூசத்திருவிழாவின் நோக்கம்

தைந்நீராடுதல் எனும் அடிப்படையில் தோன்றியதாகக் கூறப்படும் இத்திருவிழா பூசம் நட்சத்திரத்தில் கொண்டாடப்படுவதால், நட்சத்திரங்களின் தலைவனாகப் புராணங்களில் கருதப்படுகின்ற பிரஹஸ்பதி எனும் தெய்வத்தை நோக்கிச் செய்யப்படும் பூசையாகக் கருதப்படுதற்குரியது என்று அறிஞர் மு. அருணாச்சலம் கருதுகிறார். [12] பிரஹஸ்பதி இந்திரனுக்குக் குரு. அறிவின் தெய்வமாகக் கருதப்படுகின்றவர். எனவே, அவரை வணங்குவது அறிவின் வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டது என்று மு.அருணாச்சலம் கூறுகிறார். ஆயின் இத்தகைய நோக்கத்திற்குரிய குறிப்புக்கள் தமிழிலக்கியங்களிலோ, கல்வெட்டுக்களிலோ காணப்படவில்லை.

முருகன் தன்னுடைய போர்ச் செயல்களில் வெற்றி பெற அன்னை பார்வதி, 'சக்திவேல்' அளித்தாள் என்றும், அவ்வாறு கொடுத்த நாள் தைப்பூசம் என்றும், அதனாலேயே இவ்விழா கொண்டாடப் படுவதாகவும் வரலாற்றறிஞர் கே.கே. பிள்ளை கூறுகிறார். [13] இதுவும் மு.அருணாச்சலம் கூறுவது போலவே புராண முறையிலான (Mythological) காரணமேயாகும். இரண்டற்கும் சான்றுகள் தரப்படவில்லை. ஆயினும் கே.கே. பிள்ளை கூறுகின்ற காரணமானது பார்வதியையும், முருகனையும் இணைப்பதாக அமைகின்றது.

தைப்பூசம் ஏற்கனவே கூறியதன் அடிப்படையில் காணும் பொழுது சிவன் கோவிலோடு தொடர்புடையதாகவே பெரிதும் இருந்து வந்துள்ளது. ஆனால், இன்று முருகன் கோவிலில் ஒரு பெரும் விழாவாக இது அமைந்துள்ளது. இவ்விரண்டும் ஒருவகையில் தொடர்புடைய செய்திகளாகக் கருதப்படுதற்குரியன. பார்வதிதேவி முருகனுக்கு வேல் கொடுத்த நாளாக இவ்விழாக் கருதப்படுவது என்பதும், இவ்விழாவன்று திருத்தலப்பயணம் வரும் அடியார்கள் வேல்கொண்டு வந்து வழிபடுதல் ஏனைய விழாக்களிலும் அதிகமாக இந்நாளிலேயே காணப் படுவதென்பதும் ஒருசேரக் கருதத்தக்கன.

## சிவனும் முருகனும்

தொடக்க காலத்திலிருந்து முருக வழிபாடு தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றிருந்ததாகவும் பின்னர், முருக வழிபாட்டில் ஒரு இருண்ட காலம் தோன்றியதாகவும் கூறுவர். "தமிழ்நாட்டில் முருக வணக்கம்பற்றிக் குறிப்பிடும் அறிஞர் வரலாற்றில் ஒரு பெரிய கால இடைவெளியைச் சுட்டிக் காட்டுவர். பல்லவர்காலத் தொடக்கத்திலிருந்து கந்தபுராணம் எழுந்த காலமாகக் கணிக்கப்படும் சோழப் பெருமன்னர் இறுதிக்காலம் வரை, முருகனைப் பற்றிய பிரஸ்தாபம் தமிழ்நாட்டில் மிகவும் அருகியே காணப்படுகிறதென்பர். குறிப்பிட்ட கால இடைவெளியில் எழுந்த தமிழ் இலக்கியங்களிலே சிவபெருமான் அல்லது திருமாலே முழுச்சிறப்பையும் பெறுகின்றனர் என்பது உண்மையே. முருகனைப் பற்றி மிகச்சில சிறு குறிப்புக்களே அக்கால இலக்கியங்களில் உள்ளன" என்று ஆ. வேலுப்பிள்ளை கூறுவார்.[14] ஆயின், முருக வணக்கம் அவ்வப்போது தலைதூக்கி வந்துள்ளது. குறிப்பாக 12-ஆம் நூற்றாண்டின் இடைவெளியில் முருக வணக்கம் செல்வாக்குப் பெற்றிருந்ததை வரகுணபாண்டியன் சாசனம் (திருச்செந்தூர் முருகன் கோவில் பற்றியது) ஒன்று காட்டுவதாக ஆ. வேலுப்பிள்ளை நினைவு கூர்கிறார்.

பெரிதும் நாட்டுப்புற மக்களால் வணங்கப்படும் முருகன், பெருந்தெய்வமாகிய சிவனோடு தொடர்புபடுத்திக் கூறப்படுவது இந்து சமய நெறியாகும். முருக வழிபாடு சைவநெறியோடு இணைந்த நெறியாக ஆகிவிட்ட நிலையில் சிவனுக்குரிய விழாக்களும், சமயச்



காவடி கொண்டுவரும் பக்தர்கள்



பாதயாத்திரை வரும் காவடிக்கூட்டம்



பூங்கரக ஆட்டக் குழுவினர்



பக்தர்கள் ஆடும் காவடியாட்டம்

சிறப்புக்களும் முருகனுக்குரியனவாகவும் கருதப்படுதல் இயல்பே. இதனடிப்படையில் தேவாரகாலத்தில் சிவனுக்குரிய விழாவாக இருந்த தைப்பூசம் திருவிடைமருதூரிலும், மயிலைக் கபாலீச்சுரத்திலும் சிறப்புடைய விழாவாகக் கருதப்பட்டுவந்த தைப்பூசம் முருகனுக்குரிய விழாவாக, அண்மைக்காலத்தில் பரவியிருக்கிறது. விழாக்கள், இவ்வாறு காலப்போக்கில், பரவுதல், இடம்பெயர்தல் ஆகிய தன்மைகளுக்கு இலக்காவது இயல்பே.

## தைப்பூசமும் பழமரபுக் கதைகளும்

தைப்பூசத் திருவிழாவோடு பழமரபுக்கதைகள் இரண்டு தொடர்புபட்டு விளங்குகின்றன.

### முதலாவது கதை

ஹம்சத்வசன் என்பவன் சோழநாட்டை ஆண்டு வந்தான். இவன் திருத்தலப்பயணம் செல்வதற்குத் தனக்குப் பதிலாக, ஓர் அந்தணனை அனுப்பி வைத்தான். பயணம் முடித்து வரும் வரை அவ்வந்தணன் குடும்பத்தைக் காப்பதாக அரசன் உறுதிகூறி அனுப்பிவைக்கிறான். சிலநாள் கழிந்தது; ஒருநாள் இரவில் அரசன் ஊர்சுற்றிப்பார்த்துக் கொண்டு வரும்பொழுது, அந்தணனின் மனைவி ஆடவன் ஒருவனுடன் படுக்கையில் இருப்பதைப் பார்க்கிறான். வெகுண்ட அரசன் வீட்டினுள் சென்று, அவனைக் கொன்றுவிடுகிறான். கொன்ற பிறகுதான் தெரிகிறது, அவன் தனக்காகத் திருத்தலப்பயணம் சென்ற அந்தணனே என்பது! அரசன் பெரிதும் துயரம் அடைகிறான். அந்தணனின் மனைவிக்கு ஆறுதல் சொல்லுகிறான். திருத்தலப்பயணம் சென்ற அந்தணனைக் கொன்ற பாவம் தன்னையே சேரும் என்று கருதுகின்றான். அந்தணனின் ஆவி இரவிலும், பகலிலும் வந்து அரசனைத் துன்புறுத்துகின்றது. இதிலிருந்து விடுபெற முயற்சி செய்த அரசன், ரிஷிகளின் ஆலோசனைப்படி பல தலங்களுக்குத் திருத்தலப்பயணம் செல்கிறான். இறுதியில் திருவிடைமருதூர் வந்து சேருகிறான். கோவிலுக்குள் உள்ள சித்த தீர்த்தத்தில் நீராடுகிறான். ஆவி அவனைவிட்டு நீங்கிவிடுகிறது. அவ்வாறு நீங்கிய நாள் தைப்பூச தினமாகும். இதனை உணர்ந்து மகிழ்ச்சியடைந்த அரசன் அக்கோவிலின் சிறப்பையும், அந்த நாளின் சிறப்பையும் கொண்டாடக்கருதி,

தைப்பூசத்திருவிழா இக்கோவிலில் சிறப்பாக நடைபெறுவதற்குப் பெருமளவில் கொடைகளை வழங்குகிறான். [15]

**இரண்டாவது கதை**

ஒரு காலத்தில், வரகுணபாண்டியன் என்னும் அரசன் மதுரையை ஆண்டு வந்தான். அவன் குதிரைச்சவாரி செய்து வரும்பொழுது அக்குதிரையின் காலில் அடிபட்டு வயது முதிர்ந்த ஓர் அந்தணன் இறந்துபோனான். அதனால் அரசன் பெரும்பாவத்திற்கு ஆளானான். இறந்து போனவனது ஆவி அரசனைப் பிடித்துக் கொண்டது. அரசன் அந்தணனைக் கொன்ற பாவத்திலிருந்தும், ஆவியின் பிடியிலிருந்தும் விடுபட விரும்பினான். பல தலங்களுக்குத் திருத்தலப்பயணம் சென்றான்; பலன் ஒன்றும் ஏற்படவில்லை. ஒருநாள் இரவில், மதுரை சுந்தரேசுவரர் அரசனின் கனவில் தோன்றி திருவிடைமருதூருக்குச் சென்று வழிபட்டால், பாவத்திலிருந்தும் ஆவியின் கொடுமையிலிருந்தும் விடுபடலாம் என்று கூறினார். திருவிடைமருதூர், சோழனின் ஆதிக்கத்தின்கீழ் இருந்ததால், பாண்டியன் அங்குச்சென்று வழிபட விரும்பவில்லை. இப்பிரச்சனையைத் தீர்க்கச் சுந்தரேசுவரர் அரசனுக்கு உதவினார். "சோழ மன்னன் பாண்டியநாட்டின் மீது படையெடுத்து வருவான். வந்து தோற்றுப்போவான். தோற்றவனைத் துரத்திக்கொண்டு சோழநாட்டிற்குச் செல்லும்பொழுது திருவிடைமருதூரை வழிபட்டு வரலாம்" என்று சுந்தரேசுவரர் மன்னனிடம் கூறுகிறார். கனவில் கூறியபடி அனைத்தும் நடந்தேறின. பாண்டிய மன்னன் திருவிடை மருதூர்க் கோவிலுக்குள் சென்றான், அது தைப்பூசத் தினம். அரசனைப் பிடித்திருந்த அந்தணனின் ஆவி நீங்கியது. பாவத்திலிருந்தும், ஆவியிலிருந்தும் விடுபட்ட மன்னன் திருவிடைமருதூரில் நடைபெறும் தைப்பூச விழாவிற்குக் கொடைகளை வழங்கினான். [16]

**இரு கதைகளின் அறக்கருத்து**

"பழமரபுக் கதைகள் மனிதனுக்கு வழிகாட்டுவன; நம்பிக்கைகளை வெளிக்காட்டுவன; அறக் கோட்பாடுகளை நிலை நிறுத்துவன. பழமரபுக்கதை என்பது வெற்றுக்கதையல்ல, சடங்குகளைப் பின்பற்ற வழிகாட்டியாய் அமைவன. மனித நாகரிகத்தில் அது மிக முக்கிய

உறுப்பாகும்" [17] என்று பி. மாலினோவ்ஸ்கி குறிப்பிடுகின்றார். பழமரபுக் கதையின் தலையாய பணி, சடங்குகளுக்கும், மற்றும் மனிதனின் எல்லாவிதமான நடவடிக்கைகளுக்கும், மனிதனுக்கு முன் மாதிரியாக (model) அமைவது[18] என்பர். இக்கூற்றிற்கு ஏற்பத் தைப்பூசத் திருவிழாவின் பொழுது திருத்தலப்பயணம் மேற்கொள்வது பற்றியும், தீர்த்தத்தில் நீராடுவது பற்றியும் இவ்விரு பழமரபுக்கதைகளும் குறிப்பிடுகின்றன.

தைப்பூசத் திருவிழாவின் பொழுது திருத்தலப்பயணம் மேற்கொள்ள வேண்டும் என்பதாகவும், திருத்தலப்பயணம் செல்வதால் பாவமும், ஆவிகளின் கொடுமையும் நீங்கும் என்பதாகவும் இவ்விரு கதைகளின் அடிக்கருத்துகள் அமைகின்றன. மேலும், இக்கதைகள் திருவிடை மருதூர் எனும் தலத்தின் பெருமையைக் கூறுகிறது.

## பழனியும் தைப்பூசமும்

இன்று பழனியில் தைப்பூசம் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. தைப்பூசத் திருவிழாவின் கொடியேற்று விழா, ஊர்க்கோவில் என்று அழைக்கப்படும் அருள்மிகு பெரிய நாய்கி அம்மன் கோவிலில் தொடங்குகின்றது. கொடியேற்றம் தொடங்கியதும், அடியார்கள் விரதம் இருந்து திருத்தலப் பயணத்தைத் தொடங்கி விடுகின்றனர். சில குழுக்கள் தை மாதம் தொடங்கிய உடனேயே பழனிக்குப் பாத யாத்திரையாக வந்து பழனி முருகனை வழிபடுகின்றனர்.

தைப்பூசத் திருவிழாவின் போது பக்தர்கள் கூட்டம் கூட்டமாக காவடி எடுத்துவருகின்றனர். காவடிக் கூட்டத்தினரும், அடியார்களும் அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலை வழிபட்ட பிறகு மலைக்கோவிலுக்குச் சென்று பழனியாண்டவரை வழிபடுகின்றனர். இவ்விழாவின் போது அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் பக்தர்கள் ஆடும் காவடியாட்டத்தைக் காணலாம்.

பழனி முருகன் கோவில் தைப்பூசத் திருவிழாவின்போது அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலிலும், அருள்மிகு திரு ஆவினன் குடிக் கோவிலிலும், மலைக்கோவிலிலும் திரளான பக்தர்கள் வழிபடுவதைக் காணலாம்.

## பழனி முருகன் கோவிலில் கொண்டாடும்முறை

### முதல் திருநாள்

முதல் திருநாளன்று அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் கொடியேற்றுவிழா நடைபெறுகின்றது. இது தொடங்குவதற்கு முன், முதலில் கொடிபூசை நடைபெறுகின்றது. அதன்போது, கொடியை முதலில் ரதவீதிகளில் ஊர்வலமாகக் கொண்டு வருகின்றனர். யானை ஊர்வலத்தை அலங்கரித்துக் கொண்டு வருகின்றது. ரதவீதிகளில் உலா வந்த பிறகு கொடிக் கம்பத்தில் பச்சிலைத்தோரணம் கட்டி கொடிபூசை செய்கின்றனர். கோவில் குருக்கள் கொடிபூசையின் பொழுது வடமொழி மந்திரங்களை ஓதுகின்றார். தேவார ஓதுவார்கள் தேவாரப் பாடல்களை இனிய ராகத்துடன் பாடுகின்றனர். ' மந்திரமாவது நீறு' என்ற ஞானசம்பந்தர் பாடலை ஓதுவார்கள் தொடக்கத்தில் பாடுகின்றனர். கொடியேற்றுவிழாவின் பொழுது வடமொழி மந்திரங்களும், தேவாரப் பாடல்களும் கலந்து அமைவதும்; தமிழ் வழிபாட்டு முறையும், வடமொழியாக்க முறையும் கொடியேற்றுவிழாவில் கலந்திருப்பதும் குறிப்பிடத்தக்கன. தலைமைக் குருக்கள் கொடியினை ஏற்றுகின்றார். கொடியேற்றி முடிந்ததும் கொடிமரத்திற்குப் பூசை செய்து அடியார்களுக்குப் பிரசாதம் வழங்கப்படுகின்றது.

கொடியேற்றுவிழா மண்டபப்படியினைப் பழனியில் உள்ள செங்குந்த முதலியார் சமூகத்தினர் ஆண்டுதோறும் நடத்தி வருகின்றனர். இவர்கள் பெருமளவில் கொடியேற்றுவிழாவில் கலந்து கொள்கின்றனர்.

### இரண்டாம் திருநாள்

இரண்டாம் திருநாளன்று அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவில் உற்சவ மூர்த்தியாகிய அருள்மிகு முத்துக்குமாரசாமி, வள்ளி, தெய்வயானையுடன் வெள்ளி ஆட்டுக்கிடாய் வாகனத்தில் ரதவீதிகளில் உலா வருகின்றார். வழியில் திரளான மக்கள், தேங்காய் பழம் உடைத்து வணங்குகின்றனர். திருக்கோவில் மேள வாத்தியத்துடன் இவ்வுலா நிகழ்ச்சி அமைகின்றது. இரண்டாம் நாள் மண்டபப்படியினை, பொள்ளாச்சியைச் சார்ந்த ஆறுமுகக்கவுண்டர் வழியினர் ஆண்டு தோறும் நடத்தி வருகின்றனர். இம்மண்டபப்படியின் பொழுது, பழனி,

பொள்ளாச்சி ஆகிய ஊர்களைச் சார்ந்த கொங்கு வேளாளக்கவுண்டர்கள் பெருமளவில் கலந்து கொள்கின்றனர். மண்டபப்படி நிகழ்ச்சியின் பொழுது உற்சவமூர்த்திக்குச் சிறப்பு அபிடேகம், அர்ச்சனை, அலங்காரம் செய்வது குறிப்பிடத்தக்க அம்சம் ஆகும்.

## மூன்றாம் திருநாள்

மூன்றாம் திருநாளின் பொழுது உற்சவராகிய அருள்மிகு முத்துக்குமாரசாமி, வள்ளி தெய்வயானையுடன் நகரின் மையத்திலுள்ள அருள்மிகு பட்டத்து விநாயகர் கோவிலுக்கு எழுந்தருளுகின்றார். மூன்றாம் நாள் மண்டபப்படியினைப் பழனியிலும், சுற்றுக்கிராமங்களிலும் வாழுகின்ற 24 மனை தெலுங்குச் செட்டியார் சமூகத்தினர் ஒன்றாகக்கூடி நடத்துகின்றனர். இம்மண்டபப்படியின்பொழுது இவர்கள் பெருமளவில் கலந்து கொள்கின்றனர். மூன்றாம் திருநாளன்று அருள்மிகு முத்துக்குமாரசாமி, வள்ளி தெய்வானையுடன் வெள்ளிக்காமதேனு வாகனத்தில் ரதவீதிகளில் உலா வருகின்றார்.

## நான்காம் திருநாள்

நான்காம் திருநாளன்று உற்சவராகிய அருள்மிகு முத்துக்குமாரசாமி, வள்ளி தெய்வானையுடன் வெள்ளிக்காமதேனு வாகனத்தில் ரதவீதிகளில் உலா வருகின்றார். நான்காம் நாள் மண்டபப்படியினை சி.வி. வெள்ளைச்சாமிக் கவுண்டர் நடத்துகின்றார். அன்று உற்சவர் உடையார் மடத்திற்கு எழுந்தருளுகின்றார். அங்கு உற்சவமூர்த்திக்குச் சிறப்பு அபிடேகம், அலங்காரம் செய்யப்பெறுகின்றது. உற்சவமூர்த்தி விழாக் காலங்களில் மடங்களுக்குச் செல்வது கோவிலுக்கும், சமுதாயத்திற்கும் உள்ள தொடர்பினைக் காட்டுகிறது.

## ஐந்தாம் திருநாள்

ஐந்தாம் திருநாளன்று, உற்சவமூர்த்தி வெள்ளியானை வாகனத்தில் உலா வருகின்றார். மண்டபப்படியினை 12-6 செட்டியார் சமூகத்தைச் சார்ந்தவர்கள் நடத்துகின்றனர்.

திருக்கல்யாணம், தேர்த்திருவிழா முதலான விழாக்களுக்குப் பழனியாண்டவரிடம் அழைப்பு, அனுமதி, அனுக்கிரகம் பெற்றுவருவது குறிப்பிடத் தக்கதாகும். இது தொன்றுதொட்டு வரும் நடைமுறையாகவும்,

முக்கியச் சம்பிரதாயமாகவும் இருந்து வருகிறது.[19] இதற்கென இந்நாளில், முதலில் யாகசாலையில் இருந்து ரட்சை எடுத்துச்சென்று உச்சிக்காலப் பூசையில் பழனியாண்டவருக்குச் சிறப்புப் பூசைகள் செய்து, ரட்சை சார்த்துவர். இவ்வாறு அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் நடைபெறும் திருக்கல்யாணம், போன்ற நிகழ்ச்சிகளுக்குப் பழனியாண்டவரிடம் அனுமதி வேண்டுதல் எனும் செயல் இத்தலத்தில் பழனியாண்டவர்தான் பிரதானமூர்த்தி அல்லது தலைமைத் தெய்வம் என்பதைக் குறிப்பாக உணர்த்துகிறது எனலாம். மேலும், அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலுக்கும், மலைக்கோவிலுக்கும் விழாக்காலத்திலுள்ள தொடர்பினையும் மேற்கூறிய நிகழ்ச்சி காட்டுகின்றது.

## ஆறாம் திருநாள்

ஆறாம் திருநாள் மிகவும் குறிப்பிடத்தக்கது. அன்று காலையில் அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் முருகன் - தெய்வானை திருமணம் நடைபெறுகின்றது. இதன்பொழுது உற்சவமூர்த்திக்குச் சிறப்பு அபிடேகம், தீபாராதனை, அலங்காரம் செய்யப்படுகின்றது. இவற்றினைத் திருக்கோவில் தலைமைக் குருக்களும் அர்ச்சகர்களும் முன்னின்று நடத்துகின்றனர். பொற்சுண்ணம் இடித்தல் போன்ற கிரியைகளை விரிவாகச் செய்கிறார்கள்.

இந்த ஆறாம் நாளில் காலை, மாலை இரு வேளைகளிலும் சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. காலையில் முருகனுக்கும் தெய்வானைக்கும் திருக்கல்யாணம் நடைபெறுகிறது. மாலையில் முருகனுக்கும் வள்ளிக்கும் திருக்கல்யாணம் நடைபெறுகிறது. காலையில் நடைபெற்ற சடங்குகளைப் போலவே, மாலை திருக்கல்யாணத்திலும் செய்கின்றனர். இந்நிகழ்ச்சியிலும் கோவில் தலைமைக் குருக்கள்தான் இறைவன் - இறைவி திருமணத்தை முன்னின்று நடத்துகின்றார்.

### திருக்கல்யாணம்

இறைவன் - இறைவி திருக்கல்யாணம் திருக்கோவில்களில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றது. திருக்கல்யாணத் திருவிழா குறியீட்டுப் பொருளைத் தரும் வகையில் அமைகின்றது

என்று டேவிட் டீன் சுல்மேன் குறிப்பிடுகின்றார். இறைவன் - இறைவி திருக்கல்யாண விழா மனிதனுக்கு ஒரு முன்மாதிரியாக (Model அமைகின்றது என்கின்றார்.[20]

மனிதர்களுடைய திருமணத்தில் நாம் கலந்து கொண்டு மணமக்களைப் பல்லாண்டு வாழ்க என வாழ்த்துகின்றோம். இறைவன் - இறைவி திருக்கல்யாணத்தில் நாம் கலந்து கொள்வதால் இறைவன் - இறைவி நாம் பல ஆண்டுகள் வாழ வாழ்த்தி, ஆசீர்வாதம் அளிக்கின்றனர் என்று கோவில் குருக்கள் பேட்டியின் போது தெரிவித்தார்.[21] தைப்பூசத் திருவிழாவின் போது, அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் நடைபெறும் முருகன் - வள்ளி திருக்கல்யாணத்தின் போது திரளான அடியார்கள் கலந்து கொள்கின்றனர். திருக்கல்யாண நிகழ்வு கண்கொள்ளாக் காட்சியாக; அருள் ததும்பும் நிகழ்வாக அமைவது குறிப்பிடத்தக்கதாகும்.

இறைவன் போக வடிவில் வாழாமற் போனால் உலகத்து உயிர்கள் அனைத்தும் போகியாய் வாழ இயலாது. ஆதலின், இறைவன் திருக்கல்யாணம் புரிவது நம் பொருட்டேயாகும் என்று திருக்கல்யாண விழாவிற்குத் தத்துவ விளக்கம் தருகின்றார் கே. ஆறுமுக நாவலர்.[22]

***வெள்ளித்தேர்***

ஆறாம் திருநாளன்று, திருக்கல்யாண நிகழ்ச்சிகள் முடிந்தபிறகு, இரவின் முற்பகுதியில் அருள்மிகு முத்துக்குமாரசாமி வள்ளி, தெய்வானையுடன் வெள்ளித்தேரில் ரதவீதிகளில் உலா வருகின்றார். வெள்ளித்தேர் புறப்படுவதற்கு முன்னதாக, கிராமப் புறங்களிலிருந்து வரும் நாட்டுப்புற இசைக்கலைஞர்களின் இசை நடனமும், காவடியாட்டமும் இடம்பெறுகின்றன.

கொங்கு நாட்டுக் கிராம மக்கள் வெள்ளித் தேர்த்திருவிழாவின் போது முருகப் பெருமானை வழிபடவேண்டும் என்று கூட்டம் கூட்டமாகக் காவடி எடுத்து வருகின்றனர். வெள்ளித் தேர் புறப்படுவதற்கு 1 மணி நேரத்திற்கு முன், அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலுக்கு முன் 'திடும்' வாசிக்கும் நாட்டுப்புற இசைக்கலைஞர்கள் குழுக்களாகப் பிரிந்து 'திடும்' எனும் தோல் கருவியை முழக்குகின்றனர். ஒவ்வொரு குழுவிலும் 60க்கும் மேற்பட்ட இசைக்கலைஞர்கள் வட்டவடிவமாகச் சூழ்ந்து திடும் இசைக் கருவியை முழக்குகின்றனர்.

காவடி ஆட்டம் ஆடத் தெரிந்த பக்தர்கள் காவடி ஆட்டம் ஆடுகின்றனர். திரளான பக்தர்கள் காவடி ஆட்டத்தைக் கண்டு களிக்கின்றனர். வெள்ளித்தேரில், உலாவரும் அருள்மிகு முத்துக்குமாரசாமி வள்ளி, தெய்வானையைக் கண்டு வணங்கிய பிறகு, காவடிக் கூட்டத்தினர் மலைக் கோவிலுக்குப் புறப்பட்டுச் செல்கின்றனர். வெள்ளித் தேர்த்திருவிழாவின் போது 'திடும்' முழக்கி ஆட்டம் ஆடுவதையும், காவடி ஆட்டம் ஆடுவதையும், வழக்கமாகக் கொண்டிருப்பதாக அடியார்கள் பலர், பேட்டியின் போது ஆய்வாளரிடம் தெரிவித்தனர்.

***"பச்சைத் தேரோடப் பவளத்தேர் நின்றசைய***
***சித்திரைத் தேர் ஓடிவரும் தென்பழனி வேலவனே!"*** [23]

என்று ஒரு நாட்டுப்புறப்பாடல் பழனித்தலத்தில் நடைபெற்ற தேர்த்திருவிழா பற்றிக் கூறுகின்றது.

## ஏழாம் திருநாள் - *தீர்த்தவாரி*

ஏழாம் திருநாளன்று உற்சவமூர்த்தி பரிவார தெய்வங்களுடன் வைகறையில் சண்முகநதிக்கு தீர்த்தமாட எழுந்தருளுகின்றார். தீர்த்தம் ஆடிய பிறகு பக்தர்களுக்குத் தீர்த்தம் வழங்குகின்றார்.

பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏக உருவாய்க்கிடக்கும் இறையின்ப வாரியில் ஆன்மாக்கள் முற்றும் ஆழ்ந்து ஆனந்திப்பதைக் தீர்த்தவாரி குறிக்கின்றது. இதனை மகாருத்ரபாத தீர்த்தம் என்று கூறுவர்.[24] தீர்த்தவாரியின் போது அருள்மிகு முத்துக்குமாரசாமி பக்தர்களுடன் சேர்ந்து, சண்முகநதியில் தீர்த்தம் ஆடுவது இறைவன் பக்தர்களைத் தனக்குச் சமமாகக் கருதுவதைக் காட்டுகின்றது என்று கோவில் குருக்கள் பேட்டியின் போது தெரிவித்தார்.[25]

சண்முகநதிக் கரையிலுள்ள மண்டபத்தில் கலையம்புத்தூர், அக்கிரஹாரம், தாமரைக்குளம் ஆகிய கிராமங்களைச் சாந்த மக்கள் மண்டபப்படி செய்கின்றனர். பழனி நகரைச் சுற்றியுள்ள கிராம மக்கள் பழனி முருகன் கோவில் தைப்பூசத்திரு விழாவில் கொண்டுள்ள பங்களிப்பினை இது காட்டுகின்றது.

ஏழாம் திருநாளன்று மாலையில் தேர்த்திருவிழா நடைபெறு கின்றது. இதற்குத் "தைத்தேர்" என்று பெயர். பல ஆயிரக்கணக்கான

மக்கள் தேர் இழுத்தலில் பங்கு கொள்கிறார்கள். இந்நாளில் இங்குத் தேர்த்திருவிழா போலவே, மலைக்கோவிலிலும் தேர்த்திருவிழா நடைபெறுவது குறிப்பிடத்தக்கது. அன்று இரவு மலைமீது அருள்மிகு சின்னக்குமரர் தங்கரதத்தில் உலா வருகின்றார். இதன் பொழுதும் ஆயிரக்கணக்கான அடியார்கள் கலந்து கொள்கின்றனர்.

### கல்வெட்டும் தேரும்

பழனிக் கோவிலில் மிக நீண்ட காலமாகத் தேர்த்திருவிழா நடந்து வருவதாகத் தெரிகிறது. விஜயநகர மன்னர்கள் காலத்தில், பிற்காலச் சோழ மரபைச் சேர்ந்த ஒருவன், கொண்டம அரசய்யரின் நன்மைக்காக, பழனி முருகன் கோவிலுக்குத் தேர் ஒன்றினைத் தானமாகக் கொடுத்திருக்கிறான் என்று பழனிக் கோவில் கல்வெட்டுக் குறிப்பிடுகின்றது.[26] விஜயநகர மன்னர் காலத்தில் பழனிக் கோவிலில் தேர்த்திருவிழா நடைபெற்றது என்பதை இக்கல்வெட்டு உணர்த்துகின்றது.

## எட்டாம் திருநாள்

எட்டாம் திருநாளன்று உற்சவமூர்த்தி தந்தப் பல்லக்கில் உலா வருகிறார். தேர்த்திருவிழா முடிந்துவிட்டாலும் அடியார்கள் பலர் இந்த உலாவிலும் திரளாகக் கலந்து கொள்வர்.

## ஒன்பதாம் திருநாள்

காலையில் உற்சவமூர்த்தி சப்பரத்தில் உலா வருகின்றார். மாலையில் தங்கக்குதிரை வாகனத்திலும், தங்கமயில் வாகனத்திலும் உலா வருகின்றார்.

## பத்தாம் திருநாள்

தைப்பூசத் திருவிழாவின் இறுதி நாளாகிய பத்தாம் திருநாளன்று இரவில் 'தெப்பத்தேர்' நடைபெறுகின்றது. அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலுக்கு அருகிலுள்ள தெப்பக்குளத்தில் இத்திருவிழா நடைபெறுகிறது. தெப்பக்குளத்தில் நடுவில் உள்ள மண்டபத்தில், உற்சவமூர்த்திக்கு அபிடேகம் செய்து பூசை செய்கின்றனர். அருள்மிகு முத்துக்குமாரசாமி, வள்ளி, தெய்வானையுடன் தெப்பத்தேரில் மூன்று முறை உலா வருகின்றார். அதன்பின் திருக்கோவில் வாத்தியக்குழுவினர்

இசைபாடி உற்சவமூர்த்தியைக் கோயிலுக்கு அழைத்துச் செல்கின்றனர். ஆண்களும், பெண்களும் திரளாகக்கூடி இருக்கிறார்கள். உள்ளூர் மக்களே இதில் பெருமளவு கலந்துகொள்கிறார்கள்.

தெப்பத் திருவிழாவைப் பழனி நகரிலுள்ள வைசியர் சமூகத்தினர் ஆண்டுதோறும் நடத்தி வருகின்றனர். தெப்பத் திருவிழாவினையொட்டி அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலின் முன் வாணவேடிக்கை நடைபெறும்.

## மண்டபப்படி நிகழ்ச்சிகளில் பங்கு கொள்வோர்

திருவிழாக்களில் 'மண்டபப்படி' என்பது குறிப்பிடத்தக்க ஓர் அம்சமாகும். கோவிலோடும் விழாக்களோடும் பல இனத்தவர்கள் பல ஊரினர் - தொடர்புபட்டிருப்பதை இது புலப்படுத்தும்.

பழனி நகரில் வாழும் கொங்கு வேளாளக்கவுண்டர்கள், 24 மனைத் தெலுங்குச் செட்டியார்கள். 12-6 செட்டியார்கள், ஆயிர வைசியர்கள், செங்குந்த முதலியார்கள், பழனி மற்றும் விருதுநகர், திண்டுக்கல் பகுதியிலுள்ள நாடார்கள், ஆகிய சாதி மக்கள், சாதிவாரியாக மண்டபப்படி நடத்துவது குறிப்பிடத்தக்கதாகும். சமூக அமைப்பில் நிலவி வரும் சாதி அமைப்பு முறைக்கும் கோவில் விழாக்களுக்கும் உள்ள தொடர்பினை இம்மண்டபப்படி நிகழ்ச்சிகள் காட்டுகின்றன. பல சமூகத்தைச் சார்ந்தவர்களும் பழனி முருகன் கோவில் திருவிழாவில் கொண்டுள்ள பங்களிப்பை இது காட்டுகின்றது.

மேலும் கலையம்புத்தூர், அக்ரஹாரம், தாமரைக்குளம் ஆகிய சுற்றுக் கிராமங்களின் மக்கள் கூட்டாகச் சேர்ந்து மண்டபப்படி நடத்துவதும் குறிப்பிடத்தக்கதாகும். பழனி முருகன் கோவில் கிராமீய சமுதாய அமைப்போடு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கின்றது என்பதற்கு இம்மண்டபப்படி நிகழ்ச்சி காட்டாக அமைகின்றது.

## திருமணமும் விழாவும்

தைப்பூசத் திருவிழாவில் அடிப்படையாக விளங்கும் நிகழ்ச்சி திருமண நிகழ்ச்சியாகும். பொதுவாகவே ஒரு கோவிலுக்குப் பிரம்மோற்சவமாக கொண்டாடப்பெறுகின்ற விழாக்கள், திருமணத்தோடு தொடர்புடையனவாக விளங்குதல் மரபு. அவ்வடிப்படையில் தைப்பூசம், பங்குனி உத்திரம் ஆகிய விழாக்களும் அமைந்துள்ளன.

தைந்நீராடுதல், மகளிர் நோன்புகளில் ஒன்றாகப் பழங்காலத்தில் விளங்கிய ஒன்று. நல்ல கணவர் கிடைப்பதற்குரிய ஒரு நோன்பாக இது அமைந்தது என்று கருதுதற்குரியது. இவ்வாறு பேராசிரியர் வையாப்புரிப்பிள்ளை கருதுகிறார். "கன்னியர் விளையாட்டின்பத்தின் பொருட்டும், தமது காதலனைக் கணவனாகப் பெறுதற்பொருட்டும், தைந்நீராடல் புரிவர்" என்று அவர் கூறுகின்றார்.[27]

இத்தைந்நீராடுதலே பின்னர் மார்கழி நோன்பாக மாறிற்று என்பார் பேராசிரியர் தெ.பொ.மீ. "சங்க காலத்தில் தைந்நீராடலாக இருந்தது ஆண்டாள் காலத்தில் மார்கழி நீராடலாக மாறியது" என்பது அவர் கூற்று.[28] இதுவும் மகளிர் நோற்கின்ற நோன்பே. மகளிர் இவ்வாறு நோன்பு நோற்பது நல்ல கணவன்மார் கிடைக்க வேண்டும் என்பதனையும், இல்லற வாழ்வு சிறக்க அமைய வேண்டும் என்பதனையும் நோக்கமாகக் கொண்டது. மார்கழி நோன்பு பற்றிக் கூறும் திருப்பாவை, திருவெம்பாவைப் பாடலகள் இந்த நோக்கத்தையே புலப்படுத்துகின்றன.

எவ்வாறாயினும், தை நோன்பு திருமணத்தோடு தொடர்புடையதாகக் கருதப்படுதற்குரியது. இதனடிப்படையிலேயே தைப்பூசத் திருவிழா, இறைவன்-இறைவி திருமணத்தைக் காணும் விழாவாக அமைகிற தெனலாம். இது முருகனின் சார்புடைய கோவிலாகிய அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் மகோற்சவமாக (பெருவிழாவாக) நடைபெறுகிறது. திருமணவிழா என்பதனாலேயே மலைமேல் ஆண்டிக் கோலத்தில் இருக்கும் கோவிலில் இது கொண்டாடப்பெறாமல், வள்ளி தெய்வயானையுடன் முத்துக்குமரனாக முருகன் கொலு வீற்றிருக்கும் அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் கொண்டாடப்படுகின்றது எனலாம்.

இனி, தைப்பூசத் திருவிழாவைப்போல, பங்குனி உத்திரமும் திருமண நிகழ்ச்சியைச் சிறப்பாகக் கொண்டு இருக்கிறது. இவ்விழாவின் போது நடைபெறும் திருமணம், சார்புடைக் கோவிலாகிய அடிவாரத்திலுள்ள திரு ஆவினன்குடியில் நடைபெறுகிறது. சிவன் கோவில்களில் பொதுவாகப் பங்குனி உத்திரத்தன்று திருமணங்கள் நடைபெறுவது மரபு. அதற்கேற்ப இங்கும் அருள்மிகு

முத்துக்குமாரசாமிக்கும் வள்ளிக்கும், பங்குனி உத்திரவிழாவன்று திருமணம் நடைபெறுகிறது. திரு ஆவினன்குடியில் நடைபெறும் விழா, அக்கோவிலின் மகோற்சவம் (பெருவிழா) என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது.

இனி, ஐப்பசி மாதம் நடைபெறக்கூடிய கந்தர்சஷ்டி விழாவின் இறுதியிலும் அருள்மிகு சண்முகர் - வள்ளி திருமணம் நடைபெறுகிறது. சூரசம்ஹாரத்தின் இறுதியில் வெற்றி வாகை சூடிய முருகன், திருமண நாயகனாகக் காட்சி தருவது முருகன் கோவில்களில் காணப்படுகிற ஒரு பொதுவான நிகழ்ச்சி. அதற்கேற்பவே, இங்கும் திருமணவிழா இடம்பெறுகிறது. இது மலைமேல் உள்ள அருள்மிகு சண்முகருக்கும் வள்ளிக்கும் நடைபெறும் விழாவாக அமைகின்றது.

இவ்வாறு, பழனியில் முருகனுக்கு நடைபெறும் பெருவிழாக்கள் திருமண நிகழ்ச்சியை மையமாகக் கொண்டிருக்கின்றன. 'விழாக்களும் திருமணமும்' ஒன்றெனக் கலந்திருப்பது சமூக-சமய-பண்பாட்டு ஒருமிப்பை உணர்த்தும்.

கோவில்களில் நடக்கும் திருமணத்தை மறுமணம் என்று கூறுகின்றார் சுல்மேன்.[29] இறைவனுக்கும் இறைவிக்கும் ஏற்கனவே கயிலாயத்தில் திருமணம் நடைபெற்றுவிட்டது என்றும் அச்செயலினையே சிவனும் பார்வதியும் ஏனைய தலங்களில் திரும்பச் செய்கின்றனர் என்றும் கூறுகிற அவர், அதனால், ஆண்டுதோறும் இறைவன் - இறைவியை மணம் செய்து கொள்ளும் திருக்கல்யாண விழா ஒரு மறுமணவிழாவேயாகும் என்று கூறுவார்.

## திருமணவிழாவின் தத்துவம்

இறைவன் - இறைவி திருமணம் இன்பத்தின் - மோகத்தின் - தத்துவத்தையும் அவசியத்தையும் உணர்த்துவதாக அமைகிறது. சிவனும் சக்தியுமாய் இருந்தவர்கள் சிவசக்தியாய் ஒன்று கலந்து காட்சிதருவது இன்பத்தின் தத்துவம் என நூல்கள் கூறுகின்றன.

***"அன்பினர்க் கெளிவந்துள்ள ஆதியம் பரமன்மாது***
***தன்புடையாகச் சீயத் தவிசின் வீற்றிருத்தலோடும்***

**துன்பகன்று இருபாலாகித் துவன்றிய உயிர்களெல்லாம்**
**இன்பொடு போகமாற்றி இனிதமர்வுற்ற வன்றே"** [30]

என்று கந்தபுராணம் குறிப்பிடுகின்றது. உலகில் உள்ள ஆணோ, பெண்ணோ யாவராயினும் தவமாற்றுவராயின் இறைவன் அவர்கள் முன்தோன்றி காட்சி கொடுத்து அருள்புரிவான் என்பதே இத்திருக்கல்யாணவிழாவின் தத்துவமாகும். வாழ்க்கையில் பயன்பெற்று வாழ, இறைவனை இறைவியுடன் சேர்த்து வழிபட வேண்டும். காலை முதல் இரவு வரை இறைவனையும், இறைவியையும் தனியே வணங்கி, இறுதியில் அவர்களைச் சேர்த்துவைத்துப் பூசித்துப் பள்ளியறையில் வழிபாடாற்றுகின்றனர். இவ்வழிபாடு, அருளையன்றிச் சிவமும்; சிவத்தை அன்றி அருளும் இல்லை என்பதை பள்ளியறையில் உணர்த்துகின்றது.

**"பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகையிருந்த**
**கோலத்தை வழிபடின்**
**மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்**
**எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலை"** [31]

என்று பாடுவர்.

ஏனைய சிவத் தலங்களில் சிவன்-பார்வதி திருமணம் நடைபெறுவது போலவே, முருகன் - வள்ளி, தெய்வானை திருமண நிகழ்ச்சிகள் பழனி முருகன் கோவில் பிரம்மோற்சவங்களில் நடைபெறுகின்றன. இத்திருக்கல்யாண நிகழ்ச்சிகள் மிகப்பெரிய சடங்காக ஆண்டுதோறும் பழனித்தலத்தில் நிகழ்த்தப்பெறுகின்றன.

## தொகுப்புரை

தைத்திருவிழா நெடுங்கலமாகக் கொண்டாடப்பட்டுவரும் விழாவாகும். நெடுங்காலத்திற்கு முன்னால் திருவிடைமருதூரில் இது சிறப்பான இடத்தைப்பெற்று வந்துள்ளது.

சிவனுக்குரிய விழாவாக அமைந்திருந்த இவ்விழா இன்று பழனியில் முருகனுக்குரிய விழாவாகச் சிறப்பிடம் பெற்றுத்திகழ்கிறது.

திருவிழா தொடங்குவதும் முடிவதும் அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலிலேதான் என்றாலும், முருகனே விழா நாயகராக அமைகின்றார்.

விழா நடைபெறும் பத்து நாட்களிலும் மண்டபப்படிகள் அமைக்கப்படுகின்றன. பல இனத்தவர்களும், பல பகுதியினரும் விழாக்களின் பல நிகழ்ச்சிகளிலும் திரளாகக் கலந்து கொள்கின்றனர்.

தைத்திருநாளன்று நடைபெறும் மையமான நிகழ்ச்சி, முருகனுடைய திருக்கல்யாணமாகும்.

## குறிப்புக்கள்

1. பக்தவத்சலபாரதி, தமிழர் மானிடவியல். பக். 260-261.
2. திருமுருக கிருபானந்தவாரியார், காசியாத்திரை, ப.10.
3. தெ.பொ.மீனாட்சிசுந்தரன், சயாமில் திருவெம்பாவை திருப்பாவை, ப. 45.
4. அப்பர் தேவாரம், திருமுறை(ரு), திருவிடைமருதூர் பதிகம், பா. எண்.1.
5. P.V. Jagadisa Ayyar, South Indian Festivities, p. 31.
6. நற்றிணை, பா.எண். 22.
7. எஸ். வையாபுரிப்பிள்ளை, இலக்கிய விளக்கம்., ப. 88.
8. மேலது, ப. 89.
9. எஸ். நிர்மலாதேவி, கல்வெட்டில் திருவிழாக்கள், தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு, (ப.ஆ.) இரா. நாகசாமி, பக். 233 -234.
10. திருஞானசம்பந்தர் தேவாரம், திருமயிலாப்பூர் பதிகம், பா.எண். 5.
11. மாகபுராண அம்மானை, தெ.பொ. மீனாட்சிசுந்தரன், முன்னுரை, ப. 23.
12. M. Arunachalam, Festivals of Tamil Nadu. p. 227.
13. K.K. Pillay, The Sucindram Temple, p.233.
14. ஆ. வேலுப்பிள்ளை, தமிழர் சமய வரலாறு, ப. 166.
15. P.V. Jagadisa Ayyar, op.cit., pp. 31-32.
16. Ibid., p. 33.
17. B. Malinowski (quoted by ) Mircea Eliade, Myth and Reality, p. 20.
18. Ibid., p. 8.
19. சே. தண்டபாணி தவராஜ பண்டிதர் (இ.ஆ.), பழனியாண்டவர் விழா தத்துவ விபரம், (கையெழுத்துப்பிரதி). ப. 81.

20. David Dean -Shulman, Tamil Temple Myths, p. 138.
21. சுஜன் குருக்கள், வயது 40, பேட்டி நாள், 4-02-04
22. கே. ஆறுமுகநாவலர், இந்துமத இணைப்பு விளக்கம் ப. 146.
23. செ இராசு (ப.ஆ.) கொடுமணல் இலக்கியங்கள், ப. 142.
24. கே. ஆறுமுக நாவலர், மு.நூல். ப. 145.
25. சுஜன் குருக்கள், வயது 40, பேட்டி நாள், 4-02-04.
26. A.R.No. 612 of 1983. இக்கல்வெட்டிற்கு விளக்கம் கூறியவர் முனைவர். செ. இராசு, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், நாள். 16-04-84.
27. எஸ். வையாபுரிப்பிள்ளை, மு.நூ., ப. 88.
28. தெ.பொ.மீனாட்சிசுந்தரன், மு.நூ., ப. 46.
29. David Dean Shulman, op.cit. p. 142.
30. கந்தபுராணம், திருக்கல்யாணப் படலம், பா.எண். 36.
31. ஆறுமுகநாவலர், மு.நூல். பக். 153-154.

